4-3




# சத்திய ஞானசபை

சரவணனந்தா






இராமலிங்கர் பணி மன்றம்

6, போயஸ் தோட்டம், சென்னை-600 086.



திருவருட்பிரகாச வள்ளலார்
(30-1-1874ல் முத்தேக சித்தி பெற்றவர்)

# அணிந்துரை

## திரு நா. மகாலிங்கம்
(இராமலிங்கர் பணி மன்றத் தலைவர்)

இரக்கமே சன்மார்க்கத்துக்கு வழி காட்டும். சன்மார்க்கத்தில் நம்மை நடக்கச் செய்யும்.

சன்மார்க்க நெறி என்பது எல்லாருக்கும் பொதுவானது. அதற்கு சாதி, சமய, இன, நிற பேதங்கள் கிடையாது. எல்லாருமே சன்மார்க்கத்தை அடைய முடியும். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை உண்டு. அது என்ன நிபந்தனை?

யாராக இருந்தாலும் அவர்கள் நெஞ்சிலே இரக்கம் உடையவர்களாக இருத்தல் வேண்டும்.

இரக்கத்துடன் மட்டும் நின்று விடாமல் துன்பப் படும் உயிர்களின் துக்கத்தைத் துடைக்கத் தங்களால் முடிந்த வரையில் முயல வேண்டும். அவை மகிழ்ந்து வாழும்படிச் செய்வதற்குப் பாடுபடவும் வேண்டும்.

இதுதான் இரக்கத்தின் உயர்ந்த நிலை. இத்தகைய இரக்கம் உள்ளவர்கள் எல்லாரும் சன்மார்க்கிகள்தான். ''தயை உடையார் எல்லாரும் சமரச சன்மார்க்கம் சார்ந்தவரே'' என்பது வள்ளல் பெருமான் வாக்கு.

இந்த நெறி படைத்த சன்மார்க்கிகளுடன் சேர்ந்து வாழ வேண்டும். அவர்களுடைய சேர்க்கையால் மகிழ்ச்சி அடையலாம். அன்புடையவர், அறிவுடையவர் என்று நம்மை அனைவரும் போற்றும்படியும் வாழலாம்.

எல்லாரும் சேர்ந்து வாழக் கூடிய தகுதியைப் பெற்ற, கருணை உள்ள சன்மார்க்க ஞானி ஒருவர் இப்போது நம்மிடையே இருக்கிறார். திண்டுக்கல்லில் இருக்கிறார். இரக்

அ—2.

கமே உருவான அவர், உலகில் சன்மார்க்கம் பரவ வேண்டும் என்பதற்காக வள்ளல் பெருமானின் திரு அருட்பாக்களை ஆழ்ந்து பயின்று ஆராய்ந்து வருகிறுர். சன்மார்க்க உண்மை களை மக்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டு இருக்கிறுர். இந்த சுத்த சன்மார்க்கப் பெரியார்தான் சுவாமி சரவணு னந்தா அவர்கள்.

சுவாமி சரவணுனந்தா அவர்கள் 1910 ஆம் ஆண்டு திண்டுக்கல்லில் தோன்றியவர். இளமையிலேயே சன்மார்க் கத்தால் ஈர்க்கப்பட்டார். கல்லூரியில் இண்டர்மீடியட் படித்துக் கொண்டிருந்தபோது அவர் தம்முடைய கல்வியைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினுர். தாம் இப்போது படிக்கும் கல்வி சாதாரண வயிற்றுப் பிழைப்புக்குத்தான் வழிகாட்டும், வெறும் பொருளை ஈட்டுவதற்குத்தான் பயன்படும் என்று உணர்ந்தார். அவருடைய சன்மார்க்க இதயம் கல்லூரிக் கல்வியை ஏற்றுக் கொள்ளவில்லை.

கல்லூரிப் படிப்பை விட்டுவிட்டு சன்மார்க்கக் கல்வியைத் தேடி அலைந்தார். தவத்திரு சபாபதி அடிகள் என்னும் சுவாமி களைத் தமது குருவாக ஏற்றுக் கொண்டு அவரிடம் சன்மார்க் கக் கல்வியைப் பயில ஆரம்பித்தார்.

அன்று முதல் இன்று வரையில் சன்மார்க்கக் கல்வியைப் பயின்று கொண்டே இருக்கிறுர். திரு அருட்பாவில் தாம் கண்ட சன்மார்க்க உண்மைகளை மக்களுக்கு எடுத்துச்சொல்லி வருகிறுர். அவர்களைச்சன்மார்க்கத்துக்கு அழைத்து வருகிறுர்.

சுமார் ஐம்பது ஆண்டுகளாகச் சன்மார்க்கத் துறையில் ஈடுபட்டு அதில் பயிற்சி பெற்று வருகிறுர்.

ஆன்மிகத்தை வளர்க்கும் அரிய தவத்தை மேற்கொண் டிருக்கிறுர். வள்ளலார் வழியில் ஆன்மிகச் சாதகம் செய்து வருகிறுர். சன்மார்க்க சாதஞ வாழ்க்கையை மேற்கொண்டு சத்விசாரம் செய்து வருகிறுர்.

உலக மதங்களின் நூல்களை எல்லாம் ஊன்றிப் படித்து அதனுடன் வள்ளலார் சன்மார்க்கத்தையும் ஒப்பிட்டு ஆய்ந்து வருகிறுர்.

அவருடைய ஐம்பது ஆண்டு இடைவிடாத ஆன்மிக சாதனு வாழ்வும், சத்விசாரமும், அவருக்கு ஆன்மிகத் தெளிவையும் சன்மார்க்க விளக்கத்தையும் கொடுத்திருக்கிறது.

ஆன்மிக சாதனு வளர்ச்சியினுல் பல சக்திகளையும் சித்துகளையும் பெற்றிருக்கிருர். அவைகளேக் காட்டி மக்களே மயக்காமல் அவர்களேச் சன்மார்க்கத்துக்கு அழைத்துச் செல்லும் புனிதப் பணியை மேற்கொண்டிருக்கிருர்.

வாழையடி வாழையாக நமது ஞானிகள் ஒரே மாதிரியாகவே தாங்கள் கண்ட கடவுள் உண்மையைச் சொல்லி வந்தார்கள். அவர்கள் வழியில் வந்த வள்ளலார் நமது ஞானிகள் கண்ட கடவுள் உண்மைத் தத்துவத்தை உணர்ந்தார். ஒரு முடிவுக்கு வந்து விட்ட அவர்கள் சிந்தனேக்கும் மேலே வள்ளலார் சிந்தனே சென்றது. நமது ஞானிகள் கடவுளேக் கண்டு அவருடன் கலந்து விடுவதுதான் மனிதனின் குறிக்கோள் என்றுர்கள். வள்ளல் பெருமான் கடவுள் உண்மையைக் கண்டு அதை அனுபவித்துக் கொண்டிருப்பதுஎன்று ஒரு புது நெறியை உண்டாக்கினுர். மனித குலத்துக்கு வள்ளலார் வழங்கி இருக்கும் இந்த சன்மார்க்க உண்மையைத் தெளிவாக அறிந்தவர் சுவாமி சரவணுனந்தா அவர்கள்.

வள்ளல்பெருமானின் சன்மார்க்கத்தையும், அவர் அருளி இருக்கும் திருஅருட்பாவையும், சென்ற ஐம்பது ஆண்டுகளாக நுணுகி ஆய்ந்தும், தம் ஆன்மிக சாதனு வாழ்வால் அதில் பல உண்மைகளே உணர்ந்தும் இருக்கிருர். தம்அனுபவங்களின் துணேயால் பல சன்மார்க்க நூல்களே எழுதி இருக்கிருர்.

சன்மார்க்கத்துக்குக் கீதை போன்றது அருட்பெருஞ் ஜோதி அகவல். இந்த அகவல் வள்ளல் பெருமான் பெரு வாழ்வின் அனுபவத்தை எல்லாம் எடுத்துக் கூறுவது. மனித குலம் ஓங்கி உயர்வதற்கு வழிகாட்டும், சன்மார்க்க வேதம் என்றே இதைச் சொல்வார்கள். இவ்வளவு பெருமைகளே யுடைய அருட்பெருஞ்ஜோதி அகவல் முழுவதுக்கும் யாரும் உரை எழுத முன்வரவில்லே.

சுவாமி சரவணனந்தா அவர்கள்தான் முதன் முதலில் அகவலுக்கு உரை எழுதியவர். இந்த நூலை வெளியிடும் பாக்கியம் இராமலிங்கர் பணி மன்றத்துக்குக் கிடைத்தது. சுத்த சன்மார்க்கத்தின் லட்சியமாகிய ஆன்மநேய ஒருமைப் பாட்டு உரிமையை விளக்கி 'வள்ளலார் கண்ட ஒருமை வாழ்வு' என்ற ஒரு அரிய நூலையும் சுவாமி சரவணனந்தா அவர்கள் எழுதினர். அந்த நூலை வெளியிடும் வாய்ப்பும் இராமலிங்கர் பணி மன்றத்துக்கே கிடைத்தது. இதுபோல் இன்னும் பல சன்மார்க்க நூல்களையும் தம்முடைய சத்திய ஞானக் கோட்டத்தின் சார்பில் வெளியிட்டு இருக்கிறார்.

சத்திய ஞானசபைத் திருப்பணி சென்ற ஏழு ஆண்டுகளாக நடைபெற்று வந்தது. எவ்வளவோ அரும்பாடுபட்டுத் திரு அருளின் துணையினல் 'சத்திய ஞானசபை' திருப்பணி நிறைவு பெற்றது. வடலூர் ஞானசபைத் திருப்பணி நிறைவு விழா சென்ற 19-6-77 அன்று நடைபெற்றதை எல்லாரும் அறிவார்கள்.

சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழாவை திருவலம் சித்தர் சிவானந்த மவுனகுரு சுவாமிகளும், திண்டுக்கல் சுவாமி சரவணனந்தா அவர்களும் சிறந்த முறையில்நடத்திக் கொடுத்தார்கள்.

''ஞானசபைத் திருப்பணி வள்ளலாரின் ஞானசபை வரைபடத்துக்குப் பொருத்தமாக அமைந்திருக்கிறது'' என்று சுவாமி சரவணனந்தா அவர்கள் திருப்திதெரிவித்தார்.

'' வள்ளல் பெருமானின் திருவருளால்தான் இவ்வாறு நிறைவு பெற்றிருக்கிறது '' என்று சொன்னேன். '' சத்திய ஞானசபையின் திருப்பணியைத் திருவருள் துணை கொண்டு முடித்து இருக்கிறோம். சத்திய ஞானசபையைப் பற்றி மக்கள் தெரிந்து கொள்ளும்படி அதன் தத்துவங்களை விளக்கி ஒரு நூல் எழுதிக் கொடுக்கவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டதற்கிணங்க 'சத்திய ஞானசபை' என்ற இந்த நூலை சுவாமி சரவணனந்தா அவர்கள் எழுதிக் கொடுத்திருக்கிறார்.

இந்த நூல் மனித குலத்தின் ஆன்மிக வளர்ச்சியை எடுத்துக் காட்டும் மிகச் சிறந்த ஒரு ஆராய்ச்சியும் அருள் அனுபவமும் கூடியதாகும்.

கடவுள் உண்மையைப் பற்றித் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது இந்த நூல். ஆத்திகரும், நாத்திகரும், படித்த வரும், பாமரரும் விளங்கிக் கொள்ளும் வகையில் காரண காரியங்களுடன் கடவுள் உண்மையை விளக்கிக் கொண்டு போகிறுர். உயிர்ப்படைப்பின் நோக்கம் என்ன? மனிதப் பிறப்பின் குறிக்கோள் என்ன?

உலகில் கடவுள்வழிபாடு எப்படி ஆரம்பமாகி வளர்ந்தது? விக்கிரகங்களின் வரலாறு என்ன? அதைப் பிரதிஷ்டை செய்த ஆலயங்கள் எப்படித் தோன்றின? ஆலய வழிபாடு எப்படி ஆரம்பமாயிற்று?

சாத்திரங்கள், தோத்திரங்கள், சமய மதங்கள் எவ்வாறு தோன்றின? அதனுல் மனிதகுலம் அடைந்த நன்மைகள் என்ன?

சமயஞானிகளும், ஞானயோகச் சித்தர்களும் நமக்குக் காட்டிய வழி என்ன? சமய மதங்களின் முடிவு என்ன?

வள்ளல் பெருமான் ஏன் தோன்றினுர்? அவர் ஞான சபையை அமைத்ததன் நோக்கம் என்ன? அவர் பெற்ற அனக வாழ்வின் உண்மை என்ன?

நமது ஞானிகள் காட்டிய வழிக்கும் வள்ளலார் காட்டிய சுத்த சன்மார்க்கத்துக்கும் என்ன வேறுபாடு? சன்மார்க் கத்தைக் கடைப் பிடிப்பதன் மூலம் மனிதகுலம் அடையும் பயன் என்ன? என்பதைப் பற்றியெல்லாம் இந்த நூலில் ஆய்ந்து சொல்லுகிறுர் சுவாமி சரவணுனந்தா.

நமது முன்ஞேர்கள் கடவுள் வேறு நாம் வேறு என்ற வழியிலேயே சிந்தித்துச் செயல்பட்டுச் சென்றனர். அவர்கள் காலத்தில் மனிதனுடைய சிந்தனே வளர்ச்சியின் உச்சக்கட் டம் அதுதான்.

அவர்களுக்குப் பின் ஆயிரம் வருடங்களில் மனிதனின் சிந்தனை மேலும் மேலும் வளர ஆரம்பித்தது.

வள்ளல் பெருமான் நமது ஞானிகளின் அனுபவங்களை எல்லாம் உணர்கிறார். அவர்கள் சிந்தனைக்கு மேலாகச் செல்கிறார். அவர்கள் கண்ட கடவுள் உண்மையிலேயே அவர்கள் காணாத கடவுள் உண்மையைக் காண்கிறார்.

எங்கும் நிறைந்திருப்பவன் இறைவன் என்றால் அவர் நம் உள்ளும் இருப்பவர் தானே. அவரை எல்லோரும் வெளியில் இருப்பதாக நினைத்தே தேடிக்கொண்டிருப்பானேன்? அந்த வழியை விட்டு விட்டு நம் உள்ளேயே தேடினால் என்ன என்று வள்ளல் பெருமான் சிந்திக்கிறார்.

நம் ஞானிகளும் வள்ளல் பெருமானின் இந்தச் சிந்தனை யைத் தூண்டும் அளவுக்குச் சென்றிருக்கிறார்கள். அது வள்ளல் பெருமானுக்கு வழிகாட்டியாக இருந்தது.

வள்ளலார் தம் உள்ளேயே இருக்கும் இறைவனை அடைந்து அனுபவிக்க முயல்கிறார். அதில் வெற்றியும் காணு கிறார்.

வள்ளலார் தம் உள் கண்ட இறைவனுக்கு அருட்பெருஞ் ஜோதி என்று பெயர் சூட்டுகிறார். அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் நம் உள் சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்தில் ஜோதி வடிவமாக இருக்கிறார் என்பதைக் காணுகிறார்; நமக் கும் காட்டுகிறார்.

நம் சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்துக்குத்தான் ஞான சபை என்று பெயர். அது அங்கு விளங்கும் சத்தியமாக இருப்பதால் அதற்கு சத்திய ஞானசபை என்று பெயர் சூட்டி னார்.

தம் உள் இருக்கும் சத்திய ஞானசபையை வள்ளல் பெரு மான் தமது ஐம்பது ஆண்டு ஆன்மிக அனுபவத்தின் மூலமாக காண்கிறார். எத்தனையோ கோடிக்கணக்கான ஆண்டுகளாக நமது முன்னோர்கள் பெற்ற ஆன்மிக அனுபவத்தின் வளர்ச்சி தான் வள்ளல்பெருமான் தம்உள் கண்ட சத்திய ஞானசபை.

இந்த இறை உண்மையை தம்மைப்போல் எல்லாரும் ஆரம்பத்தில் இருந்து கஷ்டப்பட்டு உணர வேண்டியதில்லை. தாம் பெற்ற இறை அனுபவத்தை மக்கள் சுலபமாகவே உணர்ந்து அனுபவிக்க வேண்டும். வாழ்க்கையில் அவர்கள் இன்பத்துடன் இருக்கவேண்டும் என்பதற்காகவே வடலூரில் சத்திய ஞானசபையைத் தம் பெருங்கருணையினால் நிர் மாணித்து வழங்கி இருக்கிறார். தம் அகத்தில் வள்ளலார் கண்ட ஞானசபையின் புறவடிவம்தான் வடலூரில்வள்ளலார் அமைத்து இருக்கும் சத்திய ஞானசபை.

சத்திய ஞானசபையில் இருக்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவனை அடைவதற்கான வழியைத்தான் சுத்த சன் மார்க்கம் என்று சொன்னார். இந்த சுத்த சன்மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் முறையை விளக்குவதற்காக சுத்தசன் மார்க்க சங்கத்தையும், சத்திய தருமச்சாலையையும் அமைத் துக் கொடுத்திருக்கிறார்.

இந்த மூன்று நிறுவனங்களின் தத்துவங்களையும் விளக்கி 'சத்திய ஞானசபை' என்ற இந்த நூலை திண்டுக்கல் சுவாமி தம்முடைய அருள் அனுபவத்தின் துணையினாலேயே எல்லா ரும் எளிதில் விளங்கிக்கொண்டு தம் வாழ்க்கையில் ஏற்றுக் கொள்ளும் வகையில் எழுதி இருக்கிறார்.

ஐம்பது ஆண்டு காலம் ஆன்மிக தவத்தில் சுவாமி சர வணனந்தா அவர்கள் அரும்பாடுபட்டுப்பெற்றிருக்கும் பலனை இந்த நூலைப் படிக்கும் நாம் ஒரு சில மணி நேரங்களிலேயே பெற்றுவிடலாம்.

இதுவரையில் சன்மார்க்கத்தை மறைத்திருந்த திரைகளை எல்லாம் நீக்கி சுத்த சன்மார்க்கத்தையும், அருட்பெரும் ஜோதிக் கடவுளையும், அனக வாழ்வின் பெருமையையும் நமக்கு இந்த நூலில் காட்டியிருக்கிறார் சுவாமி சரவண னந்தா.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரையும், சன்மார்க்கக் கொடியையும், அருட்பெரும்ஜோதி மந்திரத்தையும் விளக்கி,

இவை எல்லாமே இறைவனின் திருஉருவத்தைக் குறிப்பவை களே என்று தெளிவு படுத்துகிருர்.

அருட்பெருஞ்ஜோதி; சுத்த சிவம்; அருட்சிவம்; தயவு என்பனவெல்லாம் இறைவன் என்ற ஒரே பொருளைக் குறிக் கின்ற சொற்கள்தான் என்பதை விளக்கிக் காட்டுகிருர்.

இந்த நூலையும் இராமலிங்கர் பணிமன்றம் வெளியிடும் வாய்ப்பைப் பெற்றிருப்பதைப் பெரும்பேருகக் கருதுகிறேன்.

'சத்திய ஞானசபை' என்ற இந்த நூலை எங்கு வெளியிட லாம்? யாரை வைத்து வெளியிடச் செய்யலாம்? என்று யோசித்தேன்.

சுவாமி சரவணுனந்தா அவர்கள் முன்னிலையிலேயே வெளியிடுவது பொருத்தம் என்று தோன்றியது.

யாரை வைத்து இந்த நூலை வெளியிடச்சொல்வதுஎன்று யோசிக்கும் போது சுவாமி சச்சிதானந்தா அவர்கள்தான் என் முன் வந்து நின்ருர்.

சுவாமி சச்சிதானந்தா அவர்கள் அமெரிக்க நாட்டில் இருக்கிருர். சென்ற பத்து ஆண்டுகளாக அமெரிக்காவில் சன்மார்க்கப் பணியைச் செய்து வருகிருர். ஜோதி வழி பாட்டை அங்கு பரப்பி வருகிருர்.

ஜோதியை மத்தியில் வைத்து எல்லா சமய குருமார்களும் அதைச் சுற்றி அமர்ந்து தங்கள் தங்கள் வழியில் ஜோதி வழி பாடு செய்கிருர்கள். முடிவில் ஒருவருக்கு ஒருவர் அதன் அருட் பிரசாதங்களைப் பரிமாறிக் கொள்கிருர்கள். இவ்வாறு சர்வ சமய ஒற்றுமையை ஏற்படுத்தும் ஜோதி வழிபாட்டை வெற்றியுடன் நடத்தி வருகிருர். ஒவ்வொரு சமயத்தவருக் கும் ஒவ்வொரு கொள்கை என்று தனித்தனியாக பல திக்கு களை நோக்கிச் சென்று கொண்டிருந்த சமயங்களை ஜோதி வழிபாட்டின் மூலமாக ஒருமுகப்படுத்தி வருகிருர்.

வள்ளல் பெருமானின் ஜீவகாருண்ய ஒழுக்கத்தை அமெ ரிக்க மக்கள் உவந்து ஏற்றுக் கொள்ளும்படிச்செய்திருக்கிருர்.



சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழாவில் தூபி நீராட்டு
தலை நடத்திவிட்டு திருவலம் சித்தர் சிவானந்த மவுனகுரு சுவாமி
களும், திண்டுக்கல் சரவணனந்தா சுவாமிகளும் இறங்கி வருகின்றனர்

கிட்டத்தட்ட ஒரு லட்சம் அமெரிக்க மக்கள் சைவ உணவை மேற்கொள்ளும்படிச் செய்து இருக்கிறார். அவர்கள் புலால் உண்ணாமலும், புகை பிடிக்காமலும், மது அருந்தாமலும் ஆன்மிக ஒழுக்கத்துடன் வாழ்க்கை நடத்தி வரும் அற்புதத்தை, நான் அமெரிக்காவுக்குச் சென்றிருந்த போது நேரிலேயே பார்த்தேன். அங்கு ஒரு ஆன்மிகப் புரட்சியே அமைதியாக நடைபெற்று வருகிறது. நாம் புராண இதிகாசங்களில் படித்த குருகுல வாழ்க்கை முறை சுவாமி சச்சிதானந்தா அவர்கள் ஆசிரமத்தில் நவீன முறையில் நடைபெறுவதைப் பார்த்தேன்.

வள்ளல் பெருமானின் சன்மார்க்க நெறி, ஜோதி வழிபாட்டு முறை அமெரிக்க நாட்டில் வேகமாக வளர்ந்து வருகிறது. இதைச் செய்துவரும் சுவாமி சச்சிதானந்தா அவர்களைவிட 'சத்திய ஞானசபை' என்ற இந்த நூலை வெளியிடுவதற்குத் தகுதியானவர் வேறு யார் இருக்க முடியும்?

எனவே இந்த நூலை வெளியிடுவதற்கு வரும்படி சுவாமி சச்சிதானந்தா அவர்களைக் கேட்டுக் கொண்டேன்: சுவாமிகளும்ஒப்புக் கொண்டுள்ளார்.

'சத்திய ஞானசபை' என்ற இந்த நூல் சுவாமி சரவணனந்தா அவர்களின் ஆன்மிக அனுபவத்தின் பயனால் தமிழ் மக்களுக்குக் கிடைத்த ஒப்பற்ற செல்வமாகும்.

சத்திய ஞானசபை என்ற இந்த நூலை சுவாமி சச்சிதானந்தா அவர்கள் வெளியிடுகிறார்கள். இதனால் பொன்மலர் நன்மணம் பெற்றது போல 'சத்திய ஞானசபை' அருள்மணம் பரப்பிக் கொண்டு மலர்கிறது.

தமிழ் தெரிந்த ஒவ்வொருவரும் இந்த நூலைப் படித்துப் பயன்பெற வேண்டும்.

ஏதோ பிறப்பதும், சாப்பிடுவதும், சம்பாதிப்பதும், ஆடுவதும், பாடுவதும், இறந்துபோவதும் மட்டும் மனிதனின் வாழ்க்கை அல்ல. அதற்காக ஏற்பட்டது அல்ல உன்னதமான மனிதப் பிறவி,

''மனிதப் பிறவியின் குறிக்கோளே, இறை உண்மையை உணர்ந்து, அதனுடன் ஒன்றி, நிலைத்த இன்பத்துடன் வாழ்வதுதான்'' என்று சுவாமி சரவணனந்தா அவர்கள் இந்த நூலில் மிக அழகாக விளக்கிச் சொல்லி இருக்கிறார்.

மகத்தான இந்த பேருண்மையை ஒவ்வொருவரும் உணர்ந்து மனிதப் பிறவியின் குறிக்கோளை நோக்கிச் செல்வதற்கு இந்த நூல் உதவும்,

எல்லாவற்றையும் இயக்கிவரும் திருவருளின் துணையினாலேயே இந்த நூல் வெளி வந்திருக்கிறது! தமிழ்ப் பெருமக்கள் படித்துப் பயன்பெற வேண்டும் என்று அன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

''அருட்பெருஞ் ஜோதி! அருட்பெருஞ் ஜோதி!
தனிப்பெருங் கருணை! அருட்பெருஞ் ஜோதி!

6, போயஸ் தோட்டம்,
சென்னை-600 086.

நா. மகாலிங்கம்,
1-12-1977

# முன்னுரை

சத்திய ஞானசபை உலகம் எல்லாம் போற்ற, மெய் இன்ப வாழ்வுக்கு வழிகாட்டுவது.

எல்லோருக்கும் அன்பும், அறிவும், இன்பமும் பொது வானது. இந்த மூன்றும் சேர்ந்த ஒரு பரம்பொருள் அருட் பெருஞ் ஜோதி. இந்த அருட்பெருஞ் ஜோதியைத் தம் சிர நடுவில் இருக்கும் சத்திய ஞானசபையில் வள்ளலார் அக அனு பவத்தால் பார்த்தார். அதனுடன் ஒன்றி இறை இன்பத் தைப் பெற்ருர்.

தாம் பெற்ற இறை இன்பத்தை மக்கள் சமுதாயமும் சுலபமாகப் பெற வேண்டும் என்பதற்காக வள்ளல் பெரு மான் ஒரு வழி காண்பித்தார். அதுதான் சுத்த சன்மார்க்கம்.

அந்த நாள் மக்கள் அருட் பக்குவம் பெறுவதில் ஆர்வம் இல்லாமல் இருந்தார்கள். அதனல் அவர்கள் சுத்த சன்மார்க் கத்தைப் பின்பற்ற முன் வரவில்லே. சுத்த சன்மார்க்கத்தால் கிடைக்கும் சுகானந்த வாழ்வைப் பற்றியும் தீவிரமாகச் சிந்திக்கவில்லே. அதை அடைய வேண்டும் என்ற விருப்பமும் அவர்களுக்கு இல்லே.

வள்ளலாரைப் பய பக்தியோடும், பணிவன்போடும் போற்றியவர்கள்கூட தங்கள் உடல் இன்ப வாழ்வில் நலம் பெறவும், அன்ருடப் பிரச்சனேகளேயும், வேறு பல குறைகளே யும் நீக்கிக் கொள்வதற்காகவே அவரிடம் வந்தார்கள்.

சன்மார்க்கத்தின் சிறப்பு என்ன? அதை அடைவதற் கான வழி என்ன என்று வள்ளலாரை யாரும் கேட்கவில்லே.

பக்குவிகளாக ஆகவேண்டும் என்னும் விருப்பத்தில் அன்று யாரேனும் முன் வந்திருந்தால் வள்ளலார் அவசியம் அவர்களே மேலே ஏற்றுவித்திருப்பார்.

தம்மை நாடிப் பக்குவம் பெற யாரும் வரவில்லையே என்பதற்காக வள்ளலார் தாம் கண்ட இறை அனுபவம் தம்மோடு இருக்கட்டும் என்று மூடி வைத்து விடவில்லை.

உலகம் பக்குவம் பெற வேண்டும். உலக மக்களுக்கு அக அனுபவம் ஏற்பட வேண்டும் என்ற பெருங்கருணையால் தம் முடைய சன்மார்க்கக் கருத்துக்களை எல்லாம் திருவருட்பா வாகப் பாடி வைத்திருக்கிறார். கடிதங்கள், வசனங்கள் மூல மாகவும் தெரிவித்திருக்கிறார்.

மக்களுக்குப் புறப் பக்குவ அனுபவம் ஏற்படுவதற்காக, உயிர் விளக்கம் தரும் தருமச்சாலையை ஆரம்பித்தார். அதைத் தொடர்ந்து நடத்துவதற்கும் ஒழுங்கு செய்தார்.

சாலையைச் சார்ந்த சாகாக்கலையைக் கற்பிக்கும் ஒரு நிலை யத்தையும் தொடங்கினார். சாகாக் கலையைக் கற்றுக்கொள்ள அந்த நாள் மக்கள் யாரும் முன் வரவில்லை. 'கடை விரித் தேன் கொள்வாரில்லை; கட்டிவிட்டேன்' என்று சாகாக் கலையைக் கற்பிக்கத்தொடங்கிய நிலையத்தைமூடிவிட்டார்.

அருட்பெருஞ் ஜோதி வழிபாட்டுக்காக சத்திய ஞான சபையை ஆரம்பித்தார், ஞானசபையில் தைப்பூசத்தன்று ஜோதி காட்சியைக் காட்டினார். தொடர்ந்து அதில் மக்கள் நித்திய வழிபாடு நடத்துவதற்கும் ஏற்பாடு செய்தார்.

அந்த நாள் சூழ்நிலையில் சத்திய ஞானசபையில் தினந் தோறும் வழிபட மக்கள் உற்சாகத்துடன் வருவதாக இல்லை: எதிர்காலத்திலாவது திரண்டு வருவார்களா என்று எண்ணும் படியாகவும் இல்லை. இறைவனின் திருவுள்ளம் இதுதான் போலும் என்று எண்ணி விட்டார் வள்ளலார்.

ஞானசபை வழிபாடு எந்த முறையில் நடைபெற வேண் டும் என்று வள்ளல் பெருமான் நினைத்தாரோ, அதுபோல அங்கு வழிபாடும் நடைபெறவில்லை. அதனால் ஞானசபையை யும் பூட்டி வைத்தார். ஆனால் இறைவனின் திருவுள்ளம் ஞானசபையை அப்படியே பூட்டி வைத்து விடவில்லை.

வள்ளல் பெருமான் முத்தேக சித்தி பெற்ற சில ஆண்டு களுக்குப் பின் ஞானசபையில் மீண்டும் வழிபாடு ஆரம்பமா

யிற்று. வருஷத்தில் ஒரு சில நாட்கள் மட்டும் ஞானசபையில் ஜோதி தரிசன வழிபாடு நடைபெற்றது. மாதப் பூச நாட்களில் அரைகுறையாக ஜோதி தரிசனம் காட்டினார்கள். தை மாதப் பூசத்தில் ஜோதி தரிசனத்தைச் சிறப்பாகக் காட்டுவதாக எண்ணிக்கொண்டு, அருட்பெருஞ் ஜோதியின் பூர்ண விளக்கம் இன்றி ஜோதி தரிசனம் காட்டினார்கள்.

மக்கள் அகத்திலும், புறத்திலும் அருட்பிரகாசத்தின் தன்மையை உணர்ந்து கொள்ள ஆவலுடன் இருக்கிறார்கள். வள்ளல் பெருமான் ஆரம்பித்த அருட்பெரு நெறியை விரைவுபடுத்த இறைவன் திருவுளம் கொண்டிருக்கிறார்.

ஞானசபை வழிபாட்டில் சன்மார்க்கத்துக்குத் தடையாக இருக்கும் கொள்கை கோட்பாடுகள் இப்போது கைவிடப்பட்டிருக்கின்றன.

மருள் விஞ்ஞானமும் அருள் மெய்ஞ்ஞானமும் ஒன்றுக்கு ஒன்று உதவிக் கொண்டு வளர வேண்டும். அந்த நிலை ஏற்படவில்லையானால் அருள் ஆற்றலின் வளர்ச்சி தடைப்பட்டுப் போய்விடும். மனிதனின் புறத்தேவைகளை வளர்க்கும் விஞ்ஞானம் அதன் பின் விளைவுகளையும் உணர்ந்து செயல்படவேண்டும். அது அவ்வாறு செயல்படுவதாகத் தெரியவில்லை. விரைவில் மனிதனின் அக வளர்ச்சிக்கும், புற வளர்ச்சிக்கும் துணை செய்யும்படி அதன் ஆற்றலை திருவருள் உயர்த்திவிடும்.

நாட்டில் அருள் ஒளி நெறி பரவுவதற்கான எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும். இது மிகவும் அவசியமும் அவசரமும் ஆகும். இந்த முயற்சிதான் சுத்த சன்மார்க்கத்தின் அருள் விளக்கச் செயல்.

சுத்த சன்மார்க்கத்தின் தலைவர் வள்ளல்பெருமான். அவர் தம் பெருங்கருணையினால் நமக்கு வழங்கி இருப்பது சத்திய ஞானசபை. அதன் உண்மை விளக்கத்தையும், அதன் விளைவையும், அதனால் ஏற்படும் பயனையும் மக்கள் தெரிந்து கொள்ளவேண்டும். அப்போதுதான் அவர்கள் சுத்த சன்மார்க்கத்துக்கு வருவார்கள்.

இதற்காகவே 1939 ஆம் ஆண்டில் 'சத்திய ஞானசபை தத்துவ விளக்கம்' என்ற ஒரு நூலை எழுதி வெளியிட்டோம். அது சத்திய ஞானக் கோட்டத்துச் சிறிய வட்டத்தில் மட்டும் சுற்றிக் கொண்டிருந்தது.

இருபத்தொன்பது ஆண்டுகளுக்குப் பின்னுல் 1968 ம் ஆண்டில் அதன் இரண்டாவது பதிப்பு வெளியாயிற்று. சத்திய ஞானசபை உண்மையை மக்கள் ஓரளவு உணரத் தொடங்கினுர்கள். இரண்டாம் பதிப்பு வெளியான ஒன்பது ஆண்டுகளுக்குப் பின்னுல் 1977 ம் ஆண்டில் ஞானசபை உண்மையைத் தெரிந்து கொள்வதற்கும், சன்மார்க்கத்தில் ஈடுபடுவதற்கும் மக்கள் மத்தியில் ஒரு வேகம் ஏற்பட்டிருக் கிறது.

இப்போது சத்திய ஞானசபை அருள் பொலிவுடன் காட்சி தருகிறது. தன் அகத்தில் வளர் அருட்பெருஞ் ஜோதியின் ஒளியை அது உலகம் எங்கும் பரப்பத் தொடங்கி இருக்கிறது.

சென்ற ஜூன்மாதம்; பத்தொன்பதாம் தேதி ஞாயிற்றுக் கிழமை; ஆனி மாதம்; பூசத் திருநாளில் ஞானசபைத் திருப்பணி நிறைவு விழா நடைபெற்றது. அருள் மணத்துடன் கோலாகலமாக நடைபெற்றது. அருட்பெருஞ்ஜோதி மகா மந்திர நாத ஒலி வானவெளியில் ஓங்கி நிரம்பியது. லட்சக் கணக்கான மக்கள் இந்த விழாவில் கலந்துகொண்டார்கள். ஞானசபையின் அருள் காட்சியைக் கண்டு களித்தார்கள். புறவெளியில் அதன் பொற்கலசமே, ஜோதிக் காட்சியாக ஓங்கி இருப்பதையும் பார்த்து மகிழ்ந்தார்கள்.

சத்திய ஞானசபையின் அகவெளியில் அருட்பெருஞ் ஜோதியைத் தரிசித்து ஆனந்தித்தார்கள். அதை மறைத்துக் கொண்டிருந்த திரைகள் எல்லாம் நீக்கப்பெற்றதும், அருட் பெருஞ்ஜோதி காட்சி கொடுத்ததை ஆயிரக்கணக்கான மக்கள் "அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி! தனிப் பெருங்கருணை! அருட்பெருஞ்ஜோதி!" என்ற மகாமந்தி ரத்தை ஓதிக்கொண்டே தரிசித்துப் பரவசமடைந்தார்கள்.

சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழா நடை பெற்ற நாள் உலக மக்களுக்கு உள்ளும் புறமும் அருள் விளக்கம் செய்யப்பட்ட புனித நாள்.

பத்து நாட்களுக்கு முன்னதாகவே சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழா ஆரம்பமாகிவிட்டது. பத்து நாட் களும் ஞானசபைக்கு முன்னல் மக்கள் அருட்பெருஞ்ஜோதி மகா மந்திரத்தை ஓதிக்கொண்டிருந்தார்கள். மகாமந் திரத்தைக் கோடி முறை ஓதி ஓதி உணர்ந்தார்கள். பத்து நாட்களும் வடலூரில் பல இடங்களில் சன்மார்க்கச் செல்வர்கள் ஆயிரக் கணக்கான மக்களுக்கு அன்னதானம் வழங்கிக் கொண்டே இருந்தார்கள். மக்களிடம் உள்ளும் புறமும் சன்மார்க்க விளக்கம் ஏற்படும் வண்ணம் ஆன்மிகக் கலை நிகழ்ச்சிகள் ஒவ்வொரு நாள் மாலையிலும் நடை பெற்றுக்கொண்டிருந்தன.

"Omnigracious Infinite Light" என்ற ஒரு சிறிய ஆங்கில நூலை சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழா வில் நாம் வெளியிட்டோம். இது தமிழ் நாட்டிலும், வெளி நாட்டிலும் தமிழ்தெரியாத மக்களிடம் சன்மார்க்கம் பரவத் துணைசெய்யும் என்று நம்புகிறோம்.

மக்கள் மத்தியில் இப்போது ஏற்பட்டிருக்கும் அருள் வேகத்தைப்போல் இதுவரை ஏற்பட்டதில்லை. அருட்பெருஞ் ஜோதியின் உண்மை விளக்கமும் பயனும், உலகம் எங்கும் பரவப் போகிறது. அதன் பெரும்பயனை உலக மக்கள் அனு பவிக்கப் போகிறார்கள் என்பதில் சந்தேகமில்லை.

மக்களிடம் ஏற்பட்டிருக்கும் அருள் வேகத்துக்கு வழி காட்டுவது ஒவ்வொரு சன்மார்க்கியின் கடமையாகும். அதற் காக சன்மார்க்க உண்மைகளை விளக்கி "சத்திய ஞானசபை" என்ற இந்த நூலை எழுதி இருக்கிறோம்.

இராமலிங்கர் பணிமன்றத் தலைவர் திருநிறை நா. மகாலிங்கம் அவர்கள் கேட்டுக்கொண்டதற்கு இணங்கவே இந்த நூலை எழுதினேம்.

திரு நா. மகாலிங்கம் அவர்கள் சிறந்த தொழில் அதிபர். நல்ல கல்வி நெறியாளர். ஆன்மிகத்தில் ஆர்வமும் தெளிவும் உள்ளவர். இளமையில் இருந்தே சன்மார்க்கத்தில் ஈடுபாடு கொண்டவர்.

சென்ற பன்னிரண்டு ஆண்டுகளாக 'இராமலிங்கர் பணி மன்றம்' என்ற பெயரில் ஒரு சன்மார்க்க நிறுவனத்தை ஆரம்பித்து நடத்தி வருகிறார். ஆண்டுதோறும் சென்னையில் பத்து நாட்கள் வள்ளலாருக்கும், மகாத்மா காந்திக்கும் விழா நடத்துகிறார். இந்த விழாவுக்கு சுமார் எழுபது எண்பது ஆன்மிகத் துறை அறிஞர்களை வரவழைத்து வள்ளலாரைப் பற்றியும், மகாத்மா காந்தியைப் பற்றியும் பேச வைக்கிறார். அவர்கள் சொற்பொழிவுகளைக் கேட்பதின் மூலமாக மக்கள் சன்மார்க்க விளக்கம் பெற்று வருகிறார்கள்.

இவருடைய பன்னிரண்டு ஆண்டு சன்மார்க்கப் பணியின் பயனாக படித்தவர்கள் மத்தியிலும், ஆராய்ச்சி வல்லுனர்கள் மத்தியிலும், பொது மக்கள் மத்தியிலும் சன்மார்க்கத்தைப் பற்றிய ஒரு தெளிவும் எழுச்சியும் ஏற்பட ஆரம்பித்திருக்கிறது.

வள்ளலாரைப் பற்றியும், அவருடைய சன்மார்க்கத்தைப் பற்றியும், மரணமிலாப் பெருவாழ்வைப் பற்றியும் பல சன்மார்க்க அறிஞர்களைக் கொண்டு ஆங்கிலத்திலும் தமிழிலும் நூல்கள் எழுதச்சொல்லி ஆண்டுதோறும் வெளியிட்டு வருகிறார்.

வள்ளல் பெருமான் உலகத்துக்கு வழங்கிய சத்தியஞான சபை, இரண்டாம் முறை திருப்பணி செய்த பிறகும் சிதிலமாகி இருந்தது. அதன் திருப்பணியின் பொறுப்பையும் திரு நா. மகாலிங்கம் ஏற்றுக்கொண்டார். ஞானசபைத் திருப்பணிக் குழுவின் தலைவராக இருந்து ஏழு ஆண்டுகள் பாடுபட்டு சன்மார்க்கக் கொள்கைகளுக்கு ஏற்ப சத்திய ஞான சபைத் திருப்பணியைச் செய்து முடித்திருக்கிறார்.

ஞானசபைத் திருப்பணிக்குத் தம் சொந்த பொறுப்பில் பெரும் தொகையை வழங்கியும், தம் செல்வாக்கை



ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஏழாம் ஆண்டு ஜூன் மாதம் பத்தொன்பதாம் தேதி புதிதாகத் திருப்பணி நிறைவு பெற்ற சத்திய ஞானசபை.

உபயோகப்படுத்தியும் சத்தியஞானசபைத் திருப்பணியை மிகச் சிறப்பாகச் செய்திருக்கிறார். வடலூர் பெருவெளியில் இருந்துவந்த தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்கினார். பாதாளத்திலிருந்து கங்கையையே கொண்டுவந்தது போல அறுநூறு அடி ஆழ குழாய்க் கிணறு இறக்கித் தண்ணீர் கொண்டுவந்து மக்களுக்கு வழங்கி அருள்பணி ஆற்றி இருக்கிறார்.

சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழாவைப் பத்து நாட்கள் கோலாகலமாக நடத்தினார். சன்மார்க்க அன்பர்கள் மனம் நிறைவு பெறும் வகையில் நடத்தினார். திருப்பணி நிறைவு விழாவின்போதுதான் சத்திய ஞான சபையைப் பற்றியும், சன்மார்க்கத்தைப் பற்றியும் பாமர மக்களும் படித்தவர்களும் சன்மார்க்க அன்பர்களும் புரிந்து கொள்ளும் வகையில் ஒரு தெளிவான நூல் எழுதவேண்டும் என்று எம்மைக் கேட்டுக்கொண்டார். அவருடைய விருப்பத்துக்கு இணங்கவே ''சத்திய ஞானசபை'' என்ற இந்த நூலை எழுதினோம்.

இந்த நூலை திரு நா. மகாலிங்கம் அவர்கள் தம்முடைய இராமலிங்கர் பணிமன்றத்தின் வெளியீடாகவே வெளியிட்டிருக்கிறார்.

'சத்திய ஞானசபை' என்ற இந்த நூல் இன்றைய உலகுக்கு மட்டுமல்ல, வருங்கால உலகுக்கும் பெரும்பயன் அளிக்கும். இந்த நூல் உலக மொழிகளில் எல்லாம் வெளியாகி உலகின் எல்லாப் பகுதிகளிலும் சன்மார்க்கம் பரவ உதவப்போகிறது.

இந்த நூலில் இருக்கும் சன்மார்க்க விளக்கம், ஒளி நெறியைப் புரிந்துகொள்வதற்கும், அதன் வழி நடப்பதற்கும் மக்களுக்கு ஊக்கம் அளிக்கும்.

பழைய பழக்க வழக்கத்திலும், கொள்கை கோட்பாடுகளிலும் பற்றுடையவர்கள்கூட கடவுள் உண்மையை உணர்ந்துகொள்ள அவர்களுக்கு இந்த நூல் வழிகாட்டும்.

அவர்கள் சுத்த தயவு நெறியில் வாழ்வதற்கு இந்த நூல் பெரிதும் உதவி புரியும்.

'பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினுனே' என்றபடி பழைய முறையில் இருக்கும் வேண்டாதவைகளை விட்டுவிட்டு புதிய முறையைக் கடைப் பிடிப்பதுதான் முறையாகும்.

உலகத்து உயிர்களையும், பொருள்களையும், ஆற்றல் களையும் தம் தனிப்பெருஞ் சக்தியால் அனுதி காலமாக ஏதோ ஒன்று ஆண்டு வருகிறது. அதுதான் அருட்பெருஞ்ஜோதி.

அருட்பெருஞ் ஜோதிதான் நம்உள் இருந்தும் நம்மை ஆண்டு வருவது. அதை நம்உள் கண்டு அதனுடன் ஒன்றுவதுதான் சன்மார்க்கம். அருட்பெருஞ்ஜோதியின் உண்மையை உணர்ந்து, தயவு வாழ்வை மேற்கொள்ளும் போதுதான் அது நம் உயிரிலும், உடம்பிலும், அருள் ஒளியை நிரப்பும். நாம் தயவுப் பணிபுரிந்துகொண்டே இன்பத்துடன் இருக்கக் கைகொடுக்கும்.

இவை எல்லாம் வெறும் கற்பனையல்ல. வள்ளலாரின் அனுபவம். அவர் வெளியிட்டிருக்கும் அனுபவ உண்மை. எல்லாம்வல்ல ஆண்டவர் ஒவ்வொரு காலத்தும் ஒருசிலர் மூலமாகத் தமது உண்மையை வெளியாக்குகிருர். இதை உள்ளபடி உணர்ந்துகொண்டால், எந்தக் காலத்தவர்களின் செயலும், அருட்பெருஞ்ஜோதியின் செயல்தான் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

நமது முன்னேர்கள் தாங்கள் உணர்ந்தபடி மெய்ப் பொருள் உண்மையை விளக்கினுர்கள். அது மக்கள் மத்தியில் பல தெய்வங்களையும், மதங்களையும், தோற்றுவித்து அவர்களைப்பல பிரிவினர்களாகப் பிரித்து வைத்துவிட்டது.

இந்தச் சூழலில்தான் மெய்ப்பொருளே தன் உண்மையை உலகறிய வெளியாக்கி இருக்கிறது. அதுவே மக்கள் உள்ளத் தில் தெளிவை ஏற்படுத்தி வருகிறது. அவர்களின் வெளிப் பழக்க வழக்கங்களில் ஏற்ற மாற்றங்களையும் உண்டாக்கி

வருகிறது. அவர்களுக்குப் புது வாழ்வும், புதிய இன்பச் சூழலும் ஏற்பட உதவி வருகிறது. இதைத்தான் திருவருட்பிரகாச வள்ளலார் வடிவில் திருஅருள் செய்து வருகிறது.

பழமையில் பற்று நீங்காமலும், உண்மையில் விருப்பம் ஓங்காமலும், பழையனவற்றையே விடாப்பிடியாகப் பலர் பிடித்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் மக்களின் ஒருமைப்பாட்டுக்கு இடையூறு உண்டாக்குகிறார்கள். இதைப் போக்கி மக்கள் எல்லாரும் ஒருமை உளத்தவர்களாக வாழ்வதற்காகவே வள்ளலார் வழியில் திருவருள் செயல் படுகிறது. இதை வள்ளல்பெருமான் நமக்கு அளித்திருக்கும் சுத்த சன்மார்க்கத்தின் மூலமாக அறிகிறோம்.

'சத்தியஞானசபை' நூலில் இந்த உண்மைகளை எல்லாம் விளக்கி விரிவாக ஆய்வு செய்திருக்கிறோம்.

'சத்திய ஞானசபை' என்ற இந்த நூலை வேற்றுமை எண்ணம் இல்லாமல் எல்லாரும் படிக்க வேண்டும். தயவு உள்ளத்துடன் ஊன்றி நிதானமாகப் படிக்கவேண்டும். படித்து உணரவேண்டும். அதன் உண்மையை உள்ளத்தில் ஏற்றுக் கொண்டு அன்பும், அறிவும் நிரம்பிய மக்களாக வாழ முயல வேண்டும்.

அகமும் புறமும் நிறைந்த அருட்பெருஞ் ஜோதியை, நம் உள் உணர்ந்து அதனுடன் ஒன்றி வாழவேண்டும். இதன் மூலமாக மெய்ப்பொருள் அனுபவத்தைப் பெற்றுப் பேரின்பத்தில் வாழலாம்.

தயவுவரு கின்றஒரு தருணமிது தானே
சத்தியமென் றறிந்திடுமின் நித்தியம்பெற்றிடலாம்
மயலறிவு கொண்டினிமேல் மலங்கிடுதல் வேண்டாம்
மன்னருளின் உணர்வாலே மாநிலத்தில் மகிழ்ந்து
அயலறியா தெல்லாரும் அகவுரிமை கொண்டு
ஆனந்த வாழ்வுறுதற் கானஒரு அமயம்
இயலாக இன்றுவந்து இசைந்திட்ட திதனால்
இன்னலிருள் கழிந்தெங்கும் பொன்னொளிதங்கியதே!

ஆதியிருந் திதுவரையும் ஆன்மணுவின் அகத்தே
அருளோடு பொருந்திநின்று ஆருயிர்கொண் டிலங்கி
ஜோதிவளர் சுகக்கனியாய்த் துலங்கிபழுத் தின்று
சுயமாகக் கனிந்தளிந்த வுட்கலந்து புறத்தும்
வேதிசெய்ய மேவுகின்ருர் மெய்யுணர்வாற் கண்டு
மேலான தயவுநெறி யாலவரைக்கூடி
சாதிமதச் சழக்கைவிட்டு சன்மார்க்க ராகி
சத்தியமெய் மேவியிங்கே நித்தியம்வாழ்வோமே!

(தயவு பாக்கள்)

—சரவணனந்தா

சத்திய ஞானக்கோட்டம்,
4, நாகசாமி ஐயர் சந்து,
திண்டுக்கல்.

# DAEIOU

## SATHYA GNANA SABAI

## (The Shrine of True Wisdom)

Omnigracious God Infinite is ever present in the boundless space of our limitless universe With his full power He is revealing Himself from the Innermost of everything. In each and every expression of Him, He is expressing only a very little amount of His power and attribute.

In the beginning, the whole space was supposed to be vacant; but in reality it is not so, it is eternally filled with the Divine force of OMNIGRACE, which is being implemented to evolve into this multifarious universe.

Only for the purpose of bringing out the hidden Truth of Divinity, all the universal activities have been set in motion. We misconceive space as a void, it is ether with its electronic force and this forms important elements which are numerous in science, but all grouped into five elements in our conception. These elements have served our planet to manifest as all animate and inanimate things and human lives. In human life alone, the Divinity has to get evolved to supreme knowledge into the full development of inner core of MAN.

There are vast unknown regions in the material, physical, mental and spiritual planes. Man with his power of mind has the potential power to probe into them. The Eternal Divine Soul of man is revealed to a certain extent commensurate with his inner development and the

cuter life of stainless Live-Divine. In the past, the knowledge of Divine Soul was not clearly comprehended, but through meditation and yogic practice, some spiritual powers and attainments were obtained from the lower nervous centres and from the brain centre.

Many people were of the view that the soul was seated in the heart centre, but it is now discovered to be functioning from the head centre. By the grace of Arutperunjothi the plain Truth of Soul and God is now coming to light by the practical experience of Thiru Arutprakasa Vallalar of Vadalur in Tamil Nadu, By this Omnigracious experience, all the doubtful ideas of God and Soul have been cleared now.

God, the Omnipresent, is eternally existing infinitely: that means, He is ever present both in the smallest particle, and in the limitless universe. Though He is complete, both in the minutest spot and in the largest space, He comes to light in the mid head, where it has been kept lit up from first moment of the creation of the human embryo in the womb of the mother. This light particle is not a newly-created one, but it has come to be embeded from its unseen presence to a cognisable state. From the very same Light particle, every person is getting all his life energy, intellect as well as natural and supernatural powers.

By the reasoning power, we may confirm that this light particle of Divinity is the same Divine Light filling the whole space. It is revealed by His Omnigrace that One Supreme God alone, though indivisible in His form, is coming to enlighten the small spot in a person. This particular particle of the supreme God Himself is the soul of a person. Hence, this soul particle is really the form of

God placed on the head of the human being for his realisation

This Soul-atom evolved into the human being, is only a manifestation of God, from the innermost of ourselves. Thus when we realise our Divine Soul-Truth we have no separate existence except Him only, This Divine Truth of ourselves was not till now known and experienced by us because of our worldly sensuous life. Only when we transcend to the Divine Soul plane, we are able to know this Truth

The physically conscious man was completely unaware of his Divine side, and so, in his sensuous life what all he experienced was of little value and the end was nothing but a miserable death. The life of a philosophical by minded man of soul-knowledge too, was not of much value. Because his soul-knowledge was false. He thought that he was put in bodily bondage and this had to be cut off when only he would be freed to live a soul life.

We are certain that this bodily presence is to make us live the Divine soul-life in this world. Without this personal life, the Divinity can never be experienced. Therefore to live a Divine Life of Bliss, the physical body is essential, and we have to begin a new life of grace from the soul plane itself. With this higher purpose in view, our Sathya Gnana Sabai, the abode of true Wisdom is now opened in us and this abode of True Wisdom is symbolically established in Vadalur by our Vallalar.

The new era of Divine Omnigrace began on the fine morning of 24th May 1867. It was a time of gracious period to get enlightenment both in the Inner World of Soul and the outer world of earth and heaven. At that

time Swami Ramalingam (known as Thiru Arutprakasa Vallalar) was solemnized by the Almighly, with Arutperumjothi for the Deathless Life of Bliss.

After his inner realisation, a shrine of Grace was planned to be constructed, at Vadalur, on a large area of elivated land, thirty kilometers from Chidambaram. This place is the only altar where one can come across the one Supreme God of the whole universe. Here alone, Arutperunjothi is recognisable to rule both the miniature universe (the bodily being of man) and the greater universe of boundless space. By having 'Dharsan' (seeing) of the Divine Light in this shrine of Wisdom at Vadalur, an aspiring soul can get enlightenment in the Inner shrine of Wisdom.

To realise the Divine Light in the Innermost, we have to traverse the four stages namely sensuous body, mind, life and soul. All these stages are depicted in the Temple by the octogonal structure and in the inner central sanctuary with seven coloured screens in the front of the Light.

At the time of Thaipoosam (in the month of January or February) the aspirant realises, the Inner Light or Omnigrace along with the rising sun and setting full-moon on the eastern and western horizons. There are significant representations of pure golden and silver rays on right and left.

By this effulgance we are led into the oneness of Arutperunjothi in the shrine of Wisdom, from where we have to live the Divine life of universal Love.

By means of any other religious practices, temple worship and yoga practices, one could not live a blessed Life

of Bliss in the world. By observing the new doctrine of Living, the Divine Life from the Inner-most, all can get all goodness in themselves. Therefore nobody should think that this shrine of Wisdom is intended to a certain set of people alone or it belongs to a sectarian group. This should not be considered as a place for mere sectarian worship.

The whole humanity is one community. The Eternal Supreme Force of Almighly is working both in and out for the final Goal of Blissful life. The one Supreme God Almighty is bringing out His whole Truth to the present world only now and here. In the course of the universal permeation, the Truth of God was being developed to come out from the Innermost of every particle, though God is ever in a state of fullness or full development.

His existence, power and practical experience in life is yet to be made known in the universe. And, for this, inner divine is actively implementing itself to be shown in the creation of the world. In all the material, physical, vital, mental and spiritual developments, that Divinity has been gradually growing to reach the final stage of Divine Grace for our Self-realisation. Now in this human life, the Gracious God has come to self realisation viz., that both man and God are one and the same in him.

All powerful Omnipresent God has manifested from the Innermost Soul-abode in the form of a developed man of gracious wisdom. Thus, this gracious wisdom is now experienced as a true altar of Him,

The soul in man was considered to be a separate entity other than himself, a physical being; and for obtaining the

Divine Soul iife, it was believed that man had to be relieved from the bodily bondage. But by relinguishing the body, the soul loses all the life and experience and there would be no blissful life after death. So if the soul needs a practical experience, then it must be given a new human life of Divine knowledge.

By the Omnigrace of God, we have now come to the understanding of our Oneness with God in the soul-form. This Divine Soul-self is found located in the mid-head over Medulla-oblongata. To live a life from this gracious soul plane, we have to rise from the sensuous bodily stage to that of higher level life.

Our outer Wisdom Temple of Vadalur is pointing out the inner Truth with which one inseparable Divine life is to be realisable. This Divine Life is intended to be given to everybody who has come to live upon this earth This kind of Godly life is common to all; it is not attached to any particular religion or to a particular sect only. All-the atheists or theists, religious or non-religious, materialist or spiritualist are entitled to get in contact with Inner Light of Omnigrace-Arutperunjothi from where a new reverence for life makes the worldly life blissful.

All the people of the world in any walk of life are in need of a true happy life upon this earth. To achieve the real demand of contented and blissful life, the old and new ways and means have not aided and guided the mankind towards the true Goal of Blessed life; but through the Omnigrace of Arutperunjothi directed from the shrine of Wisdom, the whole humanity will reap the harvest-the Goal.

Our Vallalar of Vadalur, the first God-chosen man of Grace, by living the gracious life from the Inner shrine of

Wisdom, has been awarded the deathless Divine Life of Bliss Indeed the Eternal Supreme God, though omnipresent was, not recognisable till now in His pristine and pure stage, because of His impersonal Form. But now, He Himself has filled the Form of Vallalar to live here in all His Personal spiritual and impersonal Forms for the purpose of bestowing his grace on mankind at their different stages of spiritual development.

Vallalar known to the world as a human body is now completely Divinised. In other words, the Supreme God Himself has assumed the triple divine form of Arutprakasar to govern all the universe for eternity. The One Omnipresent God of Eternity is now recognizable in this full Divinity in the form of Vallalar. This God-Man is the supreme among the Divine Masters. Because the others simply merged in God and disappeared while Vallalar divinised in its earthly body itself Therefore the whole humanity will be profited by this unique guidance of Arutprakasar.

The Divine Flag of Omnigracious God of Infinite Light stands hoisted in the compound of the Wisdom shrine at the left side of the main entrance. The gracious Divine experience is depicted in the white part of the flag which is three times the size of the yellow part. The yellow portion is above, and the white part is below. God in Trinity is reckoned differently by many men of Divine knowledge of various religious faiths. In our bodily form, the gross, subtle and causal,- (or) body, life and soul-(or) Spirit, Holy Ghost, Son and Father-and the three sixes in St. John's Revelation and in Tamil, three sets of six consonants in each. All these are to represent our flag of Arutperunjothi The full Divine Mantram is like this:

## ARUTPERUNJOTHI

## ARUTPERUNJOTHI THANIPPERUNGKARUNAI

## ARUTPERUNJOTHI

Now, there are three Arutperunjothis of six vowel-consonants each and a single Thanipperunkarunai of seven vowel-consonants. This is the one Supreme God in the Oneness of our Self. This Oneness of the Soul is realisable. This realisation is the life-eternal from the Inner sanctuary of our Sathya Gnana Sabai. By the Omnigrace or Thanipperungkarunai the Blissful life is to be evolved from the innermost to an ever lasting Divine Life of 25 experiences in all as represented by the 25 vowel-consonants, and 25 in Tamil as உரு (form).

**An easy method of Arutperunjothi Attainment**

By studying the Inner Light of grace with the guidance of this book and by contemplating on the soul God in our head centre, we can reach the stage of feeling our Divine-Soul Self. Indeed we should not have sensuous desires and hatreds in the day to day life. By extending the Divine Love or 'DAEIOU' from our Soul-abode, we can make all our life Divinised. In a symbolic diagram of Daeiou, the new method of Divine Truth is made easy.

The Tamil "தயவு" three letter word is expanded into a six letter word of 'DAEIOU' in English. In the symbol, from the basic stratum of DAEIOU, the Divine Force or Sakthi rises up to blossem in us with five different forces They are; Porul (Atom), Kiriya (Energies), Gnana (Inspration), Yoga (Omnipotence), and Arul (Unigrace) In course of Inner life, all the above five

forces constitute to make our life immortalised to live in Bliss for ever. Our Inner Divine centre is in the form of 'D' up-turned. From the centre of this 'D' the five forces represented by the five vowels of English are led to fusion of our DAEIOU.

Our body-D is the resultant out come of the ABC of the outer universe. Within this D-body, we have been endowed with the Penta Divine force. This force emerges gradually to make us Divine men to live in Bliss eternally.

This book comes out to spread the Divinity in life, mind and body. It makes the whole human being into Divine Form of universal Blissful life, Therefore this is neither a religious book of any sect nor is this an art or science book of the mundane life. This also is not a book on yoga. You may take this as a book of Divine grace which is common to all for all times and climes. May this bring Bliss to All.

DAEIOU

SARAVANANANDA

SATHYA GNANA KOTTAM
4, Nagaswamy Iyer Lane,
Dindigul-624 001

# உள்ளுறை பொருள் விளக்கம்




அமெரிக்கநாட்டில் ஞானப்பணி ஆற்றிவரும் சுவாமி சச்சிதானந்தா அவர்கள் 18-12-77 அன்று சத்திய ஞானசபை என்ற இந்நூலை சின்னாளப்பட்டியில் வெளியிட்டு ஆசி வழங்கி சிறப்பித்தார்கள்.

# 1. அருட்பெருஞ் ஜோதி

உலகம் அறிந்த ஒளிகளில் விண்மணியாம் ஞாயிறுதான் மிகப் பெரிதாகத் தோன்றுகிறது.

ஆனல் இதனிலும் பேரொளியான ஜோதிக்கோளங்கள் மிக மிகத் தொலைவில் இருந்து ஒளி வீசிக்கொண்டிருப்பதால், சின்னஞ்சிறு விண்மீன்களாய் மின்னுகின்றன.

இவை போக நாம் காணும், சந்திரன், செவ்வாய் முதலிய கோள்கள், நெருப்பு, மின்னல் ஒளி, மின்சார ஒளி எல்லாமும் ஜோதியின் அம்சங்களே.

இவ் ஒளிகளுக்கு மூல ஆதாரம், அகன்ற வானவெளியில் நிறைந்துள்ள மின்காந்த அணுக்கள்தான். இதை விஞ்ஞானமும் நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது.

இந்த மின்காந்த நுண் அணுக்கள் எங்கும் நிரம்பி இருப்பினும், கண்களுக்குத் தெரியாமல் நீலவானத்தில் நிறை கருப்பொருளாக இருந்தே எல்லாவற்றையும் காரியப்படுத்துகின்றன.

மேற்படி நுண்மின் அணுக்கள் இயக்கப்பட்டுப் பல்வேறு ஒளிப்பொருள்களாயும், ஒளியற்ற பொருள்களாயும், உயிரின வடிவங்களாயும், ஆற்றல்களாயும், தோற்றங்களாயும் உருப்பெறுகின்றன.

வளர்வதும், சிதைந்துபோவதும், பின்னர்ப் புதிதாய் விளைவுகொள்ளுவதுமாக இருக்கின்றன.

இந்த நிகழ்ச்சிகள் எதனுல் எப்படி நடைபெறுகின்றன என்பது பற்றி, மெய்அறிவு உடையோர் உள்உணர்வால் ஒருவாறு தெளிந்து வெளியிட்டு இருக்கின்றனர்.

இந்தப் புறநிலைத் தோற்றங்களுக்கு எல்லாம் அகம் இருந்து காரியப்படுத்துகின்ற ஒன்று, எல்லாம்வல்ல நித்தியத்தன்மைகொண்டது. தன் பேராற்றலால் புறத்தே யாவையும் நிகழ்த்தியவண்ணம் இருப்பது. இதை உணர்ந்து தெரிவித்து இருக்கின்றனர் நம் ஆன்ருேர்.

அந்த அறிவதற்கு அரிய பேர் ஆற்றலைத்தான், இறை அருள் என்று திருவருட் பிரகாச வள்ளலாரின் அனுபவமாக இப்போது காண்கிருேம்.

இந்த அருள்தான் நித்தியமாய் அகத்திலே இருக்கிறது: புறத்தே அகண்ட வெளி முழுவதையும் காணமுடியாத நுண் ஒளி நிலையாகவும் இருக்கிறது. அந்த நுண் ஒளியால் காணப்படுகின்ற எண்ணற்ற ஜோதி அண்டங்களையும், பிண்டப் பொருள்களையும், ஆக்கியும், வளர்த்தும், அழித்தும், புதுப்பொலிவோடு எல்லாவற்றையும் தோற்றுவித்துக் கொண்டும் இருக்கிறது.

இப்படிப் புறத்தோற்றம் மூலம்தான் அந்த அக அருள் ஆற்றல் அறியப்படுவதாக இருக்கிறது.

அருள்நிலை, அகத்தே ஒரேவிதமாய் என்றும் இருக்க, புறத்தே அதன் ஆற்றலும், தோற்றமும், சதா விரிந்து விளங்குவதும், சுருங்கி மறைவதுமாய் இருக்கிறது.

இந்த அக அருள் ஆற்றலும், புற நிறை ஒளி நிலையும் ஒன்றை ஒன்று பிரியாமல் இணைந்து விளங்குவதுதான் நித்திய அருட்பெருஞ் ஜோதி என்று அறிந்துகொள்ளவேண்டும்.

நித்திய அருட்பேரொளி, அகண்ட வெளி முற்றும் நிறைந்து இருக்கிறது. அத்துடன் எப்பொருள்களுக்கும் எவ் உயிர்களுக்கும் அகமிருந்து, அருளாட்சி புரிந்து வரு கிறது. இதனுல் கடவுள் எங்கும் இருக்கிறுர் என்ற உண் மையைப் புரிந்துகொள்ள முடிகிறது.

**கடவுள் உண்மை :**

இந்த அருள் ஒளி இறை உண்மை உணரப்படாதபோது, அகத்தை 'உள்' என்றும், புறத்தைக் 'கட' என்றும் கூட்டிக் கடவுள் என்று கற்பிக்கப்பட்டது.

கட என்று புறத்தோற்றத்தை ஏன் குறிக்கவேண்டும்? தமிழ் எழுத்தின் உயிர் மெய் வரிசையில் 'க' முதல் எழுத்து. 'ட' ஐந்தாவது எழுத்து. பஞ்சபூதங்கள் ஐந்து. இந்தப் பஞ்ச பூதங்களால் ஆன உலகத்தைத் தமிழ் எழுத்தின் உயிர் மெய் வரிசையில் உள்ள 'க' என்ற முதல் எழுத்தையும் 'ட' என்ற ஐந்தாவது எழுத்தையும் சேர்த்து 'கட' என்ற சொல்லால் குறிப்பிட்டார்கள்.

ஆகவே கடவுள் என்றசொல் நமது இறை உண்மையைப் புறநோக்கில் கண்ட 'கட' என்ற சொல்லுடனும் அகநோக் கில் கண்ட 'உள்' என்ற சொல்லுடனும் சேர்ந்து கடவுள் ஆகியது. இதையே ஜோதியும், அருளும் எனக் காண்கிறேம்.

கடவுள் உண்மையை அகம்இருந்து காணும் அனுபவ நிலையைக் குறிப்பது அருட்பெருஞ் ஜோதி. இந்த அருள் நிலை அடையாததற்கு முன்னுல் புறத்தில் இருந்து அறியப் பட்ட இறை உண்மை கடவுள் எனக்கொள்ளப்பட்டது.

இதுவே தொல்காப்பிய காலத்துக்கு முன்னுல் கந்தழி எனக் கருதப்பட்டு வந்தது. கந்து, அழி - அதாவது கட்டை அறுக்கின்ற ஒரு பொருளை, வானம் முழுவதும் நிறைந்து இருந்த ஒரு பொருளை, கந்தழி ஜோதியாக விளங்கிக் கொண்டிருந்தனர் முன்னேர்.

பின்னால் வந்தவர்கள் கடவுள் உண்மையை வெளிப்படையாகக் காட்டவில்லை. சிவம் முதலான தெய்வத்தின் பெயர்கள் பலவற்றால் வரலாற்றுக் கற்பனையுடன் வழங்கி விட்டார்கள்.

எனவே இன்று நாம் காணுகின்ற அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் என்ற பொருள்தான், எல்லாக் கடவுள்களின் பெயர் களாலும் சுட்டப்படுகிறது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

இந்த உண்மையை உள்ளவாறு அறியாமல், தெய்வங்களை வேறு வேறு என எண்ணி வழக்காடுவதும், எந்தத் தெய் வமும் ஒன்றே என வெற்று வாய்மொழியால் கூறிக்கொண்டு இருப்பதும் பொருந்தாது.

எங்கும் நிறைந்த பரம்பொருள் இரண்டற்ற ஒன்று தான். அது அகம் நின்று விரிவுறுகிறது. பல்வேறு வடி வங்களுடனும் திகழ்கிறது.

அகம் அனுபவப்படும்போதுதான் அது புறத்தையும் தன்னுடன் கலந்து திகழ்வது தெரிகிறது. புறம் இல்லையேல் அக அனுபவத்திற்கு வழி இல்லை.

ஆதலின், உள்ளே இருப்பதை மட்டும் கடவுள் எனவும் புறத்தை மாயை, மித்தை எனவும் துறந்து இழந்து விடுவது அறியாமை.

கடவுள், அகமும் புறமும் நிரம்பிய அருள்ஒளி வடிவு கொண்டிருத்தல் போலவே, நாமும் அக ஆன்மாவும் புற உடம்பும் பெற்றுத்தான் நிறை வாழ்வில் விளங்குதல் வேண்டும் என்பது திருவுள்ளம்.

ஓர் ஆன்மாவுக்கு இம்மனித பக்குவப் பிறப்பும் வாழ்வும் ஏற்படாதபோதும் சரி, உடலை இழந்து, இறப்பு நிலையில் ஒடுங்கிக்கிடக்க நேர்கின்றபோதும் சரி, இறை இன்ப வாழ்வு அதற்கு இல்லை என்பது நிச்சயம்.

நித்திய அருட்பெருஞ் ஜோதிக் கடவுளே, ஒருவர் பக்குவம் பெருத காலம் எல்லாம்கூட அவர் அகத்தில் இருந்து ஆண்டுவருகிருர். பக்குவம் பெருதகாரணத்தால் ஒருவருடைய புறவாழ்வு நிலையற்றதாய்க் கழிந்துபோய்க் கொண்டே இருக்கிறது.

கடவுளேதான் எப்பொருளாயும் எவ் உயிராயும் இருக்கிருர். தோற்றமும் மாற்றமும் மறைவும் அருளி வருகிருர்.

முடிவில் நித்தியமாகி இருக்கின்ற அகஇயல்பு விரிந்து அனக நிலையை அடையும்போது, புற உடம்பும் அருள்மய மாய் அழியாமை பெற்று நித்தியமாகி விளங்குகிறது.

இதுதான் நம் திருவருட் பிரகாச வள்ளலார் வாழ்வில் ஏற்பட்ட மரணமில்லாப் பேரின்ப சித்தியாகும். பெறுதற்கு அரிய பெரு வாழ்வு நிலையுமாகும்.

அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் ஒருவர்தான் எங்கும் என்றும் இருந்து,தம் மெய் அனுபவத்தை வழங்கி இப்பிர பஞ்ச காரியத்தைப் புரிந்து வருகிருர்.

அந்த அருட்ஜோதி ஆண்டவரே, இப்போது திரு அருட்பிரகாச வடிவத்துடன், தம் அருட்செயலோடு வெளிப்பட வாழ வந்திருக்கிருர்.

இனி, ஒவ்வொரு பக்குவம் பெற்ற மனித வடிவிலும் அருட்பெருஞ் ஜோதி வெளிப்பட்டு ஆனந்த வாழ்வுடன் திக ழப் போகிறது. இது சத்தியம்.

ஆகவே, மக்கள் இதுவரை கடவுள் உண்மையை அறியாது, புலன் நெறி வாழ்வில் மூழ்கி அழிந்துபோய்க் கொண்டு இருக்கிருர்கள். அதுபோல வீண்போகாமல் நம் அருட்பெருஞ் ஜோதிக் கடவுளை உள்ளபடி உணரவேண்டும். மெய்யருள் அறிவு என்னும் சத்தியஞான சபையிலே அவ ரைத் தரிசித்து வழிப்பட்டு உய்யவேண்டும்.

அந்த எல்லார்க்கும் உரிய ஆண்டவரே தன் தனிப் பெருங் கருணையோடு கோடி கோடி அருட்ஜோதிக் கதிர்

பரப்பிக்கொண்டு வெளியாகி இருக்கிறார். இந்த அருட் பெருஞ் ஜோதிக் கடவுளை சத்திய ஞான சபையில் தரிசித்து, கலந்து, ஒன்றி, ஆனந்த வாழ்வில் தழைப்போம்.

அருட்பெருஞ் ஜோதி என்பதே எல்லாக் கடவுளையும் பொதுவாக உணர்த்துகிறது.

ஆகையால், அந்த மெய்ப்பொருளை வெளிப்பட உணர்த் தாத பல்வேறு காரண காரிய கற்பனை தெய்வப் பெயர் களைப் பார்த்து மருளில் மயங்கி வாழ்வில் அவலமுற்று அழிகின்றனர். இது திருவருளுக்குச் சம்மதமான காரியமல்ல.

இந்த அருள் ஒளி ஆண்டவர் உண்மையை, ஆதித் தமிழ் ஞான சித்தர்களும், உணர்ந்திருந்தார்கள். அதனையே கந்தழியாகவும், பின் சிவம் ஆகவும் கற்பித்துக் கொண்டார் கள். தம் உள்ளக் கருத்தைப் பிறருக்குத் தெளியவைக்கும் பொருட்டு தமிழ்மொழியை உருவாக்கினார்கள். அதைச் சீரும் சிறப்பும் உற்று விளங்கச்செய்து இருக்கிறார்கள். அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் உண்மையை, சிவம் விளங்குகிற தெய்வத் தமிழாக வெளியாக்கினார்கள்.

**தென்னாடுடைய சிவம்**
**எந்நாட்டவர்க்கும் இறைவன்**

நமது பரம்பொருள், எவ் உலகத்திலும் உள்ள எவ் உயிர் களுக்கும், எப்பொருள்களுக்கும் இறைவன் என்ற கருத்தை மனத்தில் இருத்தி, இந்தச் சிவம் சுட்டிக்காட்டுகின்ற உண் மையை ஆய்ந்து தெளியவேண்டும்.

முதலாவதாகிய ஆதி நிலையைப் பூர்வம் என்றும், முடிந்த ஈற்று நிலையை உத்தரம் என்றும் குறித்தல் வரலாற்று முறை ஆகும்.

நம் பதியினுடைய ஆதிநிலை, உலக உயிர்ப் பொருள்கள் ஏதும் தோன்றாத காலத்திலேயே, அகண்ட பெருவெளி முழு வதும் நிறைந்து நிலைத்திருந்த நிலையாகும். இதுதான் அருட் பெருஞ் ஜோதியின் நிலையும் ஆகும்.

அந்தப் பதியே இன்று பக்குவம் பெற்ற மனித வடிவத்தில் அருட்பிரகாசத் திருவுருவோடு திகழ்கிறது. இதுவே முடிந்த நிலையாகவும் இருக்கிறது.

இந்தக் கடவுளின் பூர்வ உத்தர நிலைகளே, தெற்கு, வடக்கு என இன்றைய வழக்கில் விளங்குகின்றன.

அருட்பேரொளி பரவிடும் இது சமயம், மெய்ப்பொருள் அனுபவத்தை நாம் அடைய, நமது மெய்யறிவு நிலையமாகிய சத்திய ஞான சபையிலே அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரைத் தரிசிக்கும் பேறு பெறுகிறோம்.

இந்த நம் அருட்ஜோதிபதி அணுத்தன்மையுடன் கரு தோன்றுகிற காலத்திலேயே வெளிப்படுகிறது. திருஅருளால் அது இப்பொழுது உயிருடனும் உடம்புடனும் உள்ளத்துடனும் முழுவதும் நிறைந்து, நிறை மனிதனாக விளங்குகிறது. இது உண்மை. இம்மனிதக் கருப்பிண்ட சிருஷ்டியில் முதலில், கருப்பையில் தோற்றுவது கடவுட் ஜோதி அணு.

இந்த ஒளி அணுநிலை பூர்வமாக விளங்குகிறது. இந்த ஒளி இருக்கும் கரு, வளர்ச்சியின் நிறைவில், குழந்தையாக வெளிப்படுகிறது. குழந்தை வளர்ந்து மனிதனாகிறது. இந்த மனிதக் கூட்டமே இன்று உலகில் வாழ்கிறது.

ஆகவே, ஆன்மக் கடவுள் நிலையை பூர்வம் ஆகவும், அதற்குமேல் விளைவுகொண்டு விளங்கும் மனித உடலை உத்தரமாகவும் கொள்ளலாம்.

உத்தரம் வடக்கு; மனிதனின் உடல். பூர்வம் தெற்கு: உலக உயிர்கள் எல்லாவற்றுக்கும் இப்பூர்வமாகிய தென்னகமே அதாவது தலைப்பகுதியே கடவுள் நிலையமாகும். உச்சந்தலைக்குக் கீழே உண்ணாக்குக்கு மேலே புருவ மத்திக்கு நேரே எல்லா உயிர்களிலும் சிவம், அதாவது இறைவன் இருக்கிறான். இதைத்தான் தென்னாடுடைய சிவம், எந்நாட்டவர்க்கும் இறைவன் என்று கூறியுள்ளது.

எனவே, கரு அணுநிலையில் ஒளி முதலில் வெளிப்பட்டு அது வளர்ந்து மனிதனாகிறது. எவ் உலகத்திலும் உள்ள எத்தகையவர்களுக்கும் உள் இருந்து அந்த ஒளி ஆள்கிறது. அந்த ஒளிதான் நம் அருட்பெரும்ஜோதி ஆண்டவர்; அவரே ஒன்றாகிய ஒப்பற்ற இறைவரும் ஆவர்.

இந்த உண்மையை உள்ளபடி அறிகின்றபோதுதான், **தென்னாடுடைய சிவம் எந்நாட்டவர்க்கும் இறைவன்** என்பதன் உண்மைக் கருத்து இன்னதென்று, தெரிந்து கொள்ள முடியும். இவ்வாறு தெரிந்து கொள்வதால் எல்லாருக்கும் இறைவன் ஒருவர்தான் என்ற உண்மையையும் புரிந்து கொள்ளலாம். இதனால் மக்கள் சமுதாயம் முற்றும் ஒத்து வாழ முடியும். அவ்வாறு ஒத்து வாழ்வதால் மக்கள் சமுதாயம் உயர் நலம் காணலாம். இது திண்ணம்.

உத்தர ஞான சிதம்பரம் என்னும் வடலூரில் இருந்து அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் தம் கோடிக்கணக்கான அருட்ஜோதிக் கதிர்களைப் பரப்பிக் கொண்டு எழுந்திருக்கிறது. அந்த அருட்பெரும் ஜோதிக் கடவுளை எத்திசை மக்களும் வந்து வந்து தரிசித்து, உள்ளும் புறமும் உவகை பொங்க ஆனந்த வாழ்வில் ஓங்கப் போகிறார்கள்.

# 2. உயிர்ப் படைப்பின் நோக்கம்

மனிதனுக்கு, ஆதிமுதலே ஆறுவதாகிய மன அறிவு வழங்கப்பட்டு இருக்கிறது. அந்தக் காரணத்தால், சிந்தனு சக்தித் திறம் பெற்று, அவன் தன்னைச் சூழ நோக்கினுன். ஐம்புலன் உணர்வோடு பலவற்றையும் ஆய்ந்து ஆய்ந்து, ஐயமும் திரிபும் நீங்கினுன். இவ்வாறு நீங்க நீங்க உண்மை யைப் படிப்படியாக அறிந்துவந்திருக்கிருன்.

இதற்கு மாறுபாடாகப் பலவற்றைக் கருதியும், தீர்மா னித்தும் இருந்தவர்களுக்குப் பல ஐயங்கள் தோன்றின. உள்ளத்திலே அவா, வெகுளி, மயக்க இருள் நிரம்பி இருந் தவர்களால் உண்மையைக் காண முடியவில்லை.

இந்தப் பெரும் பிரபஞ்சம் எப்பொழுது, ஏன் தோற்று விக்கப்பட்டது? இதில் எண்ணற்ற உயிர்களும், பொருள் களும், ஆற்றல்களும் ஏன் வெளியாக்கப் பெற்று இருக் கின்றன? இவை பன்னெடுங் காலமாக விளங்கும்படி ஏன் செய்யப்பட்டு வருகின்றன? இந்த உலகில் மனித இனம் மட்டும் அறிவும், ஆற்றலும் அடைந்து ஆய்ந்து தெளிந்து முன்னேறும்படி இயற்றப்பட்டுள்ளதற்கு உரிய காரணம் என்ன? இந்தக் கேள்விகளுக்கு உரிய விடையை இதுகாறும் சரியாகப் புரிந்துகொள்ள முடியாது இருந்தது.

உள் அறிவு விளைவு கொள்ளாத மக்கள் உண்மையைப் புரிந்து கொள்ள முடியாமல் தம் முயற்சியை வீண் எனக் கருதி விட்டுவிட்டனர்.

உலக உயிர்களைப் படைத்ததின் நோக்கமும் முடிவும் மன அறிவினால் எவ்வளவு முயற்சி செய்தாலும் அறிந்து கொள்ள முடியாதவை. அதைப்பற்றி ஏன் வீணில் நினைந்து துன்புற வேண்டும் என்று எண்ணித்தான் அதனைக் கைவிட்டனர்.

முடியாததை முடியும் எனக் கருதுவதும், முயற்சித்து வீண் போவதும் எவ்வளவு அறியாமை என்று ஏளனம் செய்கின்றனர் உலகாயத, பொருளாயத மக்கள்.

ஆனால் மனம் சுத்த அருள் ஒளிமயமாகிறபோது பிரபஞ்சப் படைப்பின் காரண காரிய ரகசியமெல்லாம், நன்கு அறிந்துகொள்ளக்கூடியதாக இருக்கிறது.

இத்தருணம் எல்லாம்வல்ல, எல்லாமான ஆண்டவரின் திருவருள், தானே அதுவாய் இருந்து அறிவிப்பதும், நாமாயிருந்து அறிவதுமாய் உணர்கிறோம்.

அருட்பெருஞ்ஜோதியின் இத்திருவருள், இம்மனிதப் பிறப்பில் உண்மை காணும் மெய்யறிவு வண்ணமாக விளைவு கொள்ள இவ்வளவு நெடுங்காலம் ஆகி இருப்பதை இப்போது அறிகிறோம்.

இந்த மெய்யறிவாகிய, அருள்ஞானம் விளைவதற்கு முன்னால், பூத பௌதிக ஜடமூட நிலையில் உயிர்க்குலம் இருந்தது. இந்த உயிர்க்குலத்தின் அகவடிவம் ஆன்ம அணு. இது ஓரறிவு முதல் ஆறறிவு நிலை வரை, ஒவ்வொரு இனப் பிறப்பிலும், பலகாலம் பிறந்து பிறந்து வாழ்ந்தது. இவ்வாறு வாழ்ந்து வாழ்ந்துதான், சிறிது சிறிதாக அறிவு விளக்கம் பெற்று மேலேறி வந்திருக்கிறது.

மேற்படி மெய்யறிவு விளைவுற்று அனுபவம் ஏற்படுவதற்காகவே, நித்தியமான அருட்பெருஞ்ஜோதி, ஆதியில் சூனியப் பெருவெளியில் நிரம்பியிருந்தது. அது திருவருளால் வெளிப்படத் தொடங்கியது. அப்போது முதலில் தோன்றியது வான் பூதம், அதிலிருந்து காற்றும், தீயும், நீரும்,

மண்ணும் ஒன்றில் இருந்து ஒன்ருகத் தோன்றின. அவற்ருல் இந்த நில் உலகும் இதில் அனைத்து உயிர் இனங்களும் தோன்றின. பின்னர் அவைகளுக்குத் தேவையான எல்லாப் பொருள்களும் ஆற்றல்களும் வழங்கப்பெற்றன. இவ்வாறு தான் ஒவ்வொரு பக்குவ ஆன்மாவும், இன்றைய உயர்ஞான நிலைக்கு ஏறியுள்ளது.

இப்பொழுது புரிகின்றதல்லவா இந்தப் பிரபஞ்ச சிருஷ்டியின் நோக்கம் ?

இந்தப் பேருலகமும், இதில் நிகழ்கின்ற எந்தச் செயலும், தோற்றமும், எந்த நோக்கமும் இல்லாமல் ஏதோ தன் இச்சையாக ஏற்பட்டுள்ளன என்று கருதுவது அறியாமை.

அளப்பரிய பெருவெளியில் எண்ணரிய ஜோதிக் கோளங்கள் இருக்கின்றன. அவற்றைச் சூழ வருகின்ற நில உலகங்களும் இருக்கின்றன. அந்த உலகங்களில் தோன்றி அறிவு விளைவு கொண்டு திகழ்கின்ற மக்களும் இருக்கிருர்கள். அவர்கள் ஓர் ஒப்பற்ற அழியா இன்ப வாழ்வு நிலையை எய்தவே நித்திய வாழ்வு என்ற குறிக்கோளை நோக்கி அனுப்பப் படுகிருர்கள்.

இதுதான் உலக உயிர்ப்படைப்பின் நோக்கமாகும். இந்த உலக உயிர்ப்படைப்பு எப்போது தொடங்கியது என்று தெரியவில்லை.

அதுதொடங்கி பலகோடி யுகங்கள் ஆகியிருக்கும் என்பம் மட்டும் ஊகிக்க முடிகிறது. இதற்கு மேல்விளைவும் முடிவுது மனத்தால் ஆய்ந்து உரைக்க முடியாதவை.

எனினும், மனித இனம் அழியாஅருள் இன்பப் பெருநிலை அடைவது உறுதி. அதனுல் அது அளவு குறிக்கப்படாத நெடுங்காலம் ஆனந்த வாழ்வில் வாழப்போவதும் திண்ணம். மனிதன் என்றும் நிறைவு உடையவனுக வி்ளங்கப் போவதும் சத்தியம்! உலக உயிர்ப்படைப்பின் முடிந்த நோக்கமும் இதுவேயாகும்.

இந்த உயர்ந்த நோக்கத்தோடுதான், ஆண்டவரின் திரு அருள் எல்லா உலக உயிர்ப்படைப்புகளின் விதி முறைகளையும் சட்ட திட்டங்களையும் கொஞ்சமும் முரண்பாடும், தவறும் இல்லாமல் செயல்படுத்திவருகிறது.

அருளின் மாண்பை அறியாதவர்களும், உண்மையை அறியாதவர்களும் உலக உயிர்களின் இயக்கங்கள் யாவும் இயற்கையே என்று கூறி நிறுத்திக் கொள்கிறார்கள்.

உண்மையில் அந்த இயற்கை என்பது, மெய்யறிவு இன்ப எல்லையை நோக்கி எல்லாவற்றையும் செலுத்தி வருகிற, எல்லாம்வல்ல திருளருளே என அறிந்துகொள்ளவேண்டும்.

ஆதலின் இயற்கை என்பது அறிவற்ற காரண காரிய உண்மை இல்லாத ஒன்று எனக்கொள்ளுதல் அறியாமை.

சுத்த சத்விசாரத்தால், உலக உயிர்களின் படைப்பையும், செயற்பாட்டையும், முடிவான குறிக்கோளையும் பற்றிய உண்மைகளை எல்லாம் உள்ளபடி அறிகிறோம்.

மெய்ஞ்ஞானம் இல்லாத விஞ்ஞானக் கலை வளர்ச்சியால், இதுவரை படைத்த படைப்புகளாலும், விளைந்த விளைவுகளாலும் அடைந்த நாகரிக வாழ்வு மிக மிக அற்பமானது என்று இப்போது அறிகிறோம்.

கடவுள் படைப்பின் கருத்தை உணர்ந்துகொள்ளாமல் கலையின் படைப்பில் களித்து, காலத்தை எல்லாம் வீணாக்கிக் கொண்டிருந்துவிட்டோம். இது எவ்வளவு அறியாமை என இப்பொழுதுதான் அருளால் அறிகிறோம்.

இறைவனின் அருள் படைப்புக்கு நிகராக, கலைஞன் என்ன படைத்துவிட முடியும்? கடவுளின் படைப்பில் உயிர்ப்பும், அகப்புற வளர்ச்சியும், மேலான குறிக்கோள் நோக்கமும் உண்டு.

ஆனுல் மனிதனின் படைப்பில், ஜீவனில்லே; மெய்யாற்ற லில்லே; பெறுதற்கு அரிய குறிக்கோளும் இல்லே.

இவற்றுக்குப் பதிலாக ஓரளவு புலன் இன்ப மயக்கமே இவன் படைப்பில் இருக்கிறது.

மெய்ஞ்ஞான அருள் அறிவு கொண்டு வாழத் தொடங்கு கிற மக்களுக்கு, உலக உயிர்ப் படைப்பின் உண்மைநோக் கம் விளங்கும்படி நாம் எந்தக் காரியத்தையும் செய்ய வேண்டும்.

உலகப் பொருள்களேயும், ஆற்றல்களேயும், உயிர் இனங் களேயும், விளேவுகளேயும், அடங்காத புலன் இச்சை காரண மாக, மிக மிக அதிகமாக, தேவைக்கு மேல் ஆக்கி ஆக்கிக் குவித்தும், கெடுத்தும் பாழ்படுத்திக் கொண்டும் இருக் கிருேம்.

இனியும் இப்படிச் செய்யக்கூடாது என்று திருவருள் நமக்கு உணர்த்துகிறது.

அருள் இன்ப அனுபவம் ஒன்றையே குறிக்கோளாக வைத்து, மக்களுக்கு உயிர் விளக்கமும், அறிவு விளக்கமும் உண்டுபண்ணி ஜீவ தயவுச் செயலோடு வாழ வகை செய்தல் நம் கடமையாகும்.

ஜீவ தயவுச் செயலில் ஓங்கும் புதியதொரு மக்கள் சமு தாயத்தைப் படைத்திடல் நமது கடமை. இது ஆண்டவர் இட்டிருக்கும் ஆணேயுமாகும்.

உலகில் இச்செயல் வெளிப்படத் தொடங்கிவிட்டால், வீண் முயற்சியும், பெருவாரியான ஆக்கலும் அழித்தலும் ஒழிந்துபோகும். தயா நன்முயற்சியுடன் மக்கள் ஒத்து வாழத் தொடங்குவார்கள். அதனுல் அவர்கள் வாழ்வு சீரும் சிறப்புமாகத் தழைத்து ஓங்கும். அப்போது அருள் ஆணே யால் காலத்தே அளவான மழை பொழியும், வளமெல்லாம் பெருகும். தேவையற்றன எல்லாம் ஒழிந்துபோகும். அருள்

இன்ப வாழ்வே எங்கும் நிரம்பி நிற்கும். இந்த அற்புதத்தை உலகம் பார்த்து மகிழும்.

உலகப் படைப்பின் உயர்நோக்கம் இன்னதுதான் என எவரும் அறியவும், அறிந்து அதற்குத் தகுந்தவாறு வாழவும் வழிவகை செய்ய உதித்துள்ளது அருட்பெருஞ்ஜோதி.

இந்தத் தோற்றம் வெளிப்படுவதற்கென்றே அருட் பெருஞ்ஜோதி ஆதி முதலே ஒரு திட்டத்துடன் இயங்கி வருகிறது. ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் நடத்தித்தான் வருகிறது. இந்த உண்மையை இப்போது உணர்கிறோம். இந்தப் பெரிய பிரபஞ்சப் படைப்பில், எண்ணரிய பிரம்ம அண்டங்கள் உள்ளன. ஒரு பிரம்ம அண்டம் என்பது நிலவுலகில் இருந்து காணுகிற மண்ணும், விண்ணும், சூரிய, சந்திர, நட்சத் திரங்களும், மேற்கவிந்த வான் கவிகை வெளித்தோற்றமும் சேர்ந்தது. இது பிரபஞ்சத்தில் ஒரு கூறு ஆகும்.

இதுபோல் பல பிரம அண்டங்களைக் கொண்டது நமது மாபெரும் பிரபஞ்சம் என்று அறிகிறோம்.

ஒரு குறிப்பிட்ட பிரபஞ்சத்தில் மக்களைத் தோற்றுவித்து அவர்கள் நிறை வாழ்வு பெறுவதற்கு என்றே, அவர்களுக்கு உரிய பூவுலகத்தையும், ஐம்பூதக் கோள்களையும், சூரிய சந்திர கோளங்களையும் தோற்றுவித்து அவை ஒளி வழங்கி விளைவு கொள்ளும்படி இயக்கப்பட்டு வருகின்றன.

இவ்விளைவின் நிறைவு என்ன? இந்த நிலவுலகில் அருட் பெருஞ்ஜோதிக்கடவுளே தன் தனிப்பெருங்கருணை முழுமை யாக வெளிப்பட்டு விளங்க, அருட்பிரகாச வடிவோடு தோன்றி இருப்பதுதான்.

இந்த அருட் பிரகாச நிறை மனிதத் தோற்றம் முதலில் எந்த ஒரு நில உலகத்திலும் வெளிப்படலாம்.

ஆனால், அப்படி முதலில் வெளிப்பட்டுள்ள அருட்பிரகாச வள்ளல் வடிவம், நம் நில உலகில்தான் வெளிப்பட்டுள்ளது.

இதைத் திருவருட்பா வாயிலாக, அகத்தும், புறத்தும் இருந்து உணர்த்தத் தெரிந்து கொள்கிறோம்.

பிற எந்த உலகத்திலும், எந்தக் காலத்திலும் இத்தகைய திரு அருட்பிரகாச, நிறை மனித நித்தியானந்த வடிவம் வெளிப்பட்டதேயில்லை. இதற்கு வேறு சான்றும் தேட வேண்டியதில்லை. ஏனெனில் இதுவரை, பண்பட்ட மனித உள்ளத்தில் வெளிப்பட்டு, அனுபவத்தில் அடைந்த சக்தி, சித்திகளால், மனிதன் பலவகையான பதமுத்திகளைப் பெற்றிருக்கிறான். என்றாலும், முடிவில் இறைவனடியில் மறைந்து ஒழிந்தேபோகிறான்.

மரணமில்லாத நித்திய இறைமயமான வாழ்வுடன் மனிதன், நிலைத்து வாழவில்லை.

இதுவரையில் அப்படி ஒருவன் நிலைத்து வாழக்கூடும் என்று கருதவும் இடமில்லாமல் இருந்தது.

முன்பு என்றேனும், எங்கேனும் மரணமில்லாத நிலையில் ஒரு மனிதன் வாழ்ந்ததாகவும் தெரியவில்லை. அவ்வாறு யாரேனும் வாழ்ந்திருந்தால் ஒரே கடவுளான அருட்பெருஞ் ஜோதி ஒவ்வொரு ஆன்ம வடிவில் இருந்தும் வெளிப்பட்டு விளங்கி இருக்கும். பெருவாழ்வு அனுபவமும் முன்பே வெளியாகியும் இருக்கும்.

அப்படி யாரும் வாழாததால், மனிதன், கடவுளாக முடியும் என்பதையும், அவன் தனித் தன்மையுடன் நித்தியமாய் நிலவமுடியும் என்பதையும் நம்ப முடியாமல் இருந்தது.

ஆனால், நம் செந்தமிழ் நாட்டில்தான் அருட்பெருஞ் ஜோதி, அருட்பேரின்ப வாழ்வு தழைத்திடத் திருவருட் பிரகாச வடிவு ஏற்று வெளிப்பட்டு இருக்கிறது. திருவருளாலே இந்த உண்மையை உணர்கிறோம்.

''போற்றி யுரைக்கின்றேன்
பொய்யென் (று) இகழாதீர்
நாற்றிசைக்கண் வாழும்
நமரங்காள்—ஆற்றலருள்

அப்பன் வருகின்றான்
அருள்விளையாட் (டு) ஆடுதற்கென் (று)
இப்புவியில் இத்தருணம்
இங்கு.''

எனத் திருவருட்பா இதற்கு அகச்சான்று தருகிறது.

''நோவாதுநோன் (பு) எனைப்போல்
நோற்றவரும் எஞ்ஞான்றும்
சாவா வரம்எனைப்போல்
சார்ந்தவரும்—தேவாநின்
பேரருளை என்போலப்
பெற்றவரும் எவ்வுலகில்
யார்உளர்நீ சற்றே
அறை.''

என்ற வள்ளலாரின் அனுபவ வாசகத்தாலும் உண்மையைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

எனவே உலக உயிர்ப்படைப்பின் முடிந்த நோக்கம், அருட்பெருஞ்ஜோதி சித்தி வாழ்வு, மனித வடிவில் ஏற்பட வேண்டும்; உலகம் எல்லாம் அதை அடைந்து அனுபவிக்கச் செய்யவேண்டும் என்பதுதான்.

திருவருட் சம்மதமாகவே இப்போது வடலூர் சத்திய ஞான சபையில் இருந்து, கோடி கோடியாக அருட்பெருஞ் ஜோதி மகா மந்திர நாத ஒலி வெளிப்பட்டு, உலகம் எல்லாம் பரவ ஆரம்பித்து இருக்கிறது.

இந்த உலகத்தில் உள்ள எல்லார் உள்ளிருந்தும், எதிர் ஒலித்து எழுந்து வான் பெரு வெளி முற்றும் என்றும் நிரம்பிக் கொண்டே இருக்கிறது. இந்த அருட்பெருஞ்ஜோதி.

இது புறத்தில் இருந்து பரவுவதுடன், ஒவ்வொரு வரின் அகத்தில் இருந்தும் உணர்விலே, உயிரிலே, உடலிலே பரவிச் சிந்தனையும்,சொல்லும், செயலும், அருள் தன்மை பெற்று விளங்கி ஓங்கவேண்டும்.

பரவுதல் என்பது வந்தித்து வழிபட்டு உய்வு பெறுதல் என்ற பொருளேயும் கொண்டதாய் இருக்கிறது. இதைப் புரிந்துகொள்ளும்போது அருட்பெருஞ் ஜோதியின் 'தனிப் பெருங் கருணை'ச் செயலே வியக்கவேண்டி இருக்கிறது.

இதனுல் உலக உயிர்ப் படைப்பின் முடிந்த நோக்கம் அவை நித்திய வாழ்வு பெறுவதுதான் என்பதை அறிய வேண்டும். அதை அடைய முயலவேண்டும்.

வடலூர் சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவு விழாவும் ஜோதி தரிசனமும் நடைபெற்ற (19. 6. 1977) பூசநாள், ஒரு புண்ணியப் பெருநாளாக அமைந்தது.

இந்த நாள் முதல் சத்தியஞான சபையின் மகிமையும், அதன் விளைவும், அதனுல் பெறும் பயனும் சமுதாயம் முழுமைக்கும் இன்ப வாழ்வை அளிக்க இருக்கின்றன.

# 3. மனிதனின் குறிக்கோள்

அருள் ஆண்டவரின் திருஉள்ளம், தம் பெருங்கருணை யால் இவ் உலகிலும், மற்ற உலகிலும் நித்தியானந்த வாழ்வை வெளிப்படுத்திக் கொண்டிருப்பதே.

அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணைதான் ஆண்டவரின் சொரூப, ரூப, சுபாவமாக இருக்கிறது. அதுவே நித்தியானந்த வாழ்வை அளித்து விளங்கவும் செய்கிறது. இது அதற்கு இயல்பாகவும் இருக்கிறது.

கடவுளின் இயற்கையான உண்மை, சத்திய, நித்திய, ஆனந்த ஜோதியாய் இருக்கிறது. அந்த உண்மை அகத்தில் எந்த மாற்றமும் இல்லாமல் இருக்கிறது. ஆனால் புறத்தில் பல்வேறு உயிர், பொருள், ஆற்றல், செயல், அனுபவங்கள் ஆகத் திரும்பத் திரும்பத் தோன்றச் செய்து வருகிறது. அவை படிப்படியாக உள் விளக்கம் பெற்று ஓங்கிப் புறப் பரிணாம வடிவமும் அடைந்து வருகிறது.

இப்பொழுது ஆண்டவரே மனித உருவில் இருந்து வருகிறார். மனிதர்களுக்குத் தன்னை உணர்த்தியும் வருகிறார். அவர்கள் தன்னை உணர்ந்து கொள்ளும் ஆற்றலையும் அவர் களுக்குத் தருகிறார்.

இவை எல்லாவற்றையும் எல்லாம் வல்ல இறைவனே. செய்து வருகிறார். ஆனால் நாமோ எல்லாவற்றையும் நாமே செய்து வருவதாக எண்ணிக் கொண்டிருக்கிறோம்.

இதுபோல் இறைவனே எவ் உயிராயும், எப்பொருளாயும் இருப்பவர். இதை அறியாமல், எல்லாஉயிர்களும் பொருள்களும் தனித்தனியாகத் தானே இயங்கிக்கொண்டு இருப்பதாக எண்ணி வருகிறோம்.

இப்படிச் சிந்தித்துப் பார்ப்பதற்குக் கூட மனிதப்பிறவி மிகவும் அவசியம். மனிதப்பிறவி அல்லாத மற்ற எந்த உயிரின் நிலையில் இருந்தும், இறைவனைச் சிந்திக்க முடியாது. மற்ற உயிர்கள் சூக்கும நிலையில் இருந்தும், காரண நிலையில் இருந்தும் சிந்திக்க முடியாதவை.

எனவே சிந்திக்கும் மனம் உடைய மனிதப்பிறவியே, சிறப்பு மிக்கதாகும்.

கடவுட் ஜோதி ஒன்றே நிலையாக இருப்பது. அதுவே எல்லாமாய்இருந்தும், தோற்றுவித்தும், விளங்கியும், மறைத்தும் வருகிறது.

இந்த உண்மை முன்பு அறியப்படாமல் இருந்தது. இதனை அறிவதற்கு என்றே வழங்கப்பட்டிருந்த மனம், மனித வடிவில் ஆதி முதல் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிவடைந்து இன்றைய பக்குவ நிலைக்கு வந்திருக்கிறது.

இதனால்தான் திருவருள் விளக்கம் மனிதனிடம் உள்ளும் புறமும் வெளிப்பட்டு விளங்கக் காண்கிறோம். இது வெளிப்படுவதற்கு நெடுநாளைக்கு முன்பேகூட மனிதனின் அகத்தில் வளர்கிற அருட் பெரும்ஜோதி, அவனது உள்ளத் திரையில் ஓரளவு உண்மையைக் காட்டி இருக்கிறது.

அந்த ஓரளவு உண்மையை நம் முன்னோர்கள் கண்டார்கள். ஆனால் அதன் முழுமெய்ப் பொருள் விளக்கமும் தெளிவும் ஏற்பட இவ்வளவு காலம் புறப்பரிணாமவளர்ச்சி ஏற்பட வேண்டியிருந்தது.

ஆண்டவர்தான், அன்றைய பக்குவம் பெறாத மனிதனில், தன் நிலையான உண்மையைக் காட்டினார். அந்த உண்மையை வெளியிடுவதற்கான கருத்தையும் அவனுக்கு உணர்த்தினார். மொழி முதற் காரணமான அணுத்திரள் ஒலியை

உடைய சொற்களைத் திறமையாக வழங்கும் நா முதலான புற அகக் கருவி கரணங்களையும் அவனுக்கு வழங்கினர்.

இதை எல்லாம் பெற்றிருந்தும் அந்தக் காலத்தில் மனிதன் கடவுள் உண்மையை, முழு உண்மையாக அறியாமல் இருந்தான். இருந்தாலும் தன் உள்ளே இருக்கும் ஆண்டவனின் அருட்செயலால் ஆண்டவனைப் பற்றிச் சொல்லியும் இருக்கிருன்.

மனிதனுல் ஆக்கப்பெற்ற உயிரினப் பெயர்களும், பொருள்களின் பெயர்களும், மற்ற எந்தக் குறிப்புச் சொற்களும் கடவுள் உண்மையைக் குறிக்க வந்த காரிய காரணச் சொற்களாகவே அமைந்திருக்கின்றன.

மனிதனைத் தவிர வேறு எந்த ஜீவனுக்கும் உண்மையை உணரவும் அதை வெளியிடவும் பிறர்க்கு உணர்த்தித் தெளிவு படுத்தவும் எந்தவித வசதியும் இல்லை.

மனிதப்பிறவி தெய்விகமானது. இந்த உண்மையைப் பழங்குடித்தமிழ் மக்களின் வாயிலாகத் திருவருளே வெளியிட்டிருக்கிறது.

தமிழர்களது மொழி, எழுத்து, சொல், பொருள் எல்லாவற்றிலும் கடவுள் உண்மைதான் மறைமுகமாகவும் குறிப்பாகவும் அமைந்து இருக்கிறது.

ஒரு சில சொற்களைக் கொண்டு இந்த உண்மையை நன்கு புரிந்து கொள்ளலாம்.

மனிதன் என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம்.

மனிதன் என்ற சொல்லை மன்+இதன் என்று பிரிக்கலாம். 'மன்' என்பதற்கு நிலைத்து என்பது பொருள். 'இதன்' என்ருல் பிற உயிர்களுக்கு இன்பம் கொடுத்துக் கொண்டிருப்பவன் என்று பொருள். அதாவது மனிதன் என்ற பெயரை உடையவன் நிலையாக இருந்து பிற உயிர்களுக்கு இன்பம் செய்துகொண்டே இருப்பவன் ஆகிருன். மனிதன் என்ற சொல், கடவுள் என்ற சொல்லுக்கு உரிய விளக்கத்துடனும் அமைந்திருப்பதைப் பார்க்கலாம்.

மனிதனை, ''கல்தோன்றி மண் தோன்றாக் காலத்தே, வாளொடு முன்தோன்றி மூத்த குடியினத்தைச் சேர்ந்தவன்'' என்று கூறுவது தமிழ் மரபு.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே மனிதன் எப்படித் தோன்றியிருக்க முடியும்?

அதுவும் வாள் உடன் தோன்றி இருந்ததாக எப்படிச் சொல்ல முடியும் என்று கேட்கின்றனர். இந்தக் கேள்வியால் பலர் கலக்கமுற்று மயங்குகின்றனர்.

அகண்ட பிரபஞ்ச வெளியில், அருட்பெரும் ஜோதியின் உண்மை வெளிப்படத் தொடங்கிய காலம்தான், கல் தோன்றிய காலமாகும். வெளியே தோன்றாமல் மறைவாக உள்ளே புதைந்து கிடந்த மெய்ப்பொருள் ஒளியை நம் முன்னோர்கள் கல்லி அதாவது தோண்டி எடுத்து வெளிப்படுத்தினார்கள். கல்லியதன் மூலமாகத் தோன்றிய ஒளியே கல் என்று ஆகியது. வாள் என்ற சொல்லும் அந்த ஒளியையே சுட்டவந்ததாகும்.

கடவுள் உண்மை இப்படி கல் எனவும், வான எள்வும் ஒளி எனவும் ஒரு காலத்தில் தோன்றியது. அந்தக் காலத்திலிருந்தே கடவுள் தாமாகவே ஆன்ம வடிவில் தோன்றி விட்டார். அந்த ஆன்ம ஜோதியின் விளைவால் உண்டான ஆதி மனிதனும் அன்றே தோன்றிவிட்டான். அப்போது வெளிப்பட்ட மனிதன் தன்னை அறிந்து இன்பமுற இந்த மண்ணுலகு தோன்றிய பிறகு இதில் வந்து மண்கூறு மிகுந்த உடலைப் பெற்றான். இப்படித்தான் மனிதன் உலகில் வாழ வந்தான். அவன் வாழ வந்து எத்தனை கோடி ஆண்டுகள் ஆயின என்பதைத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

எனவே இந்த மனிதனின் முன்னோரான பழங்குடி மக்கள் மனிதனை, கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றியவனாக அன்றே சொல்லி இருக்கிறார்கள்.

எல்லாவற்றுக்கும் தனி முதல் மெய்ப்பொருள் ஒன்றே. இருந்தும் இப்பிரபஞ்சத்தில்தான் எத்தனை எத்தனை பொருள்கள் தோற்றுவிக்கப்பட்டிருக்கின்றன!

மக்கள் அறிந்த பொருள்கள் ஓரளவுதான். அப்பொருள் களைக் குறிக்கப் பலர் வாயிலாக, பல காலமாக, ஆக்கி யிருக்கும் பன்மொழிச் சொற்களோ எண்ணற்றவை.

இன்னும் எவ்வளவு பொருள்கள் மனிதனுக்குத் தெரி யாமல் இருக்கின்றனவோ, யாரே அறிவர்!

மனிதன், தான்கண்ட பொருள்களுக்கே சொற்களைப் படைத்திருக்கிறான், அறியப்படாத, காண்பதற்கு அரிய பரம் பொருளைச் சுட்டிக்காட்ட அவனால் இன்னும் தக்க சொல் படைக்கப்படவில்லை.

சுட்டிக் காட்டுவதற்கு அரியது பரம்பொருள் என்பர் பலர். அந்த அறிவதற்கு அரிய இயற்கை உண்மையை, எல்லாம் வல்ல, எல்லாமான இறைவனைப் பரம்பொருள் என்றும் சிலர் கூறினர்.

எந்த ஒரு சொல்லாலும் அந்தப் பரம்பொருளைச் சுட்ட முடியாமல் தவித்த ஞானியர்கள், அவன் ''சொல்லும் பொருளும் ஆனவன்'' என்று கூறினர்.

பொருளே அறியப்படாதபோது, அதற்கு உரிய ஒரு சொல்லை எப்படி அமைத்துக்கொள்வது?

இதுதான் பரம்பொருள் என்று சொல்லுக்கு உரிய பொருளாக சொல்லிக்காட்ட முடியாததாய் பரம்பொருள் இருக்கிறது.

எந்தச் சொல்லாலும் குறித்துக் காட்டமுடியாதது அந்த ஒப்பற்ற பரம்பொருள். அது தன்னையே வெளிப்படுத் திக்கொண்டு தன்மயானந்த வாழ்வில் என்றென்றும் திகழ் வதற்காகவே இந்த மனிதப் பிறவியைத் தானே தோற்று வித்துக்கொண்டு இருக்கிறது.

கடவுள் உண்மையும், மனிதப் பிறவியின் குறிக்கோளும் ஒன்றேயாகும்.

குறிக்கோள் என்ற தமிழ்ச் சொல்லை 'கோல்' 'Goal, என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். இந்த ஆங்கிலச் சொல் எல்லாம்வல்ல கடவுளையே சுட்டுவதாக இருக்கிறது.

God, Almighty என்ற இரண்டு ஆங்கிலச் சொற்களும் எல்லாம் வல்ல கடவுளைக் குறிக்கும் சொற்கள். இவ்விரு சொற்களின் முதலிரண்டு அசைகளையும் கொண்டு ஆக்கப் பெற்றுள்ளதே குறிக்கோள் என்னும் பொருள்தரும் 'Goal' என்ற ஆங்கிலச் சொல்.

ஒரு மனிதனுடைய 'கோல்' அதாவது குறிக்கோள் இறைவனை அடைந்து அனுபவிப்பதே. இதை அந்தக் 'குறிக் கோள்' என்ற சொல்லே சொல்லாமல் சொல்கிறது.

முன்பு அறியாமை நிறைந்த இருளில் மனிதன் இருந் தான். பின்பு புலனை மயக்கும் அறிவோடு கூடிய மருளில் இருந்தான். இந்தக் காலங்களில், மனிதனின் குறிக்கோள் உண்மையானதாய் இருக்கவில்லை.

உலகியலில் உழன்றுகொண்டிருந்தபோது மனம்போன போக்கில் புலன் வேட்கையில் அழுந்தி முடிவில் துன்பத்தில் அழிந்துபோனான் மனிதன். அந்தப் புலன் இன்பத்தையே குறிக்கோளாகக் கொண்டு அதைப் பெற்றும், பெறாமலும் அழிந்துபோனதுதான் அவன் கண்ட பலன்.

பின்பு, சற்றே அறிவும், ஆன்ம ஞான விளக்கமும் பெற்ற மேலோர், உலகியலுக்கு அப்பாலான தெய்விகப் பேறுதான் தம் குறிக்கோள் என்று எண்ணினர். சமய மத வழிபாட்டு நெறிகளிலும், யோக ஞான சாதனை மார்க்கங் களிலும் செல்லத் தொடங்கினர். புறத்தில் உள்ள தெய்வ வழி பாட்டிலும் ஈடுபட்டனர். துறவு வாழ்வையும் மேற் கொண்டனர். இவ்வளவு முயன்றும் அருள் இன்ப வாழ்வு பெறாது கடைசியில் மடிந்து போயினர்.

அவர்களின் லட்சியம், யோகசித்தி பெற்று முடிவில் கடவுளோடும் இரண்டறக் கலந்தும் அதில் ஒடுங்கிவிடுவது,

மாகவே இருந்தது. இம்முடிவுகள் உண்மைக் குறிக்கோள் அல்ல என்று இப்போது அறிகிறோம்.

வடலூர்ப் பெருவெளியில், சத்திய ஞான சபையில், நித்திய அருட்பெருஞ்ஜோதி தோன்றி இப்போது ஒளிவீசத் தொடங்கி இருக்கிறது.

இதனால் அருட்பெருஞ் ஜோதி அளிக்கும் நித்தியானந்த வாழ்வுதான் மனிதனின் உண்மைக் குறிக்கோள், எனத் தெளிவாக உணர்ந்துகொள்கிறோம்.

சுத்த இன்ப லட்சியத்தோடு, மக்கள் சமுதாயம் அருள் வழிபாடு செய்து உய்யத் திருவுள்ளம் கொண்டிருப்பதை அத்திருவருள் ஞானத்தாலே அறிகிறோம்.

பொறி புலனோடு கூடிய புலன் இன்ப வாழ்வு மனித லட்சியமல்ல. அதுபோல், உடல்வாழ்வைத் துறந்து ஒழிந்து மேலொரு தேகம் எடாமல் எங்கோ எப்படியோ ஒடுங்கிக் கிடத்தலும் மனிதனின் குறிக்கோளல்ல. ஆதிமுதல் ஆன்மா பல உயிர்ப் பிறவிகளை எடுத்துக்கொண்டே வருகிறது. ஒவ்வொரு பிறவியிலும் அது எடுத்த உடல் அழிந்து போய்க் கொண்டே இருக்கிறது. அதனால் பிறப்பு எடுக்காமல் இருத்தலே ஓர் ஆன்மாவின் முடிவு நிலை என்று முன்னோர் கருதிக் கொண்டதும் சரி அல்ல.

உண்மையில், ஓர் ஆன்மாவின் அந்தம், அதாவது முடிவு என்ன? ஆனந்தமாக இருப்பதுதான்; இன்ப வாழ்வுடன் அழியாமல் நிலைபெற்று இருப்பதுதான் அதன் முடிவு.

ஆகவே, கடவுள் அம்சமான ஆன்மா, நித்தியமாக இருப்பது உண்மைதான் என்றால், அதற்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை; ஆதியும் கிடையாது; அந்தமும் கிடையாது என்பதுதானே பொருள்?

இந்த உண்மையைப் புரிந்துகொள்ளாது மனிதனை வெறும் உடல் வடிவத்தை மட்டும் கொண்டவன் என்று எண்ணி அந்த உடலின் தோற்றத்தையும் மறைவையுமே, அவனது பிறப்பு இறப்பு எனக் கொள்ளுதல் சரியாகுமா?

உடல் ஆன்மாவைச் சூழ உருவாகி வளர்வதும், உயிர் ஒடுங்க, அந்த உடல் அழிந்து போவதும் உண்மை. உடம்பு இல்லாத ஆன்மாவுக்கு வாழ்வு இல்லே. அது அனுபவ அறிவு பெறுவதற்கும் இடமேயில்லே.

இறை ஞான ஆனந்த அனுபவத்தைப் பெறுவதற்காகவே மனிதப்பிறவி குறிப்பிட்ட ஆன்மாவுக்குத் திருவருளால் வழங்கப்பட்டு இருக்கிறது.

மனிதன் தன் உடலோடு இல்லாவிட்டால் அவனுக்கு எந்த வகையிலும் ஆனந்த அனுபவம் கிடைக்காது.

நல்ல உறக்க நிலேயிலும், நிர்விகல்ப சமாதி நிலேயிலும் ஆனந்த அனுபவத்துக்கு இடமில்லே.

அந்தச் சூனிய நிலேயைவிட்டு மறுபடியும் விழித்து எழுந்தவுடன் ஒடுங்கிக்கிடந்த அந்த நிலேயை, இன்ப மானது என்கிறுன். அந்த நிலேயோ துன்ப அனுபவமும் இன்ப அனுபவமும் இல்லாதது, தூக்கம் இன்பமா யிருந்தது என்கிறுன். சமாதி நிலேயில் ஆனந்தம் உற்றி ருந்தேன் என்கிறுன். காரணம், அந்த இரண்டு நிலேகளிலும் அவன் துன்பத்தை அனுபவிக்கவில்லே. அதனுல்தான் அந்த நிலேகளில் இன்புற்றிருந்ததாகக் கருதுகிறுன்.

உண்மையில் இன்பம் என்பது அந்த நிலேயில் கிடையவே கிடையாது. எனவே பிறவா நிலேயே, ஆன்மாவின் முடிவான நிலே அல்ல என்பதை உணர வேண்டும்.

ஆதியும் அந்தமும் இல்லாத ஆன்மா மனித உருவத்தைப் பெற்று மெய்யருள் ஞானம் விளேவு கொண்டிருப்பதால்தான் எல்லா மறை பொருள்களேயும், ஆண்டவனின் திருவுள்ளத் தையும் தெரிந்து கொள்கிறது.

இந்த உண்மை விளக்கத்தை ஆன்மா பெறுவதற்காகத் தான், ஆண்டவர் அருள் அதன் உள்ளும், புறமும் இருந்து அதைப் பக்குவப் படுத்தி வருகிறது. அதற்கு அக அறிவு வளர்ச்சியும், ஏற்படுகிறது. புறத்தேகத் தோற்றமும், மறை வும் ஏற்பட்டு வருகின்றன.

இப்போது இறையருள் அதன் அகத்தையும் புறத்தையும் கடந்து அகண்டமாய், அனக நிறைவாய் அனுபவத்தில் இருந்து செயல்பட ஆரம்பித்திருக்கிறது.

அருள் இன்ப அனுபவ வாழ்வு கெடாது திருவருட் பிரகாச வள்ளல் தோற்றத்தில், அனக சுத்த வடிவோடு தோன்றி இருக்கிறது.

மனிதப்பிறவிக்கு அழியாத இன்ப வாழ்வு நிலைதான் குறிக்கோள்.

இதுவே ஓர் ஆன்மாவுக்குத் திருவருளால் ஆணை செய்யப்பட்டிருப்பது. நித்தியமான ஆனந்தம் என்னும் பேரின்ப வாழ்வு நிலையும் இதுதான். ஆன்மாவின் அந்தமும் அதாவது ஆன் + அந்தம் ஆனந்தமாகும்.

ஆனந்த வாழ்வில் நிலைத்து இருக்கவே திருவருள் ஆணை செய்திருக்கிறது. திருவருள் ஆணையை நிறை வேற்றுவது மனிதனின் உண்மை குறிக்கோள்.

இதை அறியாமல்தான் அழியாத ஆன்மாவுக்கு வேறு எதை எதையோ முடிவு என்று கருதிவந்தனர்.

இந்தப் பிறவியைத் தளையாக, பந்தமாக எண்ணி அதனை அறுத்து ஒழித்து பிறவா நிலையில் இருத்தலே முடிவு என்று கிடந்தனர். இந்தமுடிவு தவறானதாகும். உண்மையில் ஆன்மாவுக்கு அது முடிவே அல்ல.

அருள் அனுபவம் கெடாது, ஆண்டவர் மயமாய் வாழவே ஆன்ம ஞானத்தோடு பிறந்தவன் மனிதன். இவன் தன் அகத்தில் இருக்கும் ஆண்டவனை உணர்ந்து அனக வாழ்வு வாழவேண்டியவன். அப்படி வாழாமையால் அவன் அழிந்துபடுகிறான். இது திருவுளச் சம்மதமல்ல.

மனிதன் வாழப் பிறந்தவன். அவன் வாழ்வதுதானே முறை; வாழாது மாள்வது முறையாகுமா?

பிறந்தவன், அல்லது தோன்றிய எதுவும் நிலையற்றதாய் சில காலம் இருந்து இறந்து போவதும் மறைந்து போவதும் தான் இயற்கை நியதி என்று பலரும் எண்ணுகின்றனர்.

இது புறப் புலன் வாழ்க்கை அனுபவம். அகஅருள் அனுபவ வாழ்வு முறைக்குச் சொன்னது அல்ல.

'' கடவுள் ஆன்ம வடிவினன் ஆகிய மனிதன்; நித்தியன். அவன் உடலை ஏற்பதும் விடுவதுமாகிய பிறப்பு இறப்புகளால் கேடுறுவதே இல்லை.

''ஆகையால் பிறந்தவன் இறப்பது என்ற விதிமுறை உடல் அளவிற்கே பொருந்தும். இதனுல் உண்மை மனிதனுகிய ஆன்ம வடிவம் பிறக்கிறதும் இல்லை. இறக்கிறதும் இல்லை'' என்றும் பலர் கருதுகின்றனர்.

இதுவும் புறப்புலன் வாழ்க்கை அனுபவம்தான். அக அருள் வாழ்வு முறைக்குப் பொருந்தாது.

மனிதன் நித்தியனே என்ருலும், இந்தக் காலம்வரை அவன் இருந்துவரும் நிலை வெற்று இருப்பே. (Existence) உண்மையான, வாழ்வு நிலை (Living Stage) அல்ல.

இப்போதுதான், தன் உண்மை நிலையை உணர்ந்து, திருவருளாலே அவன் அகத்தில் இறைவன் இருப்பதை அறிந்து அனகமாக வாழத் தொடங்கி இருக்கிருன்.

இவனே வாழ வந்த உண்மை மனிதன். இவனுக்கு மரண மும் இல்லை, அழிவும் இல்லை. இவன் நித்தியானந்தமாக நிலைத்து வாழவந்தவன்.

இவன் இதுகாறும் உண்மை வாழ்வு, வாழாததால் பிறந்தும் இறந்தும் வந்தான்.

இப்போதுதான், அனக வாழ்வு வாழ வந்திருக்கிருன். அதனுல் இறப்பும் பிறப்பும் இல்லாமல் நித்திய ஆனந்த வாழ்வில் அவன் நிலைத்து வாழ்வான்.

எனவே, மனிதனின் உண்மைக் குறிக்கோள் இவ்வுலகில் மரணமில்லாது வாழ்வதேயாகும்.

மனிதப் பிறவியைப் பந்தம் என்றும், பிறவா நிலையே முத்தி என்றும் சொல்வது தவறு.

அது எப்படி ?

மனிதன் தன்னைச் சுத்த ஆன்ம வடிவினன் என்கிறான். மாயா தேகப் பிறப்பின் துணையால், அவன் தன்னுடைய உண்மை நிலையை அறிகிறான். அதன் மூலம் அகத்தில் இருக்கும் இறைவனை உணர்ந்து அவனுடன் நிற்கிறான். அதன் பயனாக அவனைச் சுற்றி இருக்கும் பிரபஞ்சத் தொடர்பை அறுத்து ஒழித்து விடுகிறான். அப்போது, தான் ஆன ஆன்ம நிலை சித்திகொண்டு, இறைவனுடன் கலந்துவிடும். அதனால் பிறவி எடுக்காமல் இருக்கலாம் என்று கருதுகிறான். இதுவே முடிந்த முத்திநிலை என்றும் எண்ணுகிறான். இதையே சரியான முடிவு என்றும் கொள்கிறான்.

ஆன்மா இறை ஞான அனுபவம் பெறுவதற்காகவே அதற்கு மனிதப் பிறவி அளிக்கப்பட்டிருக்கிறது. ஆன்மா, தான் பெற்ற மனித உடலை இழந்துவிட்டால் அதற்கு வாழ்வின் அனுபவமே இல்லாமல் போய்விடுகிறது. ஆதலால் அந்த நிலை பயனற்றதாய் இருக்கிறது.

எனவே அந்த ஒடுக்க நிலையை முடிவானதாகக் கொள்ளுதல் தவறாகும். பிறவியைத் தளையாக, பந்தமாகக் கருதி அதை ஒழித்துவிடுவதும் தவறாகும்.

ஆகவே ஆன்ம வாழ்வுக்கு உரிய உடல் இருத்தல் மிகவும் அவசியம். ஆனால் அந்த உடல் மீதும், உடல் போகத்தின் மீதும் விருப்பு வெறுப்பு கூடாது. அதை ஆன்ம நிலையில் பொருத்தி ஆன்ம இயற்கையாகிய நித்திய தயா வாழ்வில் அதை வாழச் செய்யவேண்டும். அதன் அகத்தில் இருக்கும் இறைவனை உணர்ந்து அதை அனகமாக வாழச் செய்ய வேண்டும்.

அப்படி வாழ்ந்து வந்தால் அகத்தில் இருந்து ஆண்டு கொண்டிருக்கிற ஆண்டவரின் அருட்பெரும்ஜோதி, அவன் உயிருடம்பை, அருட்பிரகாசத் திருஉருவாக மாற்றிவிடும். அதை அழியாது இருக்கும்படிச் செய்துவிடும். ஆனந்த அனுபத்தில் அவனை நிலைக்கச் செய்துவிடும். இதுதான் திருவருட் பிரகாச வள்ளலாரின் அனுபவம்,

எனவே, ஆன்மாவுக்கு உடல் உறவைப் பந்தமெனக் கருதிவிடக்கூடாது. அதைத் துணித்து விடுவதும் பொருந் தாது. அதுபோல் தேக போகத்தில் பற்றுக்கொண்டு வாழ்ந்து வருவதும் உண்மை வாழ்வாகாது. அது வெறும் வயிற்றுப் பிழைப்பேயாகும்.

எனவே ஆன்மாவுக்கு வழங்கப்பட்டுள்ள இம்மனித உடலே ஒழித்துவிடக்கூடாது. அருள் ஒளியாக அதைமாற்றி விட வேண்டும். அப்போதுதான் அழியாத இன்ப உருவத் துடனே வாழலாம். இறை இன்பத்தை அனுபவிக்கலாம். இதுதான் அருட்பெரும் ஜோதியின் திருஉள்ளம்.

இந்த அனுபவத்தையே, ''திருவடிப் புகழ்ச்சி''யில் ''பவபந்த நிக்ரக விநோத சகளம் சிற்பரம் பரானந்த சொருபம்'' என்ற அடியில் வள்ளலார் குறித்திருக்கிருர்.

மேற்படி திருவடிப் புகழ்ச்சி அடிக்குச் சுத்த சன்மார்க்க அருள் ஒளி நிலேயில் இருந்து ஆழ்ந்து நோக்கினுல்தான் மெய்ப் பொருள் விளங்கும். வெறும் சமய மதக்கண் கொண்டு பார்த்தால், அதன் உண்மைப் பொருள் தோன்ருது.

பிறவித் தளேயை ஒழிப்பதற்கு என்றே பரம்பொருள், ஓர் அற்புத ஆனந்தத் திருமேனியுடன் விளங்குகிறது. அந்த ஆண்டவர் ஏற்றுள்ள ஒரு சில தெய்வத் திருவுருவங்கள் பிறவித்தளேயை நீக்கி நம்மைப் பிறவாநிலேயில் வைத்துவிடும் என்பது முன்னேர் கருத்து. அது உண்மை அனுபவத்திற்குச் சிறிதும் பொருந்தாது.

அருள் ஆண்டவரே தன் அருளால் ''ஓடும் உலகுயிர் ஆகி நின்ருனே''. என்றபடி எல்லாமாய் எவருமாய்த் தோன்றி விளங்கிக் கொண்டிருக்கிருர்.

மெய்ஞ்ஞான மனித உருவத்தில் இருப்பதும் அருட் பெரும்ஜோதி ஆண்டவரே!

மனித உருவம் சுத்த சன்மார்க்க அனகநெறி வாழ் வால் நித்தியானந்த வடிவம் பெற்று நிலேத்து இருக்கும்.

மனித உருவம் ஆண்டவர் ஏற்றுள்ள அற்புதத் திரு மேனி. இது அழியாமை பெற்று, அருளானந்த சித்தியோடு விளங்கும் விநோத சகள வடிவம் ஆகும்.

இந்த அனுபத்தைப் பெற்று வாழும்போது தேகம் முதலியவை துறக்கப்படவேண்டியன அல்ல என்பதை உணரலாம். தேகத்துடனேயே அருள்விளக்கப் பணிபுரிந்து கொண்டிருக்க வேண்டும் என்பதையும் அறியலாம்.

தேகம் முதலியவற்றைப் பந்தமெனக் கருதி இழந்து விடக் கூடாது. திருவருளால் அவை நம்முடன் பிரியாது விளங்கும் சம்பந்தமென உணர்ந்து அவற்றுடன் அன்புடன் இன்பமாக வாழவேண்டும்.

இதுதான் மனிதப்பிறவியின் குறிக்கோள். இதனை அடைய மனித வடிவத்தில் தெய்வ விக்கிரகங்களை ஆலயங் களில் வைத்து வழிபாடு செய்வது மட்டும் போதாது.

தேகப் பற்றில் ஆழ்ந்து விடாமல், வெறும் புலன் போகங்களில் விருப்பு வெறுப்புகொள்ளாமல் வாழவேண்டும். அகத்தில் இருக்கும் இறைவனின் அருள் ஒளியைப் பெருக்கிப் பெருக்கி, அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்ற நான்கு இடங்களிலும் அருள் ஒளியை நிரப்பி வாழ்வதே மெய்யான இறை வாழ்வாகும்.

இதற்காகவே வடலூர்ப் பெருவெளியில், சத்திய ஞான சபை அருட்பெருஞ் ஜோதியோடு தோன்றி இருக்கிறது.

இது நம் உடலில், சத்திய ஞானம் விளங்கும் அருட் பெரு வெளியைக் குறிக்கிறது. இங்குதான் நிலைத்த இன்ப அனுபவ வாழ்வை அருளும் அருட்பெருஞ் ஜோதி இருக் கிறது! அது சத்திய ஞான சபையாக இருக்கின்றது.

இதில் விளங்குகிற மெய்யருள் ஒளியை எப்படி அடைய வேண்டும்? ஆன்ம நேய ஒருமைப் பாட்டு உரிமைத் தியானத் தில் கூடிக் கலந்து ஒன்றுகி நின்றே அடைய வேண்டும். அவ் வாறு நின்று நம்மைச்சுற்றி இருக்கும் உயிர்களுக்குத் தியாகத்

தால் பணி செய்துகொண்டு வாழவேண்டும். இதுதான் உண்மையான வாழ்வாகும். உண்மையான தியானமாகும். உண்மையான வழிபாடாகும்.

இப்போது தோன்றி உலகம் எங்கும் ஒளி பரப்பிக் கொண்டிருக்கும் வடலூர் சத்திய ஞான சபை வழிபாட்டு சுத்த சன்மார்க்க முறை எல்லோருக்கும் இன்ப வாழ்வை வழங்கவே இருக்கிறது. இது சத்தியம்,

மனித குலம் இந்தக் குறிக்கோளை நோக்கி விரைந்து தொடர்ந்து செல்லவேண்டும். இறை உண்மையைக் காண்பதற்கு முயலவேண்டும். அந்த இறை உண்மையில் பேரின்பத்தைப் பெற்று வாழ்வில் தழைக்க வேண்டும்.

# 4. ஆலயத் தோற்றங்கள்

பகுத்தறிவு படைத்த மனிதன் பலவகையில் முன்னேறிக் கொண்டே வருகிறுன். பிற உயிரினங்களால் எவ்வகையிலும் அறிந்துகொள்ள முடியாத பல உண்மைகளேயும் அறிந்து கொண்டே வருகிறுன். மறைந்திருந்துசெயல்படுத்தி வருகிற ஆற்றல்களேயும் அறிந்துகொண்டு வருகிறுன். அவற்றின் முன்நிலேகளேயும், விளேவுகளேயும்; பின் நிலேகளேயும், விளேவு களேயும் தெரிந்துகொண்டும் வருகிறுன்.

முடிவாகப் பெறுவதற்கு அரிய தெய்வப் பேறுகளேயும் பெறுகிறுன். தானே முயன்று மாமனித நிலேயை அடைகிற தெய்விகப் பேறுகளேயும்கூட பெறுகிறுன். இப்படியாக அவன் வாழ்வில் முன்னேறிக்கொண்டே இருக்கிறுன்.

மற்ற ஜீவன்களோ தங்கள் புலனுக்குரிய 'Instinct' இயற்கை உணர்வால், குறிப்பிட்ட எல்லேயைத் தாண்டாமல் வாழ்ந்து மடிந்துபோகின்றன.

ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், கறையான், எறும்பு, தேனீ, புள்ளினங்கள், மற்ற விலங்கினங்கள் முதலியவை எப்படி வாழ்க்கையை நடத்தி வந்தனவோ அப்படித் தான் இன்றும் அவை வாழ்ந்து வருகின்றன.

இவற்றுக்கு மாருக மக்கள் இனம், மனத்தின் துணே யால், வாழ்க்கை முறையில் எவ்வளவோ மாற்றங்களேயும், முன்னேற்றங்களேயும் அடைந்து வந்திருக்கிறது. இதைக் கால வரலாற்றின் ஒவ்வொரு நிகழ்ச்சிகளிலும் பார்க்கிறோம்.

இன்னும் பல குறிப்புகளால் உணர்ந்தும் வருகிறோம். மக்களில் சிலர் அறிவும், ஆற்றலும், அருஞ்செயலும், பெருந்திறமையும் கொண்டவர்களாய் இருக்கிறார்கள், அவர்கள் துணையால், ஏனைய சாதாரண மக்கள் அவர்களை அடுத்து வாழ்கிறார்கள். அவர்கள் மீது அன்பு காட்டு கிறார்கள். அவர்களிடம் தம் குறைகளையும், தேவைகளையும் விண்ணப்பித்துக்கொள்கிறார்கள். இதனால் தங்கள் கோரிக் கைகள் ஓரளவு நிறைவேற்றப்பெற்றும் வருகிறார்கள்.

இந்த மனித தரத்திற்கு அப்பால் பேராற்றலுடைய ஏதோ ஒன்று இருப்பதாக உணர்ந்தார்கள். அது பேருயிர் உலகங்களையும், பொருள்களையும், ஆற்றல்களையும், தொன்று தொட்டு முறையாக நடத்தி வருவதாக அறிந்தார்கள்.

அந்தப் பரம்பொருளை அறிய எங்கெங்கோ தேடி அலைந் தார்கள். கடைசியில் பொதுவாக ஒவ்வொரு பொருளின் உள்ளேயும், சிறப்பாகத் தங்கள் அகத்திலேயும் அந்தப் பரம்பொருள் இருப்பதை உணர்ந்தார்கள்.

அது புறத் தோற்றங்களை எல்லாம் கடந்தது; அகத்திலே இருப்பது என்பதையும் ஊகித்து அறிந்தார்கள். அதற்குக் கடவுள் என்று பெயர் வைத்து மகிழ்ந்தார்கள்.

அவர்கள் கடவுள் என்ற சொல்லுக்கு எல்லாவற்றையும் கடந்தது; எல்லாவற்றின் உள்ளேயும் இருப்பது என்று பொருள் கொண்டார்கள்.

எல்லாம் வல்ல கடவுள் அணு முதல் அண்டம் வரை, சிற்றுயிர் முதல் பெரும் ஞான சித்தன் வரை அனைத்துக்கும் உள்ளே இருக்கும் பேராற்றலாக இருக்கிறார். ஒவ்வொன் றையும் தான் விளங்கும் இடமாகவும் பெற்றிருக்கிறார். இப்படி இருப்பதற்குக் கடமாக இருத்தல் என்று பெயர். இதைத்தான் கடவுள் என்று பெயரிட்டு விளக்கினார்கள்.

கடவுளையே கந்தழி ஜோதி என்று சொல்லி வந்தனர் பழந்தமிழ் மக்கள். கந்தழி ஜோதிதான் உள் ஒளி என்பது.

உள் ஒளியை உணர்வதற்கு ஞானக்கண் வேண்டும். ஞானக்கண் பெருத மக்களுக்காக, உள்ஒளி சிறப்பாக விளங்கும் மனிதன் உருவில் கடவுளைப் படைத்தார்கள். உள் தீயின் நிறமுள்ள தெய்வமாகப் படைத்தார்கள்.

அந்தத் தெய்வ உருவத்தைப் பிரார்த்தித்தும், வணங்கிப் போற்றியும் வழிபட்டார்கள். அதன் மூலமாக ஓரளவு நலமும் பெற்று வந்தார்கள்.

அகத்தில் இருக்கும் ஒளி உண்மையை உணர்ந்து அடைய முடியாத பாமர மக்களுக்கும், தெய்வ வழிபாட்டு முறையைக் கற்பிக்க விரும்பினுர்கள். அதற்காக மனிதனின் உடல் அமைப்பைப்போலவே ஆலயங்களை அமைத்தார்கள்.

ஆலயங்களில் கருவறைகளையும், அந்தக் கருவறைகளிலே கடவுளைக் குறிக்கும் விக்கிரகங்களையும் வைத்தார்கள். இந்த அடிப்படையில்தான் தெய்வ ஆலயங்கள் தோன்றின.

தெய்வ ஆலயங்களில், சாதாரண மனித வடிவங்களிலும், தெய்வ உருவங்களை வைத்தனர். தத்துவங்களைக் குறிக்கும் அசாதாரண கற்பனை வடிவங்களிலும் பலவகைத் தெய்வங்களை வைத்தனர்.

தெய்வ உருவங்களை எல்லாம் சர்வ சக்தியுடைய கடவுளாக ஏற்றுக்கொள்ள சிந்தனையாளர்கள் மறுத்தனர்.

தெய்வ வடிவங்கள் எல்லாம், மனிதனுல் படைக்கப்பட்டவை. அவை அழிந்துபோகக்கூடியவை. அவற்றை உண்மைத் தெய்வமாகக் கொள்ளக்கூடாது என்று கருதினர்.

அவர்களில் சிலர் ஆலயங்களில் கடவுளை அருவமாகத் தொழ முற்பட்டனர். மற்றும் சிலர் அவரவர் கருத்துக்கு ஏற்ப ஆலயத்தையும், தெய்வத்தையும் புதிதாக உருவாக்கினர். அதற்கு ஏற்ப கொள்கைகளையும், கோட்பாடுகளையும், வந்தனை வழிபாட்டு முறைகளையும், விழாக்களையும் ஏற்படுத்தினர். இவ்வாறு வேற்றுமை மனப்பான்மையுடன் வாழத்தொடங்கினர்.

இதனுல் மக்கள் மத்தியில் பல பிரிவுகள் ஏற்பட்டன.

உலகில் பலவகைத் தெய்வ ஆலயங்கள், தெய்வச் சின்னங்கள், பீடங்கள், தோன்றிப் பெருகி வளர்ந்தன.

யோக சாத்திரங்களேயும், ஞான சாத்திரங்களேயும், உபதேச அனுபவ வாசகங்களேயும் பலர் கற்ருர்கள். அதன் மூலமாக மனிதனின் உயிருக்குள் உயிராகக் கடவுள் இருக்கிருர் என்பதை உணர்ந்தார்கள். அவரைக் கடவுள் ஆன்மா என்று போற்றினுர்கள். கடவுள் உயிருக்குள் மட்டும் அல்லாமல் எல்லா இடங்களிலும் இருக்கிருர் என்பதையும் அறிந்தார்கள். அந்த உண்மைக் கடவுளே வணங்கி வாழ்த்தி வழிபட்டு வாழ்வு பெற விரும்பினுர்கள்.

நமக்குள் உயிருக்கு உயிராக இறைவன் இருக்கிருன். நம் அகத்தில் அவன் இருக்கும் இடம்தான் உண்மையான கோயில். இந்தக் கோயிலே வெளியில் உருவகப்படுத்தவே புறத்தில் கற்களினுல் சிற்ப நுட்பங்களுடன் கூடிய ஆலயங்களே ஞானிகள் அமைத்தனர். ஆனுல் இதுவரை அவர்கள் லட்சியம் பூர்த்தியாகவில்லே.

சாதாரண மக்களால் நம் உயிருக்குள் உயிராக இருக்கும் கடவுள் உண்மையை அறிந்துகொள்ள முடியவில்லே. அவர்கள் தங்கள் உடல் இன்பத்தையே பெரிதாக நினேத்து அதற்காகவே வாழ்ந்து வருகிருர்கள். இதனுல் ஞானிகள் அமைத்த தெய்வ ஆலயங்களின் குறிக்கோளே அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லே.

பக்தி வழிபாடுகள் எல்லாம் பக்தர்களின் உடலேப் பற்றிய உணர்வுடன்தான் செயல்படுகின்றன. இதனுல் அவர்கள் நிலேயற்ற இன்பத்தைச் சிறிதளவு பெறுகிருர்கள். இந்த இன்ப மயக்கத்தில் மகிழ்கிருர்கள். கடைசியில் நிலேயான பயனேப் பெருமல் மடிந்து போகிருர்கள்.

கோவிலும், தெய்வத் திருஉருவங்களும் உண்மைக் கடவுளே நமக்குச் சுட்டிக் காட்டுவதற்காக வந்தவை என்ற எண்ணமே மக்களுக்கு ஏற்படவில்லே.

கடவுளோ எல்லா இடங்களிலும் எப்போதும் இருக்கிறார். அவர் நாம் வழிப்பட்டு உய்வதற்காக வெளிப்பட்டு உதவவும் தயாராக இருக்கிறார்.

அவ்வாறு இறைவன் வெளிப்பட்டு உதவ இருப்பது ஆலயங்களில் அல்ல; ஜீவதேகங்களில்தான். சிறப்பாக மனித வடிவங்களில்தான் உயிருக்கு உயிராக இருந்து நமக்கு உதவத் தயாராக இருக்கிறார்.

எனவே மக்களின் உடல்களே உண்மையான தெய்வ ஆலயங்கள். மனித உடல்களின் உள்ளே இருக்கும் கடவுளின் அருள் பெறுவதற்கு என்ன செய்யவேண்டும்? உயிர்களுக்கு ஜீவ தயவுடன் தொண்டு புரியவேண்டும்.

எல்லாமாகி இருக்கும் பரிபூரணக் கடவுளுக்கு நாம் எதைத் தந்து உபசரிப்பது? அவர் நம்மிடம் எதை எதிர் பார்க்கப்போகிறார்?

அவர் பூரணமாக விளங்கக்கூடிய மனிதர்களின் பசியைப் போக்க உதவ வேண்டும். அதன் மூலமாக அந்த மனிதர்களுக்கு உயிர் விளக்கம் உண்டாக்க வேண்டும். அவர்களுக்கு உண்மைக் கடவுள் அறிவு ஏற்படச் செய்ய வேண்டும். உயிருக்குள் உயிராக இருக்கும் இறைவனைப் பற்றிய விளக்கத்தையும் அவர்கள் பெறும்படிச் செய்ய வேண்டும். இதுதான் நம் உள்ளே இருக்கும் இறைவனின் அருளைப் பெறுவதற்கு உரிய உண்மையான வழிபாடாகும்.

ஆடம்பர விழா வைபவங்களுடன் செய்யும் கடவுள் வழிபாடுகள் எல்லாம் மிக அற்பமான பயனையே தருவன.

ஆகம சாத்திர விதி முறைப்படி அமைக்கப்பட்டுள்ள ஆலய வழிபாடுகளில் திருவருள் விளக்கம் கிடைப்பதில்லை. பக்தியும், சிரத்தையும், நம்பிக்கையும்தான் மனிதனுக்கு ஓரளவு பயன் விளைவிக்கின்றன. ஆனால் அவன் அருள் மயமான நித்திய ஆனந்த அனுபவத்தைப் பெறுவதில்லை.

நித்தியமாய் உள்ள எல்லாம்வல்ல கடவுளுக்கு உண்மையான ஆலயம் எது?

கடவுள் எங்கும் நிறைந்து இருக்கிறுர் என்றுல், அவர் வடிவத்தைக் காண முடியுமா? கற்பனைக் கண்ணுல்கூட அவரைக் காண முடியாதே! அப்படிப்பட்ட அளப்பரிய பெருங் கடவுளுக்கு, ஓர் ஆலயம் எப்படி இருக்க முடியும்?

அப்படி ஒரு கடவுளும் இருக்க முடியாது. அவருக்கு ஓர் ஆலயமும் இருக்க முடியாது என்கிறுர்கள்.

உலகில் இதுவரையில் தோன்றியுள்ள கோயில்கள் ஏராளம். அவைகளில் நிறுவப்பட்டிருக்கும் உருவ, அருவ, அருவுருவ தெய்வங்களும் ஏராளம்.

இந்தத் தெய்வங்கள் எல்லாம், எல்லாம்வல்ல அருட் பெருஞ்ஜோதிக் கடவுளுக்கு நிகரானவை அல்ல.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுளைக் காண முடியுமா? காண முடியும். ஞானக்கண்ணின் மூலமாகக் காண முடியும்.

ஞானக் கண் என்றுல் என்ன?

அருளே ஞானக்கண். அந்தக் கண்களால் ஒருமையுடன் பார்க்கும் போது உண்மைக் கடவுளான அருட்பெருஞ் ஜோதியைக் காணலாம்.

''சாத்திரங்கள் எல்லாம்
தடுமாற்றஞ் சொல்வதன்றி
நேத்திரங்கள் போல்காட்ட
நேராவே—நேத்திரங்கள்
சிற்றம் பலவன்
திருவருள்சீர் வண்ணமென்றே
உற்றிங் கறிந்தேன்
உவந்து!''

அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் தன் பேரருள் நிறைவோடு எங்கும் இருக்கிறுர். சிறு அணு அளவு இடம்கூட இடையீடு இல்லாமல் பூரணமாய் நிறைந்து இருக்கிறுர், இது அனுபவ வாசகம்.

ஆண்டவர் ஓர் ஆன்ம நுண் உருவில், நிறையருள் விளக்கத்தோடு எழுந்தருளுகிறார்: நிறை மனிதத் தோற்றம் பெற்றுத் திகழ்கிறார். இப்போது ஆண்டவரின் உண்மை முழுவதும் அந்த நிறை மனிதனுடைய அனுபவத்தில் விளங்கக் கூடியதாக இருக்கிறது.

ஆண்டவர் உண்மையும், நிறை மனிதன் உண்மையும் இங்கு ஒன்றுதான்.

மனிதனின் உள்ளிருக்கும் இறைவனை அருள் ஞானத்தின் மூலமாகத்தான் அறியமுடியும். மனிதனில் இறைவன் இருக்கும் இடம்தான் ஆன்ம ஆலயம். இந்த ஆலயம் ஆண்டவரின் சிற்றுருவமாகவும் அந்தச் சிற்றுருவம் வெளிப் பட்டு விளங்குகிற இடமாகவும் இருக்கிறது.

***சிதம்பர ஆலயம்:***

அண்டப் பெருவெளியில் நிரம்பியுள்ள ஆகாசமே பூத ஆகாசம். அதுவே ஆண்டவரின் பேருருவம். இந்த ஆண்டவரே தன் முழுத்தன்மையின் விளக்கத்துடன், நம் உடம்பில் ஆன்மச் சிற்றுரு வடிவாய்த் தோன்றித் திகழ்கிறார்.

நம் உடலில் ஆண்டவர் விளங்கும் இடம்தான் உண்மைச் சிதாகாசம்; சிதம்பரம். இதனுடைய சிறிய அளவு காரண மாக, இது சிற்சபை என்றும், சிற்றம்பலம் என்றும் குறிக் கப்பட்டு வருகிறது.

இந்த ஞான ஆகாச வடிவம்தான் சிதம்பர இரகசியம். இதுதான் பரம்பொருளின் பரம ஆகாயம். இதுவே நம் உள்ளே இருந்து, அருவ ஆன்மாவாகவும், அருவுருவ உயிராக வும், உருவ உடலாகவும் விரிந்து விளங்குகிறது.

இந்த மூன்று நிலைகளையும் சிதம்பரம் கோயிலில் இன்றும் காணலாம். இந்தக் கோயிலில் விளங்கும் சிதம்பர ரகசியம் தான் ஞான ஆகாசம்; இது அருவ நிலை. ரத்தின சபாபதி லிங்கம்; இது அருவுருவ நிலை. நடராஜர்; இது உருவ நிலை.

இதனுல்தான் சிதம்பர ஆலயம், கடவுள் அக உண்மை முழுவதும் வெளிபட்டு விளங்கும் இடமாக இருக்கிறது. கடவுள் உண்மையை உணர்ந்தவர்கள் தாங்கள் உணர்ந்த உண்மையைச் சிதம்பரம் கோயில் மூலமாகப் பாமர மக்களுக்கு காட்டியிருக்கிருர்கள்.

இந்தக் கோயிலே உருவாக்கிய தமிழ் ஞான சித்தர்களின் முயற்சி போற்றத்தக்கதாகும்.

சிதம்பர ஆலயம், கடவுள் அக உண்மை விளக்கம் முழுவதையும் கொண்டது. இதைப் பொன்னம்பலம் என்ற இன்ஞெரு பெயராலும் நன்கு அறியலாம்.

ஆண்டவரின் சுத்த, பிரணவ, ஞானம் ஆகிய, உருவ, அருவுருவ, அருவ வடிவங்களில் சுத்த வடிவமான நடராஜர் திரு உருவத்தைக் குறிப்பது பொன்னம்பலம்.

இந்தக் காட்சி அனுபவம் பெற்றவன், தன் உடலோடு இருந்து அந்த உடலுக்குள் இருக்கும் ஆண்டவனே உணர் கிருன். அவன் தன் உடலுடன் இருந்தாலும் அந்த உடலுக்குள் இருக்கும் கடவுள் ஆன்ம வடிவே தன் உருவம் என்பதையும் காண்கிருன். அப்படிக் கண்டவன், தானே பாம்பிற் பள்ளிகொண்ட திருமால் வடிவம் பெற்றுவிட்ட தாகவும் உணர்கிருன்.

***"நிரவி அழலுருவாய் நீண்டவெளி காணில்***
***அரவணே யான் ஆகும் உடம்பு"***

என்ற ஞானக்குறளால் இந்த உண்மை தெளிவாகும்.

இந்த அனுபவத்தையே நடராஜர் சந்நிதியில், கோவிந்த ராஜர் அறிதுயில் நிலேயாகக் காட்டப்பட்டிருக்கிறது.

சிதம்பர ஆலய அனுபவத்தைப் பெற்ற ஒருவன் ஆன்மாவின் உருவமே தன் உருவமும் என்பதை உணர்கிருன்! ஆனந்த நடனக் காட்சியில் ஆழ்ந்து தன்னே மறந்துவிடுகிருன்.

இந்த நிலேயே மனிதன் முடிவில் அடைய வேண்டிய குறிக்கோளாகக் கொண்டிருந்தது அன்றைய உலகம்.

சிதம்பர ஆலயத்தில் விளக்கப்பட்டிருக்கும் அக அனுபவத்துடன் ஒடுங்கிக் கிடந்துவிடாமல் ஒருவர் மேலே போகிறார். அனகமாக விரிந்து, அகிலமெல்லாம் அருட் செங் கோல் செலுத்தத் திருவருளிடம் ஆணை பெறுகிறார். அவர் தான் திருஅருட்பிரகாச வள்ளலார்.

பூர்வ சிதம்பர ஆலய சித்தி உண்மை, மனிதனுக்கு அயலாக இருந்தது. அந்தச் சிதம்பர ஆலய உண்மையில் அவனை ஒடுங்கச் செய்தது.

இது முத்தேக சித்தி பெற்று இந்த உலகிலேயே ஆனந்த மாக வாழ வகை செய்யவில்லை.

சைவ சித்தாந்த உலகம் கண்ட முடிவு முத்தேக சித்தி இல்லை. அது அகத்தில் ஒடுங்கியும், தில்லை ஜோதியில் மறைந் தும், சிதம்பர வானில் கரைந்தும்போவதுதான்.

இந்த முடிவுக்கு மேலும் ஒருவர் செல்கிறார். அவர் சிவ மாகவே மாறியும் விடுகிறார். தம் அருகில் இருப்பவருக்குத் தெரியாத நிலையில் அருவமாகவும் விளங்குகிறார். ஆனந்த நடனமும் அவருள்ளேயே நடை பெறுகிறது. அருள் அம்பலத் தரசும் அவரிடமே விளங்குகிறது. இந்தப் பேரின்ப அனுபவத் தைப் பெற்ற அந்த மனிதர் யார்? அவர்தான் திருவருட் பிரகாச வள்ளலார். சுத்த சன்மார்க்க இணைப்பினால் மரண மிலாப் பெருவாழ்வைப் பெற்றவர்.

திருஅருட்பிரகாச வள்ளலார் முத்தேக சித்தியைப் பெறத்தொடங்கியது உத்தரஞான சிதம்பரம் என்னும் வடலூரில் இருக்கும் சத்திய ஞான சபையில்தான். இவரது சித்தியை விளக்க பழைய ஞானக் குறளை,

**நிரவி யருள்ஒளியாய் நீண்ட வெளிகாண்மெய்**
**அருட்பிர காசவள்ளல் ஆம்.**

என்று மாற்றிப்பாடி மகிழலாம்.

பூர்வ ஞான சிதம்பர ஆலயத்தில் திருவருளின் ஒருபகுதி யைப்பார்ப்பதுதான் சிவானந்த அனுபவம். இந்த அனுபவ மும் சிவஜோதியில் கரைந்து மறைந்துவிடுவது.

அந்த மறைவு நிலைக்குப் பின், ஐக்கிய அனுபவத்தில் ஒருவன் நித்திய ஆனந்தமாய் வாழ்ந்துகொண்டிருக்க முடியாது. அப்படி இருப்பதாக சைவ சித்தாந்திகள் புகழ்ந்து போற்றிக்கொண்டிருக்கிறார்கள். அதுபொய் பாவனையாகும். புனைந்துரைஆகும். மெய்யான அனுபவ வாசகம் இல்லை.

வடலூர் என்றும், சித்திபுரம் என்றும், உத்தரஞான சிதம்பரம் என்றும் சொல்லப்படுகிற ஊரில் சத்திய ஞான சபை எழுந்திருக்கிறது. இந்த ஞானசபையில் சுத்த சத் விசாரத்தாலே அருட்பெருஞ்ஜோதிக் காட்சியை முழுமை யாகப் பார்க்க முடிகிறது. இது ஒருவரை அவர் அகத்தே அவர் வேறு, சத்திய ஞானசபை வேறு என்று எண்ணாமல் அருட் ஜோதிச் சுடராகவே அவர் விளங்குவதை அவருக்கு உணர்த்திவிடுகிறது.

பின்னர் அருட்பெரும்ஜோதி அவர் அகத்தில் வெளிப் படவும் இருக்கிறது. அதனுடன் இணைந்த தயா வாழ்வில் அவர் பயின்று பயின்று முன்னேறுகிறார். அதில் முன்னேற, முன்னேற அவர் அகத்தில் அருள் ஒளி ஓங்கிப் பெருகுகிறது. அது பெருகிப் பெருகி அவர் உணர்விலும், உயிரிலும், உடலி லும் நிரம்பி அவரை அருட்பிரகாச வடிவினராக்கிவிடுகிறது.

உண்மையில் அருட்பெருஞ் ஜோதிக் கடவுளே அருட் பிரகாச நிறை மனித உருவம் பெற்று, நித்திய ஆனந்தமாய் வாழ வந்துவிடுகிறது. இதுதான் வள்ளற் பெருமானின் மரணமில்லாத முத்தேக சித்திப் பெருவாழ்வு நிலை.

இந்தப் பெருவாழ்வு நிலையுடன் மக்கள் சமுதாயத்தைப் பக்குவப் படுத்தி வருகிறார் வள்ளலார். அனகமாக இருந்து அருட்பணி புரிந்து வருகிறார் வள்ளலார்.

அனக வடிவில் இருந்து அருட்பணி புரியும் வள்ளலாரைப் புறவடிவில் சாதாரண மக்கள் எப்படிப் பார்க்க முடியும்?

அருட் பக்குவம் பெற்றவர்களுக்கு அவர்கள் உள்ளத்தில் வள்ளல்பெருமான் அருவமாகத் தோன்றுகிறார். அவர்கள்

உணர்வில் அருவுருவமாகவும் தோன்றுகிருர். அவர்கள் கண்களுக்கு உருவமாகவும் தோன்றுகிருர்.

வள்ளலார் பெற்ற இந்த முத்தேக சித்தியைச் சிலர் இன்னமும் புரிந்துகொள்ளவில்லை. அவர்கள் மாணிக்க வாசகரைப் போன்ற பல மகான்கள் மறைந்ததுபோல வள்ளலாரும் ஜோதியில் மறைந்துவிட்டார் என்று விவரம் புரியாமல் சொல்லி வருகின்றனர்.

இப்போது அருட்பெருஞ் ஜோதி தோன்றிவிட்டது. எல்லோர் அகத்தும் புறத்தும் உண்மை விளங்கி இருக்கிறது.

ஐய விளுக்களுக்கெல்லாம், ஐயன் அருள் ஒளியே விடை அளித்துத் தெளிவுபடுத்தி வருகிறது. மக்கள் வாழ்வில் நிறை இன்ப நலம் காண, வடலூர்ப் பெருவெளியில் சத்திய ஞான சபை திறக்கப்பட்டிருக்கிறது.

இதுவரை உலகம் கண்டிருந்த தெய்வங்கள், பீடங்கள், நிலையங்கள், மடங்கள், மந்திரங்கள், கோட்டங்கள், அற்புத சிற்பத் தளிகள், கூடகோபுர ஆலயங்கள் முதலியவற்றில் எல்லாம், எல்லாம்வல்ல அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் எழுந்து அருளவில்லை. அவர் தம் தனிப்பெருங்கருணையைப் பாலித்து, மக்கள் சமுதாயம் முழுவதையும் ஒன்றுபடுத்தி அவர்களை ஆனந்த வாழ்வில் தழைக்கச் செய்யவும் இல்லை.

சிற்றறிவுடனும் சிறு குணங்களுடனும் சிறிதளவே உண்மையைத் தெரிந்து கொண்டிருக்கிருர்கள் மக்கள். அவர்கள் பல கோயில்களுக்குச் சென்று அங்கு இருக்கும் பல்வேறு தெய்வங்களை வணங்கி வழிபாடு செய்கிருர்கள். அதை அகத்தும் செய்கிருர்கள்; புறத்தும் செய்கிருர்கள்.

இனிமேல் யாரும் அப்படி வீண் போகக்கூடாது என்பதற்காகவே அருட்பெரு நோக்கத்துடன் வடலூரில் சத்தியஞான சபை திறக்கப்பெற்று இருக்கிறது. இதனுல் உலகுக்கு பெரும் நன்மை உண்டாகும் என்பதில் சந்தேகமில்லை.

# 5. சமய மதங்களின் முடிவு

மக்கள் கூட்டம் மிகப் பெரியது. அது இப்பேருலகில் பல்வேறு இடங்களில், தட்ப வெட்ப சூழ்நிலைக்கு ஏற்ப பல நிறங்களுடனும், உருவங்களுடனும் இருக்கிறது.

உயிரினங்கள் பல. அவற்றில் ஒவ்வொரு இனத்திலும் உள்ள உயிர்கள் புலன் அறிவும், இன இயற்கைக் குணமும் பெற்று ஒன்றுபோல் தோன்றுகின்றன; அவற்றுக்கு இயற்கையான புற இனத்தோற்ற வேறுபாடும் இருக்கிறது.

ஆனால் வேறு வேறான சிந்தனைகளுடன் விளங்கும் மனம்படைத்த மனிதர்களின் முகத்தோற்றங்களோ ஒன்று போல் இருப்பதில்லை.

''அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'' என்ற பழமொழிக்கு ஒப்ப அகம்போல் புறமும் விளங்குகிறது.

இன்னும் உணவுப் பழக்கமும், வாழ்க்கை முறைகளும், நடைஉடை பாவனைகளும் மனிதர்களின் வேறுபாட்டுத் தோற்றங்களுக்குக் காரணங்களாகின்றன. இவையெல்லாம் இயற்கை எனவும் கொள்ளலாம். இவற்றுக்கு மேல் செயற்கையான பல வகை வேறுபாடுகளும் இருக்கின்றன.

நல்லது, தீயது என்று பகுத்தறியும் மனம்கொண்ட மக்கள் சில ஒழுக்க முறைகளையும், வாழ்வில் நலம்பெற்று ஓங்குவதற்கான சில குறிக்கோள்களையும் கொண்டிருந்தனர். அவற்றை அடைவதற்குச் சில கொள்கைகளையும், கோட்பாடுகளையும் வகுத்துக்கொண்டனர்.

இவையே சமய மதங்களின் தோற்றுவாய் ஆகும்.

மதங்கள் எண்ணங்களையும், கொள்கைகளையும், அவை பற்றிய கருத்துக்களையும் கொண்டவை.

சமயங்கள் அவை பற்றிய நடைமுறைக் கோட்டுபாட்டு முறைகளை செயல்படுத்துபவை.

பொதுவாக, எல்லாச் சமயத்தாரும் தீமைகள் ஒழிய வேண்டும் என்றும், நன்மைகள் ஓங்கவேண்டும் என்றும் நம்புகிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் கருத்தை வெளியிடும் விளக்கங்கள் மட்டும் ஒன்றுபோல் இருப்பது இல்லை. இதனால் பல சமயங்களும் பல மதங்களும் உலகில் தோன்றி ஆங்காங்கு வேர்பிடித்து நிற்கின்றன.

இவைகளால் உலகுக்கு நன்மை உண்டாகும் என்று ஆன்றோர் திடமாகக் கருதியிருந்தனர்.

அப்படி எந்த நன்மையையும், எந்தச் சமயங்களும் மதங்களும் இதுவரை செய்யவில்லை. இனிமேல் அவை நன்மை செய்யும் என்றும் நம்புவதற்கு இல்லை.

இப்பொழுது கடவுளின் முழு உண்மை வெளியாகி இருக்கிறது. மக்களிடமிருந்து அறியாமை இருள் விலகி இருக்கிறது, அருட்பெருஞ்ஜோதியே எல்லாம்வல்ல பரம்பொருள் என்று மக்கள் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். இதனால் உலகம் பெரிய நன்மை அடையப்போவது உறுதி.

மக்கள் மருள் நிலையில் இருந்து சமய மத உண்மைகளையும், அதற்கு அப்பாற்பட்ட ஒரே பரநிலை அனுபவ முறையையும் அறியமுடியாது.

நமது முன்னோர்களோ, மக்கள் சமய மத உணர்ச்சிக்கு வாழ்வில் முதல் இடம் கொடுக்கவேண்டும் என்று அழுத்தமாக எண்ணி வந்தார்கள்.

மக்களை, மாக்களில் (விலங்குகளில்) இருந்து பிரித்துள்ளது சமய மத உணர்ச்சிதான் என்று நம்பினார்கள், சமய மத

உணர்வு, மக்களிடத்தில் செயல்படவில்லை என்றால், மக்கள் மாக்கள் ஆகிவிடுவர் என்றும் பயமுறுத்தினர்கள்.

அந்த நாளில் இருந்து இன்றுவரை சமய மதச் சார்பு கொண்டு வாழ்ந்துவரும் மக்கள் எப்படியிருக்கின்றனர்? மக்களாக இருக்கின்றனரா? மாக்களாக இருக்கின்றனரா?

அவர்கள் தங்கள் உடல் இச்சையைப் பெருக்கிக்கொள் வதற்காக அறிவியற் சாதனைகளைச் செய்கிறார்கள். அதன் துணையுடன் வாழ்க்கையில் போராடிக்கொண்டே இருக்கிறார் கள். கேவலமான விலங்கியல் வாழ்க்கை விலங்கில் மாட்டிக் கொண்டிருக்கிறார்கள். இப்படி அவர்கள் வாழ்ந்து வந்த போதிலும், கடவுள் உண்மையைத்தெரிந்துகொள்ளவேண்டும் என்றும், உயர்ந்த அருள் வாழ்வில் தழைக்கவேண்டும் என்றும் ஆசைப்படுகிறார்கள்.

இதற்குப் பழைய சமயங்கள் அவர்களுக்கு உதவ முடியுமா? அவைகளின் பொதுவான லட்சியங்களை ஒன்று படுத்தினாலும் கூட மக்கள் சமுதாயத்தை ஒன்றுபடுத்தி உயர்த்திவிடமுடியாது.

மக்கள் உள்ளங்களில் இருந்து அருள் ஒளி எழவேண்டும். அப்போதுதான் அங்கு இருளுக்கும் மருளுக்கும் இடமில் லாமல் போகும்.

மக்கள் மனதில் இருக்கும் சமயங்களின், மதங்களின் அடிப்படையான உண்மை எதுவோ அது தனித்தன்மையுடன் வடலூர்ப் பெருவெளியில் தோன்றிஇருக்கிறது. இருளையும், மருளையும் போக்கும் ஜோதி வடலூர்ப் பெருவெளியில் இப்போது உதயமாகிவிட்டது. இதனால் மனித குலம் ஒரு வழிப்பட்டு முன்னேறப்போகிறது. இன்ப வாழ்வில் தழைத்து ஓங்கப் போகிறது. இது திண்ணம்.

எல்லாச் சமய மதங்களுக்கும் அடிப்படையாக இருக்கும் மெய்ப் பொருள் ஒன்றுதான். நம் நாட்டு அகச்சமயத் தலைவர்கள் அந்த மெய்ப் பொருளை தங்கள் உள்ளேயே இருப்

பதை முயன்று உணர்ந்தார்கள். அந்த உண்மையை மக்களுக்குத் தெரிவித்தார்கள்.

சமயங்களில் முக்கியமானவை, சைவம், வைணவம், பௌத்தம், ஆருகதம் முதலியன. மதங்களில் குறிப்பிடத் தக்கவை வேதாந்தமும் சித்தாந்தமும் ஆகும். இவைகளுக்குப் பின்னால் தோன்றியவை ஷண்மதங்கள்.

இவைபோக ஓரளவு அன்பும் அறிவும் தழைத்த மன வெளியிலிருந்து கிறிஸ்துவம், முகமதியம் முதலிய மதங்கள் தோன்றின. இவை தனித்தனியாக வளர்ந்தபோதிலும் இரண்டும் அருட்பெரும் ஜோதியில் இருந்தே தோன்றியவை என்பதை மறந்துவிடக்கூடாது.

எந்தச் சமயமும் மதமும் எல்லாமாகிய அருட்பெருஞ் ஜோதி ஒன்றுதான் கடவுள் என்று தெளிவாக எடுத்துக் காட்டி மக்களை ஒன்றுபடுத்தவில்லை.

எல்லாச் சமயங்களும் ஒரே பரம்பொருளையே சுட்டு கின்றன. எந்த மார்க்கமும் ஒரே இடத்திற்குத்தான் போய்ச் சேருகிறது.

எல்லாச் சமயங்களும் மதங்களும் ஒன்றுதான் என்று சொன்ன சமரச ஞான உபதேசம்கூட ஒரே கடவுளை உள்ளபடி நமக்குக் காட்டவில்லை. இதனால் உலகில் சமய மதங்களால் ஏற்பட்டு இருக்க வேண்டிய உண்மையான பலன் ஏற்படவில்லை.

எல்லாச் சமயங்களும், மதங்களும் மனிதன் வேறு. கடவுள் வேறு என்று பிரிக்கின்றன. மனிதன் தனியாக இருந்தே கடவுளைச் சென்று அடையவேண்டும் என்று போதிக் கின்றன. அதற்கு வேண்டிய வழிமுறைகளையே அவைகள் சொல்லி இருக்கின்றன.

அந்தச் சமயங்கள், கடவுளை நித்தியர் என்றும், பூரணர் என்றும், சர்வ வல்லவர் என்றும், எல்லாம் ஆனவர் என்றும் அவர் இல்லாத இடமே இல்லை என்றும் சொல்லுகின்றன. இது அறிவுக்குப் பொருத்தமாகவே இருக்கிறது.

இந்தக் கருத்துக்களை இணைத்துப் பார்க்கும்போதுதான் அதில் இருக்கும் முரண்பாடுகளைக் காண்கின்றோம்.

கடவுள் எங்கும் நிரம்பி இருப்பவர் என்றால், நாம் அவரைவிட்டுப் பிரிந்து எப்படி இருக்க முடியும்? கடவுளை விட்டு நாம் பிரிந்து இருக்க முடியாது என்றால் நாம் கடவுளாகவே இருக்க முடியுமல்லவா?

நம்மைப் போலவே மற்ற எல்லாமும் கடவுளாக இருக்க முடியுமா என்றால் அது மட்டும் முடியாது, இது நிச்சயம்.

பின்னர் உண்மைதான் என்ன?

சமயங்களின் முடிவு, மனிதன் கடவுளில் மறைந்து போவதுதான் என்பது. ஆறுகள் கடலில் கலக்கும் வரையில் தனித்தனியே ஓடிக்கொண்டிருக்கின்றன. முடிவில் கடலில் கலந்து, கடலோடு கடலாகி விடுகின்றன. ஆனால் அந்தக் கடல் மட்டும் எப்போதும்போல இருக்கிறது.

குறிப்பிட்ட ஒரு சமய சாதகர் தம் வாழ்வின் முடிவில் கடவுளில் இரண்டறக் கலந்து விடுகிறார். அவருடைய தனிப்பட்ட வாழ்வையும் இழந்து விடுகிறார்.

இதுதான் சமயங்கள் காட்டும் முடிவு.

நித்திய இன்ப வாழ்வில் ஒத்து விளங்கி நிலவ வழி காட்டாத சமயங்களும் மதங்களும் நிறைவுள்ளவை அல்ல. இந்தச் சமயங்களின் முடிவுகளுக்கும் மேலாகச் சமயங்களைக் கடந்த பரம்பொருள் ஒன்று இருக்கிறது. அது தீண்டுவதற்கு அரிய அருட்பெரு வெளியில் ஆனந்தத் தாண்டவமாகிய அருட் செயலை நிகழ்த்திக்கொண்டே இருக்கிறது.

அந்த அருட்பெரும் செயலை நிகழ்த்துவது அருட்பெரும் ஜோதி. அதன் பேரருளால் பொருட் சக்தி முதலிய ஐந்து சக்திகளும் வெளிப்படுகின்றன.

அவைகளின் மூலமாக உலகில் உள்ள எல்லா பொருள்களும், உயிர்களும் தோன்றிச் செயல்படுகின்றன.

அந்த அருட்பெருஞ் ஜோதியையே சிற்சபை பொற் சபையோடு கூடிய சத்திய ஞானசபையில் காண்கிறோம். அதன் அருளாலேயே அதைக் காண்கிறோம். அருட்பெரும் ஜோதியை நம் உள்ளே பார்த்து, அதுவே நாம் என அறி கிறோம். அதனுடன் அதுவாகவே ஒன்றி அருள் விளக்கமாய் விளங்கியும் வருகிறோம்.

அகநிலையில் நாமும், அருட்பெருஞ் ஜோதியும் ஒன்றாகி அத்துவிதமாக இருக்கிறோம்.

இந்த அத்துவித நிலையில் நாம் இருப்பதை உணராமல் வெறும் உடல் இச்சைகளை நிறைவேற்றிக்கொள்ளும் போக வாழ்வில் மூழ்கி அவத்தைப்பட்டு வருகிறோம்.

ஆன்ம சிற்சபையில் ஆண்டவர் இருப்பதை உணராமல், அதை வெளியில் இருந்து பார்க்கிறோம்.

உண்மையில் நம் அகத்தில் அருள்தன்மையுடன் விளங்கும் அருட்பெரும் ஜோதியுடன் இணைந்தே இருக் கிறோம். ஆனால் அருட்பெருஞ் ஜோதியைச் சுற்றியே ஜீவதே கம் முதலியவைகளை உருவாக்கி வருகிறோம்.

நமக்குப் புறத்தே இருப்பனவாகத் தோன்றுபவை எல்லாம் அகத்தின் பிரதிபலிப்பேயாகும். அவை தனித்து இருந்து விளங்குவன அல்ல.

இதை உணராத நம் முன்னோர்கள் கடவுளை விட்டுத் தாம் புறத்தில் இருப்பதாகக் கருதியும், கடவுளைப் பிரிந்து தனியே இருப்பதாக எண்ணியும் அந்தக் கடவுளை அடையச் சென்றனர். கடவுளை அடைந்து அனுபவிக்க முடியாமல் முடிவில் இறந்துபோயினர்.

இந்த உண்மையை நன்கு உணர்ந்தவர் வள்ளலார். அதனால்தான் ''பொறித்த மதம் சமயம் எல்லாம் பொய் பொய்யே'' என்று முரசு கொட்டுகிறார்.

''சமயங்களையும், மதங்களையும் மூடமெனவும், கண் மூடிப் பழக்கமெனவும் ஒரே அடியாகச் சாடுகிறாரே

வள்ளலார்'' என்று குறைப்பட்டுக் கொள்ளுகின்றனர் கடவுள் உண்மை அறியாத சமயவாதிகள்.

பல மார்க்கங்களை நம்பி, அவற்றின் சட்ட திட்டங் களுக்குக் கட்டுப்பட்டு நடந்து, முடிவில் சமயவாதிகள் மடிந்துபோகின்றனர்.

எல்லா மனிதர்களையும் போலவே இறந்துபோன சமய வாதிகளை அவர்கள் இறை வாழ்வு அடைந்திருக்கிறார்கள் என்று, அந்தச் சமயத்தின் நெறியாளர்கள் சொல்லி வரு கிறார்கள். இது எப்படி உண்மையாகும்?

வேத ஆகமக் கலைகளும் சாத்திர தோத்திரங்களும் கடவுளுக்குப் புறத்தில் நின்று நம்மை வழிபடச்சொல்லி வருகின்றன. இந்தப் புறத்தோற்ற வழிபாட்டால் என்ன பயன் ஏற்பட்டுவிடப்போகிறது?

இவை எல்லாவற்றையும் கடந்து நிற்பது அருட்பெருஞ் ஜோதி. அதுவே மெய்ப்பொருளாகவும் இருக்கிறது.

எந்தச் சமயமும் திருச்சிற்றம்பலத்தில் இறைவன் இருப்பதாகக் கூறுகிறது. இதன் உண்மை என்ன? எல்லாச் சமயங்களும் ஒத்துக் கொள்ளக் கூடிய ஒரே கடவுள் திருச் சிற்றம்பலத்தில் இருக்கும் அருட்பெருஞ்ஜோதிதான். அதனால்தான் எல்லாச் சமயங்களும் திருச்சிற்றம்பலத் தில் இறைவன் இருப்பதாகக் கூறுகின்றன.

மேலான இந்த அருட்பெருஞ் ஜோதி அனுபவ வாழ்வை மக்கள் பெறுவதற்கு எந்தச் சமயத்தின் கொள்கைகளையும், மதத்தின் கொள்கைகளையும் அவர்கள் பின்பற்ற வேண்டிய தில்லை. ஆனால் ஜீவ தயவுடன் உயிர்க்குலத்துக்குத் தொண் டாற்றி வரவேண்டும். ஜீவ தயவுடன் வாழ்க்கை நடத்தும் சுத்த சன்மார்க்கத்தை மேற்கொண்ட மக்கள் நிலையான ஆனந்தத்தைப் பெற்றிருப்பார்கள்.

சமய மதக் குழிகளிலே கிடந்து மடிந்துகொண்டிருக்கும் மக்களை அருள் ஒளி காட்டித் தெளிவிப்பார்கள். அவர்களை

மேலே தூக்கி ஆனந்த வாழ்வில் வாழ வைப்பார்கள். இதற்குத் துணை புரிய வந்திருக்கிறது அருட்பெருஞ் ஜோதி.

சமய மதங்களிலே பற்றுகொண்டு இதுவரை பட்ட தெல்லாம் போதும். அதைவிட்டு அருட்பெருஞ் ஜோதி பதிக்கு வாருங்கள் என்று அன்போடு அழைக்கிறார் அருட் பிரகாச வள்ளலார்.

பழமை விரும்பிகளே! இன்னும் அருட்பெரு நெறிக்கு மதிப்புக் கொடுக்காமலும், வள்ளல் பெருமானின் அருள் உழைப்புக்குச் செவி சாய்க்காமலும், அந்தப் பெருநெறியில் செல்வோரைத் தடுத்துக்கொண்டும் இருக்கிறீர்களே! இது நியாயமாகுமா?

சமயமத முடிவுகளால் எதிர்பார்க்கப்படும் நன்மைகளை விட ஆயிரம் பங்கு அதிக நன்மைகளை வழங்க வந்திருக்கிறது அருட்ஜோதிப் பெருநெறி.

ஆகையால், எல்லாரும் எந்தவித ஐயமும் அச்சமும் கொள்ளாது, அருட்பெருஞ் ஜோதியை வழிபட்டுப் பெரும் பயன் பெறலாம். இது நம் முன்னோர் லட்சியத்துக்கு எந்த வகையிலும் மாறுபடாதது. அதனிலும் சிறப்புமிக்க லட்சியத்தை எளிதில் அடைய துணைசெய்யக்கூடியது.

சமயங்களையும் மதங்களையும் கடந்த பெருநெறியின் முடிந்த குறிக்கோள் கீழான நிலையில் இருக்கும் மாக்களை, சுத்த சன்மார்க்கத்தில் சேர்த்து மக்களாக்குவதுதான்; அழி யாத இன்ப அருட்பிரகாசச் செல்வர்களாக அவர்களை வாழ வைப்பதுதான்.

இப்போது மக்களுக்கு அளிக்கப்பட்டிருப்பது சுத்த சன்மார்க்கம். திருவருட்பாவிலே இந்தப் பொது நெறியைப் பற்றி சுத்தசிவமார்க்கம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'சுத்த சிவம்' என்றதால் சிலர் இதனைச் சைவ சமயத் தொடர்புடையதோ என்று சந்தேகிக்கிறார்கள்.

அவ்வாறு யாரும் சந்தேகப்பட வேண்டியதில்லை. இதன் கருத்தும், காரணமும் வேறு வேறாகும்.

பழந்தமிழ் மக்கள் கண்ட கந்தழி ஜோதிக் கடவுள் உண்மையைத்தான் 'சுத்த சிவம்' என்று திருஅருட்பாவில் சொல்லி இருக்கிறது. 'சத்' என்பது எங்கும் நிறைந்து விளங்கும் சிகர ஜோதி. அது 'சித்' என்னும் வகர சக்தி யால் எல்லாமாய் விளங்குகிறது. முடிவில் மனிதனின் சிர நடுவில் இருந்து 'ம்' என்னும் மகர மெய்யே இன்ப மோன ஜோதியாக ஓங்கித் திகழ்கிறது.

சத்சித் ஆனந்தமே சிவம் என்பது.

இந்தச் சிவமே நமது முன்ஞேர் கண்ட கந்தழி ஜோதி. இதுவே அக அனுபவத்தில் பெற்ற சச்சிதானந்த ஜோதி யாகும். இது அகத்தில் இருந்து மறைந்துபோகும் சாதார ணப்பொருளல்ல. அருளேயே முதலாகக்கொண்டு அகத்தில் இருந்து அனகமாகச் செயல்பட்டு என்றும் ஆனந்தமாக வாழும்படிச் செய்யவல்லது.

ஆகையால்தான் பெருநெறியை சிவமார்க்கம் என்று சொல்லாமல் 'சுத்த' என்ற அடைமொழியைச் சேர்த்து 'சுத்த சிவ மார்க்கம்' என்று சொல்லி இருக்கிருர் வள்ளலார்.

சுத்தம் என்ருல் தூய்மையுடைய அருள்; வெண்மை யான மாசற்ற அருள் என்று பொருள். அதனுல்தான் சிவத்திற்கு முன் அருளேச் சேர்த்து அருட்சிவ ஜோதி என் கிருர் வள்ளலார்.

இதே கருத்தில்தான் அருட்பெருஞ் ஜோதி அகவலின் தொடக்கத்தில், சிவமென்று ஆரம்பிக்காது, அருட்சிவ மாகத் தொடங்கி இருக்கிருர்.

திருவருட்பாவில், சிவம் என்றும், சுத்த சிவம் என்றும் வரும் இடங்களில் எல்லாம் அதைச் சமயநோக்கிலும், மத நோக்கிலும் பார்த்து இடர்ப்படக்கூடாது. எல்லாரும் அருள் ஒளியில் ஒப்பற்ற மெய்ப்பொருளேயே காணவேண்டும்; அதை ஏற்று வழிபட்டுப் பெருநலம் பெறவேண்டும்.

பழைய சமய மதங்களுக்கெல்லாம் முடிவு அருட்பெருஞ் ஜோதியே. நதிகள் கடலில் சென்று கலந்துவிடுகின்றன. அது

போல எல்லாச் சமய மதங்களும், ஜோதியில் கலந்து மறைந்து விடுகின்றன. அவைகளில் கண்களை மூடிக்கொண்டு சென்றவர் களும், முடிவில் ஜோதியில் கலந்து மறைந்துவிடுகின்றனர். ஜோதியை அடைந்து அனுபவிக்கவேண்டுமே ஒழிய, அதில் கலந்து விடுதல் கூடாது. அப்படிக் கலப்பது வெறும் சூனிய வெளியில் கலந்து சூனியமாகி விடுவது போலத்தான்.

அந்தச் சூனியப் பெருவெளியிலும் சரி, உலகில் தோன்றிச் செயல்படும் கோடிக்கணக்கான அண்ட பிண்டங்களிலும் சரி, அனாதியாக, நித்தியமாக, பரிபூரணமாக இருப்பது அருட் பெருஞ் ஜோதி ஒன்றுதான்.

அது தன் ஐம்பெருஞ் சக்தியால் எல்லாமாய்த் தோன்றியும், இருந்தும், முடிவில் மறைந்தும் இருக்கிறது. இவ்வாறு இருந்தாலும்கூட அருட்பெருஞ்ஜோதிக்கு எவ்வித சலனமும், பாதிப்பும் ஏற்படுவதில்லை.

எத்தனையோ சமயங்களும், மதங்களும் மனித உள்ளத்தில் தோன்றி உலக அரங்கில் வளர்க்கப்பெற்று இருக்கின்றன. அது உயிர் அனுபவத்தில் சில பயன்களை விளைவித்தும் இருக்கிறது. இருந்தாலும் முடிவில் அது சூனிய வெளியில் ஒடுங்கியே போய்விடுகிறது.

இந்தச் சமய மதங்களைக் கடந்த நிலையில் இருப்பது அருட்பெருஞ்ஜோதி. அருட்பெருஞ்ஜோதியைத் திருவருளால் கூடி நின்று அனுபவித்தல் ஒன்றே பயன் அளிக்கக்கூடியது. பெருவாழ்வை அளிக்கக்கூடியது!

இந்த உண்மையைத் திருவருள் இப்போது எல்லாருக்கும் உணர்த்தத் தலைப்பட்டுவிட்டது.

அருட்பெருஞ் ஜோதியின் அருள் ஆற்றலை உலகம் இன்னும் சரியாக அறிந்துகொள்ளவில்லை. அதனால் புறத்தும் அகத்தும் இயற்கையாலும், செயற்கையாலும் ஏற்பட்டுள்ள மாற்ற தோற்றங்களால், வேறுபாட்டு உணர்ச்சியைப் பெருக்கிக்கொண்டே வருகிறது. இந்த வேறுபாடுகளால் ஒத்து வாழ முடியாமல் பல அல்லல் இடையில் உலகம் தொல்லைப்பட்டுக்கொண்டு இருக்கிறது.

இந்த நிலே மாறியே ஆகவேண்டும். இதற்கு எல்லார் உள்ளத்திலும் அருட்பெருஞ் ஜோதி உதயமாகவேண்டும்.

மக்கள் உள்ளத்தில் இயல்பாகவே உதயமாகத் தொடங்கிய அருட்பெருஞ்ஜோதி இப்போது திருவருளால் வடலூர்ப் பெருவெளியில் நன்ருகத் தோன்றி கதிர் பரப்ப ஆரம்பித்திருக்கிறது.

இனி உலகில் வேற்றுமை மறைந்துபோகும். பேதம் எல்லாம் ஒழிந்து போகும். அபேதமான ஒற்றுமை ஏற்பட்டு நல்வாழ்வு ஏற்படும்.

உலகில் இயற்கையில் இருக்கும் வித்தியாச நிலேகளேக் களேந்து விட முடியாது; அப்படிச் செய்யவும் தேவையில்லே.

அறிவு, ஆற்றல், செயல்திறன் முதலியவை ஒவ்வொரு வரிடமும் ஒவ்வொரு மாதிரி சிறப்புடன் இருப்பது இயல்பு.

ஆனுல் உலகியல் வாழ்வில் அவர்கள் எல்லாரும் ஒத்தார், உயர்ந்தார், தாழ்ந்தார் என்று பேதம் பாராமல் ஒருமையுளராகித் தயவோடு இணைந்து வாழ்வதற்குப் பழகிக்கொள்ளவேண்டும்.

இந்த மாதிரி வாழ்வதற்குத் தடையாக இருக்கும் சமய மதக்கொள்கை கோட்பாடுகளேயும், சட்ட திட்டங்களேயும், ஆசாரப் பழக்க வழக்கங்களேயும், ஜாதி, வகுப்பு முதலிய பிரிவு முறைகளேயும் வலிந்து மேற்கொள்ளாது விட்டுவிட வேண்டும். அருட்குணங்கள் வளர்வதற்கும், உலகியல், அரசியல், அருளியல், பண்பாட்டு வளர்ச்சிக்கும், அருட்பெரு நெறியாம் சுத்த சன்மார்க்கத்தை ஒவ்வொருவரும் மேற் கொண்டு ஒழுகிவரவேண்டும்.

இந்த மார்க்கம், மற்ற நெறிகளேப் போன்று நம்மைக் கடவுளிடம் இருந்து பிரித்துத் திசைமாற்றிவிடும் மார்க்க மல்ல. இது நம் அகத்திலேயே அருள் ஒளியுடன் அத்துவித மாய், அதுவே நாமாக இருப்பதை உணர்த்தக்கூடிய சன்மார்க்கம், அருள் ஞானத்தோடு எதையும், எல்லாவற்றை யும் பார்த்து அருள் இன்பம் வளரத் தூண்டும் மார்க்கம்;

இந்தப் பெருநெறி, மக்கள் இனத்தைப் பிரித்துவைக்கும் நெறியல்ல. அவர்களை ஒன்றுபடுத்தி வாழ வகை செய்யும் சன்மார்க்க நெறி. இதுவரை எல்லாச் சமய மதங்களின் முடிவும் மக்களை வாழ வைக்காது அவர்கள் அழிந்துபோகும் வழியைத்தான் காட்டி வந்தன. சன்மார்க்கம் அப்படி மக்கள் அழிவுபடும் முடிவுக்கும் ஒரு முடிவைக் கண்டிருக்கிறது.

சுத்த சன்மார்க்கம் தோன்றி அழிவுப் பாதைக்கு அழைத்துச் செல்கின்ற சமய மதங்களின் முடிவுக்கும் முடிவு கட்டிவிட்டது. இந்தமார்க்கம் காட்டும் அருட்பெருஞ் ஜோதி, உலகம் எங்கும் பரவத் தொடங்கி இருக்கிறது.

சமய மதங்களால் என்றும் பெறமுடியாத மரணமில்லாப் பெருவாழ்வை, பேரின்ப வாழ்வை சுத்த சன்மார்க்கம் மக்களுக்கு அருள வந்திருக்கிறது.

எந்த மதத் தலைவர்களும், அதன் அங்கத்தினர்களும் வடலூர்ப் பெரு வெளிக்கு வரவேண்டும். வந்து, சத்திய ஞான சபையில் அருட்பெருஞ் ஜோதியைத் தரிசிக்கவேண்டும். அப்போது, அவர்கள் அகத்துள் அருள் ஒளி அனுபவம் ஏற்படுவதைக் காண்பார்கள். தாங்கள் கண்ட அந்த அருள் ஒளி அனுபவத்தைத் தங்கள் கூட்டத்தினருக்கும் விளக்கிச் சொல்ல வேண்டும். அருட்பெருஞ்ஜோதி உண்மையை மக்களுக்கு எடுத்துக்கூறி அவர்களை நல்வழிப்படுத்தவேண்டும்.

புறத்தோற்றப் பழக்க வழக்க முறைகளில் அதிகக் கவனம் செலுத்துதல் வேண்டாம். தயவால் எல்லாரையும் நோக்கி அவர்களுக்குத் தயவுப்பணி செய்தலே மேல்நிலைக்குச் செல்லும் சன்மார்க்கமாகும்.

நம் அகத்துள் வளருகின்ற அருள் ஒளியே மற்ற மனிதர்களிலும் தேவ, ஜீவ வடிவங்களிலும் இருக்கிறது என்பதை உணரவேண்டும். இந்த உணர்வுடன் தயா வாழ்வைக் கடைபிடிப்பதுதான் சுத்த சன்மார்க்கம்.

பெருந்தலைவர்கள் முதலில் இந்த உண்மை வழிக்கு வந்துவிட்டால், அவர்களின் கீழ் இருக்கும் மக்களைச் சுத்த சன்மார்க்கத்திற்குக் கொண்டு வருவது மிகவும் சுலபம்,

சமய மத வெறி ஒழிந்தால்தான், சுத்த சன்மார்க்க நெறி விளங்கும். சுத்த சன்மார்க்க நெறி மூலம்தான் ஆனந்த சமுதாயத்தை உருவாக்க முடியும்.

இதைச் செய்வதற்காகவே இப்போது அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தோன்றி எல்லோரையும் வரவேற்கிறுர்.

சமயம், மதம் என்பவற்றிற்கு உரிய மெய்ப்பொருள் எது என்பதை அருள் வெளியில் இருந்து இப்போது நன்கு காண முடிகிறது.

'ச' என்பது சத் ஒளியாக, எங்கும் நிறைந்திருக்கும் உண்மைக் கடவுளின் அருட்பெரும் ஜோதியைக் குறிப்பது. 'மயம்' என்பது, இறைவனின் நிறை இயலைக் காட்டுவது.

எனவே 'சமயம்' என்ருல் எங்கும் நிறைந்திருக்கும் அருட்பெருஞ்ஜோதி உண்மையின் இயல்பை உணர்த்துவது.

மதம் என்ருல் மதியாகிற மெய்ஞ்ஞான அம்சமான இறை உணர்வு என்று பொருள்.

அருட்பெருஞ் ஜோதியின் மெய்ஞ்ஞான உணர்வுதான் உண்மையான சமய மதம் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த உண்மையை உணர்ந்தால்தான் மக்கள் இறை இன்ப அனுபவத்தோடு பேதமின்றி வாழமுடியும்.

மதங்களையும் சமயங்களையும் அருள் ஒளிபெருத குறுகிய நோக்குடையதாக இதுவரை பார்த்ததுபோல் இனிமேலும் பார்த்து வந்தால் மக்கள் மக்களாக வாழ இயலாது. அவர்கள் இறை இன்பத்தில் மூழ்கி மகிழவும் முடியாது.

உண்மையான கடவுள் உண்மையை சமயமும் மதமும் விளங்கிக் கொள்ளாததால்தான் அதைப் பின்பற்றிய மக்கள் அல்லல்பட்டு அழிந்து போய்க்கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு சமயங்களின் மதங்களின் முடிந்த முடிவு அருட்பெருஞ் ஜோதி ஞான அனுபவமாக இப்போது தோன்றி

இருக்கிறது. இதை வடலூர் சத்திய ஞான சபையின் புதுப் பொலிவுடன் கூடிய எழுச்சியால் உணரலாம்.

நம் உள்ளேயே அருட்பெருஞ் ஜோதியைக் காணலாம். நம் உள்ளே இருக்கும் அருள் ஒளிச் சுடரே நாமாய் இருப் பதையும் உணரலாம். இந்த உணர்விலே நின்று அருட்பெருஞ் ஜோதி ஒலியையும், ஒளியையும் உலகில் பரப்புவோம். அருட்செயலைச் செய்துகொண்டே இன்பமாக வாழ்வோம்.

# 6. சத்திய ஞானசபை

எல்லா உலகங்களையும் எக்காலமும் ஆண்டு வருபவர் ஆண்டவர். அவர் பொதுவாக எங்கும் நிரம்பி இருப்பவர். எனினும் மனிதனின் சிரநடுவில் இருக்கும் மெய்யறிவுப் பீடத்தில்தான் விளக்கமாக இருக்கிறார்.

மனிதன் பக்குவம் அடையும்போது அங்கிருந்து வெளிப் பட்டு அவனுக்கு அருள் பாலிக்கவும், பேரானந்தப் பெரு வாழ்வை அளிக்கவும் தயாராக இருக்கிறார்.

இந்த உண்மையைத் தெரிந்துகொள்வதற்கு முன், மக்கள் புறத்தே பல இடங்களில், பல்வேறு வடிவங்களில் இருக்கும் தெய்வங்களுக்குப் பலவகைக் கொள்கைகளுடன் வழிபாடு செய்து வந்தார்கள்.

பின்னர் ஞான யோகிகள் யோகப் பயிற்சியின் மூலமாகத் தங்கள் உள்ளே இருக்கும் ஆன்மக் கடவுளைத் தரிசித்து அதை வழிபட்டார்கள். அது அவர்களுக்குப் பல அற்புத சக்திகளையும் சித்திகளையும் கொடுத்தது.

அந்த ஞான யோகிகள் தாங்கள் அடைந்த கடவுளின் சக்தி சித்திகளைச் சாதாரண மக்களும் அடையவேண்டும் என்று விரும்பினார்கள். அதற்காக மூர்த்தி, தலம், தீர்த்தங் களை அமைத்தார்கள். அதில் வழிபாடு செய்வதற்காக வேதம், ஆகமம், புராணம், இதிகாச சாத்திரங்கள் ஆகியவற்றை இயற்றினார்கள். மக்களிடம் பக்தி முறையைச் சுலபமாக வளர்க்கப் பல தெய்வ விளக்கத் தோத்திரங்களையும் ஏராள மாகப் பாடிக் குவித்தார்கள்,

வெறும் உடல் இன்பத்தையே நோக்கமாக எண்ணி வாழும் மக்களால் இவைகள் மூலமாக கடவுள் உண்மையைக் காண முடியவில்லை. தங்கள் இச்சைகள் நிறைவேறுவதற்காக மிகுந்த ஆவலுடன் பக்தி வழிபாட்டில் ஈடுபட்டு வந்தார்கள்· இதனுல் ஓரளவு நன்மையும் பெற்று மகிழ்ந்தார்கள். முடிவில் எந்த நிலையான பலனும் பெருமல் மடிந்துபோனுர்கள்.

தெய்வ ஆலயம் என்பது நமது உயிர், கடவுள் உண்மையில் லயமாகும் இடம். அப்படி லயமாகி இருந்த உயிர் கடவுள் தன்மையைப் பெறும் போது அது ஆன்மா என்ற பெயரைப் பெறுகிறது. ஆன்மாவுக்குள் இறைவன் இருப்பதால் ஆன்மாவும் தெய்வ ஆலயமாகிறது.

இந்தக் காரணத்தால்தான் 'கோ' ஆகிய கடவுள் இல்லத்தை 'கோயில்' என்ருர்கள். 'ஆ' ஆகிய உயிர்க்கடவுள் உண்மையில் லயமாகிற இடத்தை 'ஆலயம்' என்ருர்கள்.

ஆன்மாவே, கடவுள் தன்மையை உடையது என்ற உண்மையை உணர்ந்தார்கள் ஞான யோகிகள். மனித வடிவில்தான் ஆன்ம விளக்கம் பூரணமாக வெளிப்பட்டுச் செயல்படுகிறது. இவ்வாறு செயல்படுகிற மனித வடிவங்களையே இறைவனின் ஆதாரபீடமாகவும், நிராதார பீடமாகவும் கண்டார்கள். அதனுலேயே மனித உருவில் தெய்வ வடிவங்களை அமைத்தார்கள்.

இந்தத் தெய்வங்களுக்கு மனித வடிவ அமைப்பிலேயே ஆலயங்களைக் கட்டி அதில் மக்கள் வழிபாடு செய்வதற்கு ஏற்பாடுகளும் செய்தார்கள்.

தெய்வ ஆலயங்களைப் பெரிய அளவில் பொருத்தமான இயற்கைச் சூழலில், சிற்ப அற்புதங்களுடன் ஞான சித்தர்கள் அமைத்தார்கள். அந்தக் கோயில்களில் விழாக்களை விமரிசையாய் நடத்த மக்களைப் பழக்கப்படுத்தியும் வைத்தார்கள்.

இந்த உபாய நெறியில் அபாயம் ஒன்றும் இல்லை. என்ருலும் எதிர்பார்த்த அளவு பயன் எதுவும் கிடைக்கவில்லை.

ஞானிகள், கடவுள் ஒருவரே என்பதையும், அவர் சத்தியமானவர், நித்தியமானவர், எல்லாம் வல்லவர் என்ற உண்மையையும் உணர்ந்தார்கள். அந்தப் பரம்பொருளைப் பிறர்க்கு உணர்த்தவும் விரும்பினுர்கள். அவர்களும் பரம் பொருளை உணர்ந்து, அதை வழிபட்டு, பயன் அடைய வேண்டும் என்று கருதினுர்கள்.

அதற்காக எவ்வளவோ காலமாக, எப்படி எப்படியோ சிந்தித்து ஆலயங்களை நிர்மாணித்தார்கள். அந்த ஆலயங் களில் மணிமந்திர மருந்துச் சத்து ஊட்டிய, அக்கர சக்கரங் களுடன் கூடிய விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்தார்கள்.

அந்த விக்கிரகங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஆலயங் களுக்குச் சென்று வழிபட்டவர்கள் ஓரளவு தாங்கள் விரும்பிய பயனைப் பெற்ருர்கள். ஆனுல் அவர்களால் அழியா இன்ப அருட்பெரு வாழ்வைப் பெறமுடியவில்லை.

அருட்பெரு வாழ்வுதான் ஒவ்வொருவரும் அடையவேண் டிய உன்னதமான வாழ்வு என்பதைக்கூட அவர்களால் உணர்ந்துகொள்ள முடியவில்லை.

இவ்வளவு காலம் யாராலும், எவ்வளவோ பாடுபட்டும் அறிந்து கொள்ள முடியாதிருந்த கடவுள் உண்மை இப் போது வள்ளலார் மூலமாக வெளியாகி இருக்கிறது.

**வள்ளலார் தோற்றம்:**

அருள் ஒளி ஆண்டவர் அருள்விளக்கம் செய்வதன் பொருட்டு தாமே மனிதர்களில் தகுந்த காலத்தில் தோன்று கிருர். அந்த மனிதர்களையே, மகான்கள் என்றும், அவதார புருஷர்கள் என்றும் உலகம் கொண்டாடுகிறது.

உண்மையில் கடவுள் மனிதனுக மாறி வந்து பிறப்பதில்லை. பரம் பொருள் நித்திய நிறைவுடையவர். பரிபூரணமாய் எங்கும் நிரம்பி இருப்பவர்.

பரிபூரணமாய் இருந்தே பெரியோர்களின் மூலம், தன் தெய்வச் செயல்களை ஓரளவு வெளிப்படுத்தி வருகிறவர்,

முடிவில் அந்தப் பெரியோர்களின் புறத்தோற்றத்தைத் தம்மில் மறையும்படிச் செய்துவிடுபவர்.

வள்ளல் பெருமானே இந்தப் பெரியோர்களைப்போல் அல்லாமல் அருள் ஒளி விளக்கத்தை மக்களுக்கு வழங்குவதற்காகவே இந்த உலகில் தோன்றியவர்.

மார்கழி மாதம், திருவாதிரைத் திருநாள்; மருதூரில் சின்னம்மை என்னும் ஒரு பெண்மணி தம் வீட்டுத் திண்ணையில் அமர்ந்திருக்கிறார்.

அவர் முன்னால் ஒரு சிவயோகி தோன்றுகிறார். அந்தப் பெண்மணிக்கு அருள்வாக்கு அளிக்கிறார்.

அந்த அருள்வாக்கின் ஆற்றலால், சின்னம்மையாரின் வயிற்றில் கரு உருவாகத் தொடங்கியது. அந்தத் தெய்வக்கரு, வளர்ந்து நிறைவுற்றது. குழந்தையாகப் பிறந்தது.

அந்தக் குழந்தை பிறந்த நாள், புரட்டாசி மாளய அமாவாசைக்கு அடுத்த நவராத்திரியின் இரண்டாம் நாள்.

பிறை தோன்றிய வேளையில் தோன்றிய பிள்ளை, இராமலிங்கம் என்ற பெயருடன் வளர் பிறையாக வளர்ந்து வந்தது. அந்தப் பிள்ளை முதலில் தில்லையில் ஜோதியைக் கண்டது. சென்னையில் தணிகைவேலனைத் தரிசித்தது. இன்னும் பல தெய்வத் தோற்றங்களையும் பார்த்தது. இவை எல்லாம் அந்தக் குழந்தையின் உள்ளே வளர்ந்து வந்த அருட்பெருஞ் ஜோதியின் பலவகைக் கற்பனை வடிவங்களே.

தெய்வ உருவங்கள் பலவகையில் இருக்கின்றன. இந்தத் தெய்வ உருவங்கள் எல்லாம், நம் உள் இருக்கிற அருட்பெருஞ் ஜோதி உண்மையைத் தெரிந்துகொள்ள உதவுகின்றன.

வள்ளலாரும் தெய்வ உருவங்களின் உதவியால் தம் உள்ளக் கோயிலில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதியைப் பார்த்தார். அதன் தனிப்பெருங்கருணையால் ஆட்கொள்ளவும் பட்டார். அருட்பெருஞ் ஜோதியே தாமாகி தம் அருட் பிரகாசத் திருஉருவத்துடன் சுத்ததேகம், பிரணவ தேகம், ஞான தேகம் ஆகிய முத்தேக சித்தியும் பெற்றார்.

எங்கும் நிறைந்திருக்கும் நித்திய அருட்பெருஞ் ஜோதிக் கடவுளே, இராமலிங்க அடிகளின் உள்ளேயும் இருக்கிருர். திருவருட்பிரகாச வள்ளல் என்றும் விளங்கிக் கொண்டிருக்கிருர். இவ்வாறு விளங்கி தம் அருள் ஆட்சியை உலகமெல்லாம் பரப்பத் தொடங்கி இருக்கிருர்.

கடவுளின் நித்திய நிலே, நம் உள் அருவமாய் இருந்தது: அது உணர்ந்துகொள்ளப்படாமல் இருந்தது. வெளியே முழுமையாகப் பார்க்கப்படாத அகண்ட பேருருவமாய் இருந்தது. அகம், புறம் எங்கும் என்றும் பூரணமாய் விளங்கும் அருவுருவமாயும் இருந்தது. இதுதான் அனக வடிவம்.

அனக வடிவம் இதுவரையில் மனிதனில் வெளியாகவில்லே. இப்போதுதான் வள்ளலார் உருவில் வெளியாகி இருக்கிறது. 'பின்சாரும் இரண்டரை நாழிகையளவில்' அருட்பிரகாச அனக வடிவமாய் அனுபவத்துக்கு வந்து இருக்கிறது.

இந்தக் கருத்தையே ''ஆண்டவர் இரண்டரை நாழிகையில், பேருடம்பிற் கலந்து, உளத்தே பிரியாமல் இருப்பார்'' என்று வள்ளலார் சொல்லி இருக்கிருர்.

இந்த அனக வடிவம் ஒன்றே கடவுளின் முழுமையான தோற்றமாகும். இது மனிதனின் அகமாகிய ஆன்மச் சிற்றுருவிலிருந்து அவனுடைய இறையனுபவத்தால் 'அருட்பெருஞ் ஜோதி தனிப்பெருங்கருணே' யாகத் தோன்றுவது.

அனகம் என்ற சொல்லே விரித்துப் பார்த்தால் இந்த உண்மையை நன்கு விளக்கிக்கொள்ளலாம். 'அனகம்' என்ற சொல்லே அன் + அகம் என்று பிரித்துக் காணலாம். அன் என்ற இரண்டு எழுத்துக்கள், தமிழ் எழுத்துக்களில் முதலும் முடிவுமாக இருக்கின்றன. அவை கடவுளின் அடி முடி உண்மையைச் சுட்டிக் காட்டுகின்றன.

அகம் என்ற சொல் ஆன்மாவைக் குறிப்பது. அனகம் என்ற சொல் இறைவனின் அடி முடி ஆன்மாவில் பொருந்தி இருக்கும் உண்மையை உணர்த்துகிறது.

இந்த அனக வடிவம் கடவுளுக்கே உரிய ஒரு தனிச் சிறப்பு வடிவமாய் வள்ளலாரின் உள் இருந்து அருட்பிரகாச மாய்ச் செயல்பட்டுவருகிறது.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வள்ளலார் வடிவில், வெளியாகித் தம் அருட்பெருஞ் ஜோதிச் செங்கோலை உல கெல்லாம் செலுத்தத் திருவுளம் கொண்டிருக்கிறார். இந்த அருள் ஆட்சி பிரபவ (1867) ஆண்டு வைகாசித் திங்கள் பதினோராம் நாள், வியாழக்கிழமை சூரிய உதயம் இடப வேளையில் வடலூரில் தோன்றியது. ஜீவகாருணிய விளக்கத் தோடு வடலூர்ப் பெருவெளியில் ஆரம்பிக்கப்பட்ட ''சத்திய தருமச்சாலை''யில் தோன்றியது.

இந்தக் காலமும் நேரமும் வள்ளலாரிடம் அகத்தும் புறத்தும் அருள் அனுபவம் வெளிப்படுவதற்கு உரிய கால மாகவும் இருந்தது. இது ஒரு அற்புதமாகும்.

தமிழ் வருடங்களில் பிரபவ ஆண்டு தொடக்க ஆண் டாகும். வைகாசி மாதத்தை ரிஷபத் திங்கள் என்று சொல் வது மரபு. இந்த மாதத்தை அருள் ஞான விளக்கத்துக்கு உரிய மாதமாகச் சான்றோர்கள் சொல்வார்கள். பதினோராம் தேதியில் ஒரு சிறப்பு இருக்கிறது. பத்து என்ற எண் ஆன்மாவையும், ஒன்று என்ற எண் கடவுளையும் குறிக்கும். பதினொன்று ஆன்மாவும் கடவுளும் ஒன்றியுள்ள உண்மையை உணர்த்தும். வியாழக்கிழமையைக் குருவாரம் என்பார்கள். இது அருளனுபவத்தைக் கூட்டி வைப்பதற்கு உரிய நாள்.

இவ்வளவு பொருத்தங்களும் கூடிய ரிஷப வேளையில் சூரிய உதயத்தில் வள்ளலாரின் உள்ளே இருந்து அருட் பெருஞ்ஜோதியின் தனிப்பெருங் கருணை வெளியாகத் தொடங்கியது. இது எவ்வளவு பொருத்தமானது!

இந்த அருள் அருணோதயம் ஆன பிறகுதான், தாம் பெற்ற அனுபவ சித்தியை மக்களுக்கு வழங்குவதற்காக சத் விசார சாகாக்கலை நிலையத்தையும், கடவுள் உண்மையை

உணர்ந்து வழிபட்டு உய்வதற்கான சத்திய ஞான சபையையும் வள்ளலார் ஏற்படுத்தினுர்.

அந்த நாளில் சாகாக் கல்வியைக் கற்றுக் கொள்ள யாரும் முன்வரவில்லே. அதனுல் சாகாக் கல்வியை வழங்குவதற்கென்று திறக்கப்பட்ட சாகாக்கலே நிலேயத்தை வள்ளலார் மூடி விட்டார்.

''கடையைத் திறந்தேன் கொள்வாரில்லே கட்டிவிட்டேன்'' என்று வள்ளலார் சொல்லி இருக்கிருர். இது சாகாக் கல்வியை கற்பிக்க ஆரம்பித்த கல்வி நிலேயத்தை மூடி விட்டது பற்றி வள்ளலார் சொன்னதுதான்.

ஆனுல் கடவுள் உண்மையை விளக்கும் சத்திய ஞான சபையை அமைக்கத் திட்டம் இட்டார். தத்துவ விளக்கப்படி அமைக்க வரைபடமும் தீட்டிக் கொடுத்தார். ஒருவாறு சத்திய ஞான சபை உருவாகித் திறக்கவும் பட்டது. ஞான சபையில் தைப்பூச ஜோதி தரிசனமும் காட்டப்பட்டது.

ஞான சபையின் உண்மையையும்,அதில் வளர்ஒளியாய்த் திகழும் அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் விளக்கத்தையும் புரிந்து கொள்ளும் பக்குவம் உடையவர்கள் அந்த நாளில் யாரும் இல்லே. அருள் உணர்வோடு ஞானசபைத் திருமுன் சென்று, தரிசித்து, வழிபட்டு வருபவர்களும் இல்லே. தினசரி வாழ்வையே உள்ள நிறைவோடு நித்திய வழிபாடாக்கிக் கொண்டவர்களும் யாருமில்லே.

திருவருட்பிரகாச வள்ளலாரின் அருட்பெருஞ் செயலால் எல்லாரிடத்திலும் அருட்பெருஞ் ஜோதியைக் காணும் பக்குவம் இப்போது ஏற்படத் தொடங்கி இருக்கிறது. இனிமேல் அருட் பக்குவம் பெற்ற மக்களே உலகம் எங்கும் காணலாம்.

**ஞானசபையின் விளக்கம்:**

உண்மை அறிவுதான் சத்திய ஞானம். இந்த சத்திய ஞானம் நம் உள் தோன்றி ஆனந்தம் அளித்து நம்மை வாழச் செய்யும் நிலேயமாக சத்திய ஞான சபை இருக்கிறது.

ஞான சபையில் எழுந்தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தன் தனிப்பெருங் கருணையால், இங்கு பிரிவில்லாமல் இருந்து வர இசைந்திருக்கிறார். உலகுக்கெல்லாம் நித்திய வாழ்வுடன் கூடிய அருள் இன்ப ஒளியைப் பரப்பி வரவும் இசைந்திருக்கிறா.

நித்திய வாழ்வை வேறு எந்தக் கோயில் வழிபாட்டின் மூலமாகவும் பெற முடியாது. பக்தி வழிபாடு செய்பவர்கள் தாங்கள் விரும்பிய சில அற்பப் பயனை வேண்டுமானால் பெறலாம். கடைசியில் அவர்கள் வாழ்வும் நித்திய அனுபவம் பெறாமலேயே முடிந்துவிடும்.

காரணம் திருக்கோயில் சந்நிதிகளில், தெய்வங்களுக்கு வெளியில் இருந்துதான் மக்கள் வழிபடுகிறார்கள். தேக போகத்துக்காகவே வழிபடுகிறார்கள். அதிலேயே அழுந்திக் கிடக்கிறார்கள். முடிவில் அவர்கள் பெற்ற எல்லாச் செல்வங்களும், சுகபோக வாழ்வுகளும் சூனியமாகிவிடுகின்றன.

ஆனால் சத்திய ஞான சபையில் எழுந்தருளி இருக்கும் அருட்பெருஞ் ஜோதியின் இணைப்பாலோ மக்கள் மரணமிலாப் பேரின்பப் பெருவாழ்வு பெறலாம்.

தங்கள் உள்ளக் கோயிலில் இருக்கும் உண்மைக்கடவுளைக் கண்டு அதனுடன் ஒன்றி வாழ முயல வேண்டும். அவ்வாறு ஒன்றி வாழ்ந்தால் எவ்வுயிரிலும், எப்பொருளிலும், எதிலும் அருட்பெருஞ் ஜோதியே இருப்பதைப் பார்த்து மகிழலாம். பேரின்ப, அன்பு வாழ்வு பெற்று நிலைத்து வாழலாம்.

**1. ஞானசபை விளங்கும் இடம்:**

மனிதனின் தலையில் இருக்கும் மூளைப் பகுதியிலிருந்து தான் அறிவு அனுபவம் ஏற்படுகிறது.

இம் மூளையிலும் முக்கிய பகுதி முகுளம் என்கிற ஓங்கார மூளை (Medulla oblongata). இதற்கு முன்னும் பின்னும் (Cerebrum, cerebellum) என்னும் பகுதிகளில் இருந்து அறிவு அனுபவம் செயல்படுகிறது.

முகுளத்தின் மீது, பகர வடிவக் குழி (Cerebro spinal cavity and its fluid) ஒன்று இருக்கிறது. அதில் பாதி அளவு அமுத நீர் நிறைந்து இருக்கிறது. மற்ற பாதி இடத்தில் நிராதாரமாக தெய்வ ஜோதி இருக்கிறது.

இந்த ஒளியின் பெருஞ் செயலால்தான், இப்பகுதிக்கு அடியில் இருக்கும் உயிர் விளக்கத்துக்கும் அறிவு விளக்கத்துக்கும் ஆற்றல் உண்டாகின்றன. அந்த ஆற்றலைச் செயல்படுத்தும் (Pineal and pituitary gland or body) முக்கிய சுரப்பி, கோளம் முதலியனவும் அதற்குக் கீழே இருக்கின்றன.

நமக்குச் சுகானந்த அனுபவத்தைத் தருகிற தெய்விகப் பெருவாழ்வு கிடைக்கும் இடம் தலைப்பகுதியில் இருக்கிறது.

இதை உணர்த்துவதற்காகவே ''சுத்த சன்மார்க்க அனுபவம் கழுத்துக்கு மேல் தலைப்பகுதியில் கிடைக்கும்'' என்கிறார் வள்ளலார்.

நம் உடலின் தலைப்பகுதியில் ஆண்டவர் இருக்கிறார் என்ற உண்மையை உணராதவர்கள் வெறும் தேகபோக வாழ்வையே பெரிதாகக் கருதுகிறார்கள். மனிதனின் இதயப் பகுதியே தெய்வ ஒளி அனுபவத்திற்குரியது என்றும் எண்ணுகிறார்கள். பக்தி பாவனை செய்கிறார்கள். அதன் மூலமாக ஓரளவு பக்தி யோக சக்தி சித்திகளையும் பெறுகிறார்கள். கடைசியில் இறந்துபோகிறார்கள்.

இந்த நெறி சுத்த சன்மார்க்கமாகாது. தயவொடுகூடிய ஒருமை விசாரத்தால் ஆண்டவரின் அருள் ஒளியை உள்ளபடி உணர்ந்து அடைவதுதான் சுத்த சன்மார்க்கம்.

இதன் மூலமாக நிலையான இன்ப வாழ்வு பெறுவதுதான் சுத்த சன்மார்க்கம்.

இதை விளக்கிக்காட்டுவதற்குத்தான் வடலூர்ப் பெருவெளியில் சத்திய ஞானசபையை வள்ளலார் நிறுவினார்.

சிறப்புமிக்க மனித உருவத்தில் அதன் தலைப்பகுதியில் உயிரனுபவ, அருளனுபவ, இறை இன்பானுபவ வாழ்வு சித்

திக்கிறது. இந்த உண்மை முழுவதையும் உணர்த்துவதற் காகவே சத்திய ஞானசபை அமைக்கப்பட்டது.

சத்திய ஞானசபையின் நோக்கம் ஞானசித்தி பெறுவது தான். ஞானசித்தியின் வளர்ச்சியை விளக்குவதற்கு ஞான சபையின் நான்கு திசைகளையும் தனித்தனிப் பெயர்களால் குறிப்பிடுகிறுர் வள்ளல் பெருமான்.

கிழக்குப் பகுதி உத்தரஞான சித்திபுரம். மேற்குப் பகுதி பார்வதிபுரம். தெற்குப் பகுதி பூர்வஞான சிதம்பரம். வடக் குப் பகுதி உத்தரஞான சிதம்பரம்.

## 2. நாற்றிசை அனுபவம்

உத்தரஞான சித்திபுரம் முதலிய நான்கு திருப்பெயர் களால் சிறப்பாகக் குறிக்கப்படுகிறது வடலூர். இங்கே, தாம் பெற்ற இறவா இன்ப வாழ்க்கை அனுபவம் ‘பறிற் ‘ஆனந்த மேலீடு’ என்று பதிகத்தின் முதல் நான்கு பாடல்களில் விளக் கிக் காட்டுகிறுர் வள்ளலார்.

1. ‘‘வாழிஎன் தோழிஎன் வார்த்தைகேள் என்றும்
மரணமில்லாவரம் நான் பெற்றுக் கொண்டேன்
சூழியற் செஞ்சுடர் தோற்றுறு கீழ்பால்
தூய்திசை நோக்கினேன் சீர்திகழ் சித்தி
ஊழிதோ றா ழிநின்(று) ஆடுவன் நீயும்
உன்னுதி யேலிங்கே மன்னருள் ஆணை
ஆழி கரத்தணிந் (து) ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண்(டு) ஆடேடி பந்து ’’.

வள்ளலார் தம் மனத்தைத் தோழியாக பாவனை செய்து கொண்டு அவளுடன் பேசுகிறுர்.

‘‘தோழியே! நீ வாழ்க! என் வார்த்தையைக் கேள். நான் மரணமில்லாமல் வாழும் வரத்தைப் பெற்றுக் கொண் டேன். சூரியன் தோன்றுகிற கிழக்குத் திக்கில் இருக்கும் சித்திபுரத்தைப் பார்த்தே ஆடிக் கொண்டிருக்கிறேன். யுகம் யுகமாக ஆடிக்கொண்டே இருப்பேன். நீயும் விரும்பினுல்

இந்தக் கணையாழியை அணிந்து கொண்டு என்னுடன் ஆடு. இது திருவருள் ஆணை'' என்கிறுர் வள்ளலார். இது உத்தர ஞான சித்திபுர அனுபவநிலை.

2.''இசையாமல் போனவர் எல்லாரும் நாண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
வசையாதும் இல்லாத மேற்றிசை நோக்கி
வந்தேன்என் தோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே என்னுடைய நண்பது வேண்டில்
நன்மார்க்க மாம்சுத்த சன்மார்க்கம் தன்னில்
அசையாமல் நின்றிங்கே ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் (டு) ஆடேடி பந்து ''

'' சுத்த சன்மார்க்கத்தின் மூலமாக மரணமிலாப் பெரு வாழ்வு பெறலாம் என்று நான் சொன்னதை ஏற்றுக் கொள் ளாதவர்கள் எல்லாம் வெட்கித் தலைகுனியும்படியாக நான் இறவாப் பெருவரம் பெற்றுக் கொண்டேன். குற்றமில்லாத மேற்குத் திசையாகிய பார்வதிபுரம் நோக்கி வந்தேன். என் தோழியே! நீ வாழ்க! நீ என் நட்பை வேண்டிஞல் வேறு ஒன்றையும் விரும்பாமல் நன்மார்க்கமாகிய சன்மார்க்கத்தில் நின்று அருட்பெருஞ் ஜோதியைப்பார்த்து ஆடு'' என்கிறுர் வள்ளலார். இது பார்வதிபுர அனுபவ நிலை.

3.''இன்பாலே உலகத்தார் எல்லாருங் காண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக்கொண்டேன்
தென்பாலே நோக்கினேன் சித்தாடு கின்ற
திருநாள் இதுதொட்டு சேர்ந்தது தோழி
துன்பாலே அசைந்தது நீக்கியென் ஞேடே
சுத்தசன் மார்க்கத்தில் ஒத்தவள் ஆகி
அன்பாலே அறிவாலே ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதிகண் (டு) ஆடேடி பந்து ''

'' உலகத்தில் உள்ளவர்கள் எல்லோரும் பார்த்து மகிழும் படி இறவாப் பெருவரம் பெற்றுக் கொண்டேன். தெற்குத் திசையான பூர்வஞான சிதம்பரத்தைப் பார்த்தேன். அங்கு

உயிர்களுக்கு அருள் சித்திகளைக் கொடுத்துக் கொண்டே இறைவன் ஆடிக் கொண்டிருக்கிறான். இறைவன் உயிர்களுக்கு அருள் சித்தியைத் தருகின்ற திருநாள் இப்போது ஆரம்ப மாகி விட்டது. தோழி! இதுவரை நீ துன்பத்தைப் போக்கிக் கொள்ள எந்தத் திசைக்குப் போவது என்று தெரியாமல் அலைந்தாய். அதனால் உன் துன்பம் தொலைய வில்லை. நீ என்னுடன் சேர்ந்து சுத்த சன்மார்க்கத்துக்கு வந்து விடு. உன் துன்பம் தொலையும். அன்பையும், அறிவையும் பெற்று அருட்பெருஞ் ஜோதியைப் பார்த்து ஆடு '' என்கிறார் வள்ளலார். இது பூர்வஞான சிதம்பர சித்தி நிலை ஆகும்.

4.''சதுமறை ஆகம சாத்திரம் எல்லாம்
சந்தைப் படிப்புநம் சொந்தப் படிப்போ
விதுநெறி சுத்தசன் மார்க்கத்தில் சாகா
வித்தையைக் கற்றனன் உத்தரம் எனுமோர்
பொதுவளர் திசைநோக்கி வந்தனன் என்றும்
பொன்றுமை வேண்டிடில் என்தோழி நீதான்
அதுஇது என்னுமல் ஆடேடி பந்து
அருட்பெருஞ் சோதி கண்(டு) ஆடேடி பந்து ''

'' வேத ஆகம சாத்திரம் எல்லாம் படிப்பது வெறும் சந்தைப் படிப்பு. மனத்துக்கு உகந்த நெறியான சுத்த சன்மார்க்கத்தைப் படிப்பதுதான் சொந்தப் படிப்பு. இந்தப் படிப்பினால் சாகா வித்தையைக் கற்றுக் கொண்டேன். உத்தர ஞான சிதம்பரம் இருக்கும் வடக்கு திசையைப் பார்த்தேன். அங்கு அருட்பெருஞ் ஜோதி ஆடிக் கொண்டிருப்பது தெரிந்தது. நீயும் சாகா நிலையை வேண்டினால் அது இது என்று சொல்லாமல் சுத்த சன்மார்க்கத்தில் ஈடுபட்டு அருட்பெருஞ் ஜோதியைப் பார்த்து ஆடுவாய் '' என்கிறார் வள்ளலார். இது உத்தரஞான சிதம்பர அனுபவ நிலை.

உத்தரஞான சிதம்பரம் எனும் வடலூரில் சத்திய ஞான சபையில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி, எல்லா ஆற்றலோடும் இருந்து, உலக மக்களைத் தம்மிடம் ''வருக! வருக! என்று அழைத்துக் கொண்டிருக்கிறது.

ஞானசபைக்கு முன்னால் இருந்து அருட்பெருஞ் ஜோதி மந்திரம், கோடி கோடியாக ஒலி பரப்பப்பட்டது. அது இப்போதும் வானவெளி எங்கும் நிரம்பி இருக்கிறது.

இதைவிட ஆயிரம் பங்கு அதிகமாக அகஞான சபையிலிருந்து அருட் பெருஞ் ஜோதி விரிந்து மக்களின் உணர்விலும், உயிரிலும், உடலிலும் செயல்படுகிறது. மக்கள் வாழ்வில் நித்தியமான இன்பம் தழைக்கச் செய்கிறது. இந்த ஆனந்தச் செயல் இப்பொழுது அங்கு தோன்றி இருக்கிறது. இனிமேல் இக்காட்சியையும் அனுபவத்தையும் பெற, வடலூரை நோக்கி மக்கள் வெள்ளம் வந்து கொண்டேயிருக்கும்.

ஞானசபையில் தோன்றி இருக்கும் அகண்ட தீப ஜோதியின் அருட்பிரகாசச் சுடர் வடலூருக்கு வருபவர்க்கெல்லாம் இன்பந் தர இருக்கிறது. இதற்கு நாமும் நம்மால் முடிந்ததை எல்லாம் செய்து கொண்டிருப்போம்.

### 3. ஞானசபையின் அமைப்பு :

அகரம், உகரம், மகரம் கலந்த 'ஓம்' என்ற ஓங்கார பிரணவ நாதம், ஜோதி மயமாய் வான வெளி எங்கும் நிறைந்து ஜொலித்துக் கொண்டிருக்கிறது.

இதனால் அணு முதல் அண்ட கோடி வரை இருக்கும் பொருள்கள் எல்லாம் 'ஓம்' என்ற மந்திர எழுத்தின் உருவாகி இருக்கின்றன. அவை வளர்ந்தும், இருந்தும், மறைந்தும், திரும்பவும் புதிய உருவத்தைப் பெற்று வருகின்றன. இதுதான் இறை உண்மை. இந்த இறை உண்மை அனுபவம் உண்டாவதற்காகவே, மனித உருவம் ஓங்கார தத்துவம் முழுமையும் பெற்றுத் தோன்றி இருக்கிறது.

மனிதக் கருப்பிண்டம் தொடக்கத்தில் சிறிய ஒளியாய் தோன்றுகிறது. பின்னால் அது உயிர் உடம்பின் வளர்ச்சியைப் பெற்று உலகில் பிறக்கிறது.

'அ' என்ற எழுத்து எட்டு என்ற தமிழ் எண்ணைக் குறிக்கும். இந்த அகரம் எண்சாண் உடலாய்ப் புறத்தே

உருவம் பெறுகிறது. 'உ' என்ற எழுத்து இரண்டு என்ற எண்ணைக் குறிக்கும். இந்த உகரம் இருவகை மூச்சாகி நித்திய மூச்சாகவும், அநித்திய மூச்சாகவும் செயல்படுகிறது. எண்சாண் உடம்பில் நித்திய மூச்சு அருவமாயும், அநித்திய மூச்சு உருவமாயும் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இதற்குமேல், 'ம்' என்ற மகர மெய்யே உயிருக்கு ஆதார மாகிறது. உண்மை ஞான அனுபவத்துக்குக் காரணமாகிறது; காண்பதற்கு அரிய அருவமாய் இருந்து ஆட்சியும் செய்து கொண்டிருக்கிறது.

இந்த ஓங்கார உண்மையைக் காண்பிப்பதற்காகவே தெய்வ ஆலயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஓங்காரத்துள் கடவுள் அருள் சக்தி இருந்து ஆட்சி செய்வதால், தெய்வ ஆலயங்களில் மகர ஜோதியை மூல விக்கிரகமாக வைத்து வழிபடுவது மரபு.

சத்திய ஞானசபையோ நம் தலையின் உட்பகுதியில் இருக்கும் மெய்யறிவுத் தலத்தை விளக்குவதற்காக எழுப்பப் பட்டது. அதனால் இதன் கட்டிட அமைப்பு ஞான அனுபவத் தத்துவப்படி அமைக்கப்பட்டிருக்கிறது.

ஞானசபையின் கட்டிட உருவ அமைப்பு எண்கோண வடிவமானது. இதைச் சுற்றி எண்கோண அமைப்பில் வேலி போல் சிறு சிறு தூண்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தூண்களில் நாம் விடும் சுவாச நிலையை உணர்த்து வதற்காக ஒரு நீளமான இரும்புச் சங்கிலியை இரட்டையாக மடித்து அந்தச் சிறு தூண்களின் தலையில் இருக்கும் துளைகளில் கோத்துத் தொங்கலாக விடப்பட்டிருக்கிறது.

அந்த இரும்புச் சங்கிலியில் 21,600 கண்கள் இருக் கின்றன. இவை மனிதனின் ஒருநாள் மூச்சின் 21,600 சுவாசங் களின் எண்ணிக்கையைக் குறிக்கும்.

இந்தச் சுற்றுச் சங்கிலிச் சுவர் எல்லைக்குள் தென்முக ஆசார வாயிலும், அதன் தென் கிழக்கில் கொடி மரமும், எழுவார் மேடையும் விளங்க சத்திய ஞானசபை காட்சி

அளிக்கிறது. சத்திய ஞானசபையின் அகச்சூழல் முதலில் எண்கோண இரும்பு வேற்கம்பி மதிலுடன் ஆரம்பமாகிறது. இதை அடுத்து எண்கோணப் பிரகாரம். இந்தப் பிரகாரத் துக்கு அப்பால் எண்கோணச் சுவரும், அதில் எட்டு வாயில் களும், பதினாறு சாளரங்களும் இருக்கின்றன.

சத்திய ஞானசபையின் உட்சதுரப் பீடத்தில் எட்டு யானைகள் சுமந்த நான்கு வாயில்கள் இருக்கின்றன. ஒவ் வொரு வாயிலிலும் ஐந்து ஐந்து படிகள் இருக்கின்றன.

இந்தச் சதுரப் பீடத்தின் மேலே தான் அருட்பெருஞ் ஜோதி தீபம் ஏழு வண்ணத் திரைகளால் மறைக்கப்பட்டிருக் கிறது. இத்திரைகள் ஜோதி தரிசன காலத்தில் மட்டும் ஒவ்வொன்றாக நீக்கப்படுகின்றன.

சன்மார்க்க நிலை பயில்வோரின் அக அனுபவத்தைத் தான் சத்திய ஞானசபையின் இந்தப் புற அமைப்புகள் காட்டிக் கொண்டிருக்கின்றன.

**4. சத்திய ஞானசபையின் தத்துவம்:**

ஜீவ தயவு உடையவர்கள் ஞானசபையின் தென்வாயில் வழியாக உள்ளே போவார்கள். அப்படிப் போகும்போது, சபையின் தென்கிழக்கு அக்கினி மூலையில் இருக்கும் கொடி மரத்தையும், எழுவார் மேடையையும் காண்பார்கள்.

இவை சத்விசாரத்தால் அறியப்படுகிற அகப்புற கடவுள் விளக்கத்தையும், பூர்வ உத்தர சிதம்பர ஆலய விளக்கத்தை யும் காட்டுபவை.

அடுத்து இருக்கும் எண்கோண நிலைகள் நான்கு பிரிவு களுடன் இந்திரிய, கரண, ஜீவ, ஆன்ம ஒழுக்க நிலைகளைக் குறிப்பவை. எட்டு யானைகள் சுமக்கிற ஜோதி பீடம் ஆன்ம ஆகாச உண்மையைக் காட்டுவது.

சன்மார்க்கப் பயிற்சியால் பக்குவம் பெறாத காலத்தில் கடவுளின் உண்மை, அருவ ஆன்மச் சிற்றுருவாய் மனிதனின் மெய்யறிவு பீடத்தில் மறைவாக இருக்கும். அதுபோல

ஞான சபையிலும் பகர ஜோதி பீடத்தின் அடியில் இருக்கும் நிலவறையில் அருவமாக ஆன்ம உண்மை இருக்கிறது.

சன்மார்க்கப் பயிற்சி பெற்ற பக்குவிகள்தான் சத்விசார ஞானத்தால் வெளியிலும் திரையற்ற அருட்பெரும் ஜோதிக் காட்சியைக் காண்பார்கள். அவர்கள் தியான எழுச்சியால் மேல் நிலையைக் காண்பார்கள். மேல் நிலை அனுபவமும் பெறுவார்கள். அருள் ஒளித் தீபமாயும் விளங்குவார்கள்.

### 5. ஏழு வண்ணத் திரைகள்

எங்கும் என்றும் இருக்கும் ஆண்டவரை நாம் எங்கே காண முடிகிறது? எப்போது காண முடிகிறது?

ஆண்டவர் எங்கும் இருப்பது உண்மையானால் அவரை எல்லா இடத்திலும் காணலாமே.

அப்படி ஆண்டவரை நம்மால் காண முடியவில்லையே அதற்குக் காரணம் என்ன? ''கடவுளுக்கும் நமக்கும் இடையில் ஏதாவது ஒரு மறைப்பு இருக்குமோ!'' என்று எண்ணத் தோன்றுகிறது அல்லவா?

கடவுளுக்கும் நமக்கும் இடையில் மறைப்பு இருக்க முடியுமா? எந்த மறைப்பும் இருக்க முடியாது.

ஏன்? அவர்தான் எங்கும் நிறைந்து இருப்பவர் ஆயிற்றே! அதனால் அந்த மறைப்பிலும் அவர் இருப்பார் அல்லவா?

அகத்திலும், புறத்திலும், அவற்றுக்கு இடையான இடத்திலும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம்பொருளை; அருட்பெரும் ஜோதியை எப்படி மறைக்க முடியும்? எதனால் மறைக்க முடியும்? யாரால் மறைக்க முடியும்?

அவ்வாறு எதனாலும் யாராலும் மறைக்க முடியாத கடவுள் ஏன் நமக்குத் தெரிவதில்லை?

கண்களை மூடிக்கொண்டு ஒளி நிரம்பிய வீட்டில் இருக்கிறான் ஒருவன். அவனைப் பார்த்து ''இந்த வீட்டில் ஒளி இருக்கிறதா?'' என்று கேட்டால் ''இந்த வீட்டில் ஒளியே இல்லை'' என்றுதான் சொல்லுவான். கண்ணை மூடிக்

கொண்டிருக்கும் அவன் ''ஒளி இல்லை'' என்று சொல்வதை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்?

அவன் மூடியிருந்த தன் கண்களைத் திறந்து பார்த்தால், அந்த வீட்டில் ஒளி சுடர்விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருப்பதை அவனே உணர்வான்.

அதுபோலத்தான் ஒருவனின் அறியாமை என்னும் மூடம், அவனது ஞானக் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறது. ஞானக்கண் மூடிக்கொண்டிருக்கும் வரை, கடவுட் ஜோதியை அவனால் பார்க்க முடியாது.

அவனுடைய ஞானக்கண் திறக்கப்பெற்றபோதுதான் கடவுள் எங்கும் நிறைந்த ஜோதி மயமாய் இருப்பதை அவனால் காண முடியும்.

எனவே மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையில் அறியாமை என்னும் மாய உணர்வைத் தவிர, வேறு எதுவும் திரையாக இருந்து கடவுளை மறைத்துக்கொண்டிருக்கவில்லை, இதனாலேயே இந்தத் திரை உண்மையானது அல்ல. மாயைத் திரை என்று சொல்லுகிறோம்.

உலகை இருள் சூழ்வதும், சூரியன் தோன்றியவுடன் அதன் ஒளிபட்டு இருள் விலகுவதும், தினமும் நாம் காணும் காட்சி அந்தக் காரிருள் போன்றது கரும்பெரும் திரை.

விடியற்காலையில் கிழக்கு வெளுக்கத் தொடங்குகிறது; இதுவரை கறுப்பு மயமாகத் தோன்றிய கீழ்வானம் நீலமாகிறது. இதுபோன்றது நீலத்திரை.

நீலம் பசுமை ஆகிறது. இந்தப் பசுமை நிறத்தைப் போன்றது பச்சைத்திரை.

பின்னர் அது செம்மை உறுகிறது. இந்தச் செம்மை நிறத்தைப் போன்றது சிவப்புத்திரை.

செம்மை பொன் வண்ணமாகிறது. இந்தப் பொன் நிறத்தைப் போன்றது மஞ்சள் திரை,

இதுவும் நீங்கியபின் வெள் ஒளியுடன் ஞாயிறு உதயமாகிறது. இந்த வெள் ஒளியின் வெண்ணிறம் போன்றது வெண்மைத் திரை.

ஞாயிற்று ஒளியில் மற்ற எல்லா நிறங்களும் கலந்து கரைந்து உறைகின்றன.

சூரிய ஒளியில் ஏழு நிறங்கள் கலந்து இருக்கின்றன என்பது விஞ்ஞானம் நமக்கு உணர்த்தும் உண்மை. இதுபோல ஆறு நிறங்களைக் கொண்டது கலப்புத் திரை.

உத்தர ஞானமாகிய அருட்பெரு ஞான வானம்தான் சத்திய ஞானசபை.

ஞாயிறு தோன்றும்போது வானவெளியில் ஏழுவகை நிறமாற்றப் புறக்காட்சிகளைக் காண்கிறோம். அது போல், சத்திய ஞான சபையில் ஏழு நிறத்திரைகளைக் காண்கிறோம்.

மனித மனத்தில் அறியாமை இருள் மண்டிக் கிடக்கும் நிலையில் ஒருவன் வெறும் உடல் இச்சையிலேயே மங்கிக் கிடக்கிறான். இது கறுப்புத்திரை அனுபவம்.

அவனுக்கு அருட் பக்குவம் ஏற்படுகிறது. இதுவரை உடல் இச்சையில் மயங்கி இருள் நிலையில் விலங்குபோல இருந்த அவனுடைய அறியாமை என்னும் கறுப்புத்திரை நீங்குகிறது. கறுப்புத் திரை விலகியதால் அவனிடம் ஓரளவு ஒழுக்கமும், அடக்கமும், அறிவும் பண்பாடும் ஏற்படுகின்றன. இது நீலத்திரை அனுபவம்.

இப்போது அவனால் நல்லது கெட்டதைப் பகுத்தறிந்து கொள்ள முடிகிறது. அவன் நல்லதை ஏற்கும் பக்குவ நிலைக்கு வருகிறான். இது பச்சைத்திரை அனுபவம்.

நல்ல காரியங்களில் எல்லாம் அவனுக்குத் தீவிர பற்று ஏற்படுகிறது. மிகுந்த உற்சாகத்துடன் அதில் ஈடுபட்டுச் செயல்படுகிறான். இது சிவப்புத் திரை அனுபவம்.

இப்போது அவனுக்கு மெய்ஞ்ஞானக் காட்சி தோன்றுகிறது. எங்கும் நிறைந்திருக்கும் பொன் ஜோதி நிலை அனுபவத்தைப் பெறுகிறான். இது மஞ்சள் திரை அனுபவம்,

பொன் ஒளி நிலை அனுபவ முதிர்ச்சி அவனுக்கு ஆதி வெள்ளொளியைக் காட்டுகிறது. அது இயல்பாகவே அவனுக்குள் விளங்குகிறது, இதுதான் ஜோதி உதயம் ஆகிற இடம் என்பதையும் உணர்கிறான். இந்த அருட்பெரும்ஜோதி தான் நம் ஒவ்வொருவரிடமும் ஆன்மச் சிற்றுருவாய் இருக்கிறது. இது சிற்சக்தியுடன் இப்போது அவனிடம் ஓங்கித் தோன்றுகிறது. இது எல்லா சக்திகளையும் அவனுக்குத் தருகிறது. இது வெண்மைத் திரை அனுபவம்.

இந்த சிற்சக்தியைப் பெற்ற ஒரு சுத்த சன்மார்க்கிக்கு ஞானத்தில் யோக அனுபவம் ஏற்படும். இந்த அனுபவம் அவரை தயவும், ஒருமையும் உடையவராக மாற்றிவிடும். இந்த நிலையில் அவர் சுத்த சத்விசாரத்தில் ஈடுபடுகிறார். அதன் காரணமாக அவர் மனம் புருவ நடுவில் நின்று ஒன்றுகிறது. இதுவே அவர் அக அனுபவத்தைப் பெறும் தொடக்க நிலையாகும். இந்தச் சமயத்தில் அவரிடம் அருட்பெரும் ஜோதி பூரணமாகத் தோன்ற ஆரம்பிக்கிறது.

'அருட்பெருஞ் ஜோதி' என்ற வார்த்தையில் உள்ள எழுத்துக்களை, எழுத்துக்களாக எண்ணும்போது 'ட்'. 'ஞ்' என்ற இரண்டு மெய் எழுத்துக்களைச் சேர்த்து எண்ணுவது இலக்கண மரபல்ல. இந்த இரண்டு மெய் எழுத்துக்களையும் நீக்கிவிட்டால் அருட்பெருஞ் ஜோதியில் அ—ரு(ட்)—பெ—ரு(ம்) ஜோ—தி என்ற ஆறு எழுத்துக்கள் மட்டுமே இருக்கும். இந்த ஆறு எழுத்துக்களும் மேலே சொன்ன ஆறு ஆதார மறைப்புச் சக்தியின் ஆறு நிறங்களை உடைய கலப்புத் திரையைத் தோற்றுவிக்கிறது.

இந்த ஆதார மறைப்புச் சக்தியும் தோன்றிய வேகத்தில் அவரிடமிருந்து மறைந்து விடுகிறது.

இந்தக் கலப்புத் திரை விலகியதும் அவருக்கு அருள் ஞான அனுபவம் படிப்படியாக ஏற்படுகிறது. அருட்பெருஞ் ஜோதியைப் பார்க்க முடியாமல் இதுவரை அவர் ஞானக் கண்ணை மறைத்திருந்த அறியாமையும், மூட மௌடீகங்களும்

அவரைவிட்டு விலகி மறைந்து விடுகின்றன. அவரது ஞானக் கண் திறந்துவிடுகிறது.

தம் தனிப்பெருங் கருணையை வாரி வழங்கிக்கொண்டிருக்கும் அருட்பெருஞ் ஜோதியை அவர் பார்க்கிறார். அருட்பெருஞ் ஜோதியும் தம் தனிப் பெருங் கருணையால் அவரை நெருங்கி வந்து அணைத்துக்கொள்கிறது. இந்த நிலையில் அவரும், அவர் பார்த்த அருட்பெருஞ் ஜோதியும், அதன் காட்சியும் ஒன்றினுள் ஒன்றாக ஒன்றிவிடுகின்றன.

அருட்பெருஞ் ஜோதியே அவராக, அவரே அருட்பெருஞ் ஜோதியாக ஆகி விட நேர்கிறது. இப்போது அவர் உருவத்திலேயே அருட்பெருஞ் ஜோதி தம் ஆற்றலை வெளிப்படுத்துகிறது. அவர் சுத்த அத்துவித ஆனந்த அனுபவ நிலையில் இருந்து செயல்பட ஆரம்பித்துவிடுகிறார்.

சுத்த சன்மார்க்க சாதகத்தை மேற்கொள்ளும் மாணவர்கள் உரிய பூஜா காலங்களில் வழிபட சத்திய ஞான சபையில் வழி செய்யப்பட்டிருக்கிறது. இதனால் ஆறுகால வழிபாட்டுப் பழக்கமும், அகப்பண்பாடும், பக்குவப் பயிற்சி அவர்களுக்கு ஏற்படும்.

பொது மக்களுக்காக மாத பூச நாட்களிலும், மகா தைப் பூசதினத்திலும், சிறப்புக் காட்சி தரிசன வழிபாட்டிற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மகா தைப்பூசத்தன்று அருட் பெருஞ் ஜோதிக் காட்சியை எல்லாரும் தவறாமல் காண வேண்டும். தைப்பூசத் தினத்தில் அருட்பெருஞ்ஜோதி தரிசனம் செய்வதால் அகமும் புறமும் புனிதம் அடையும் என்பது மக்களுக்கு வள்ளலார் இட்ட கட்டளை.

தைப்பூச நாள் மட்டும் ஏன் அவ்வளவு முக்கியமானது? அந்த நாளில் கடைசி ஆறாவது தரிசன காலத்தில், அதாவது விடியற் காலையில், சூரியன் உதயமாகும் போது சத்திய ஞானசபையில் அருட்பெருஞ்ஜோதி தரிசனம் நடைபெறும். அப்போது ஞானசபைக்கு வெளியில் வானத்தின் மேற்பகுதியில் முழுமதியும் கிழக்குப் பகுதியில் உதயசூரியனும் சத்திய

ஞானசபையின் நடுவில் அருட் பெருஞ் ஜோதியும் ஒரே நேர் கோட்டில் தெரியும். அன்றைய தினம் அருட்பெருஞ் ஜோதி யுடன் சூரிய உதயத்தையும் முழு நிலவையும் சேர்த்து ஒரே சமயத்தில் தரிசித்து மகிழலாம்.

ஒரு சுத்த சன்மார்க்கி பெரும் பேருகிய அக அனுப வத்தை விளக்கிக் காட்டுகிறது இந்த முத்தேக சித்திக் காட்சி. சுத்த சன்மார்க்கி தம் சிரநடுவில் இருக்கும் சத்திய ஞானசபையின் உள்ளே அருட்பெருஞ் ஜோதியை தம் அனு பவத்தில் பார்க்கிருர்.

இதன் அடையாளமாக வடலூர் சத்திய ஞானசபையில் தோன்றும் அருட்பெருஞ் ஜோதி அவர் பெற்ற பிரணவ தேகத்தைக் குறிக்கிறது.

வானத்தின் மேல் பகுதியில் காணும் முழு நிலவு அவர் அடைந்த ஞான தேகத்தைக் காட்டுகிறது,

கீழ்ப்பகுதியில் தெரியும் உதய ஞாயிறு அவர் எய்திய சுத்த தேகத்தைச் சுட்டுகிறது.

ஒரு சன்மார்க்கி பெற வேண்டிய முத்தேக சித்திகளே வடலூர் தைப்பூசத்தன்று விடியற்காலே ஜோதி தரிசனத்தில் நாம் ஒருங்கே பார்க்கும் சூரியனும் அருட்பெருஞ் ஜோதி யும் முழு நிலவும் காட்டுகின்றன.

### 6. ஞானசபையின் பயன் :

" அருட் பெருஞ் ஜோதியைக் கண்டேனே ஆனந்தத் தெள்ளமுது உண்டேனே !" என்று தாம் பெற்ற ஆன்மிக அனுபவத்தை வெளியிட்டார் வள்ளலார்.

இந்த உயர்ந்த அனுபவத்தை எல்லாரும் அடைந்து ஆனந்திக்க வேண்டும் என்ற பெரும் கருணையால் சங்கம், சாலே, சபை என்ற மூன்று நிறுவனங்களையும் வள்ளல் பெரு மான் வடலூரில் ஏற்படுத்தினுர்.

அந்த நாள் மக்களிடம் இந்த உன்னத அனுபவத்தைப் பெறுவதற்கான ஆர்வம் ஏற்படவில்லை; அதனால் அவர்கள் அதைப் பயிலுவதற்கு வள்ளல் பெருமானைத் தேடி வரவில்லை. என்றாலும் எல்லாரும் வள்ளலாரிடம் பயபக்தியுடன் வந்து அவரைப் போற்றி வணங்கினார்கள். தங்களுடைய சாதாரண வாழ்க்கைப் பிரச்சினைகளை அவரிடம் சொல்லி தீர்த்துக் கொண்டார்கள். அவரிடம் இருந்த அற்புத சித்துக்களைப் பார்த்து மகிழ்ந்தார்கள். இதற்காகவே வள்ளல் பெருமானைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள்.

சுத்த சன்மார்க்க உண்மையை அறியவும், இறவாப் பேரின்ப நிலையைப் பெற்று உய்யவும் யாரும் வள்ளலாரை விரும்பி நெருங்கவில்லை.

இதனால் வள்ளலார் ஆரம்பித்த சங்கம் வளர வில்லை. தாம் ஆரம்பித்த சங்கம் ''சமரச சுத்த சன்மாாக்க சத்திய சங்கமாக''ப் பெருகிப் பரவ வேண்டும் என்பது வள்ளல் பெருமானின் திருவுள்ளம். இதன்படி சன்மார்க்க சங்கம் எங்கே பரவி இருக்கிறது?

அந்தச் சங்கத்துக்குக் கொடுக்கப்பட்டுள்ள அடைமொழிகளின் சரியான பொருள்களைக்கூட மக்கள் புரிந்து கொள்ள வில்லை. நாட்டில் நூற்றுக்கணக்கான சங்கங்கள் ''சன்மார்க்க சங்கம்'' என்ற பெயரில் தோன்றியிருக்கின்றன. அவை சன்மார்க்கத்துக்குச் சம்பந்தமில்லாமல் எப்படியோ நடந்து கொண்டும் இருக்கின்றன.

ஒரே தலைமைச் சங்கத்தின் கீழ், ஒரே வகையான சட்ட திட்டப்படி எல்லாச் சங்கங்களும் ஒன்றுபட்டுச் செயல்பட வேண்டும். அருள் ஆட்சிப் பீடங்களாக சன்மார்க்கச் சங்கங்கள் அமைந்து விளங்க வேண்டும்.

தருமச் சாலையின் நிலை எப்படி இருக்கிறது? அது வெறும் உணவுச் சாலையாக இருந்து வருகிறது. அப்படி இல்லாமல் சாகாக் கல்வியைப் புகட்டும் கல்விச் சாலையாக, அதன் நுணுக்கங்களை எல்லாம் ஆராயும் சர்வகலாசாலையாக அது வளர்ந்து

இருக்க வேண்டும். சாகாக் கலையை உலகமெங்கும் பரப்பு வதற்கு வேண்டிய வசதிகளோடும்,பலவகைப் பிரிவுகளோடும் அது செயல்பட்டு வந்திருக்க வேண்டும்.

இந்தச் சாலையும் சங்கமும் சரியான முறையில் சிறப்பாக நடைபெறும் போதுதான் சத்திய ஞானசபையும் அதன் முழு ஆற்றலுடன் அருட்பெரும்ஜோதியை உலகமெங்கும் பரப்பிக் கொண்டு இருக்கும்.

ஓங்கி வளர்வதற்குரிய எல்லா உட்கூறுகளையும் தன்னுள் கொண்டு முளைக்கத் தொடங்குவது விதை. அதைப்போல அன்று வள்ளலார் எளிய முறையில் ஞான சபையை அமைத்து முளைக்கச் செய்திருந்தார்.

அதன் வருங்கால வளர்ச்சி எப்படி இருக்க வேண்டும் என்பது பற்றியும் சொல்லி வைத்திருந்தார்.

'' ஐயனருள் வருகின்ற தருணமிது கண்டீர்
ஐயமிலை ஐயமிலை ஐயனடி ஆணை
மெய்யன்எனை ஆட்கொண்ட வித்தகன்சிற் சபையில்
விளங்குகின்ற சித்தனெல்லாம் வல்லஒரு விமலன்
துய்யன்அருட்பெருஞ்சோதி துரியநட நாதன்
சுகஅமுதன் என்னுடைய துரைஅமர்ந்திங்(கு)இருக்க
வையமிசை திருக்கோயில் அலங்கரிமின் விரைந்தே
மணியாலும் பொன்னுலும் மலராலும் வியந்தே ''

'' அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் வருகின்ற நேரம். அவர் வரப்போகிருர். அவர் வந்து அமர்ந்து அருள் புரிவ தற்கு ஞானசபைத் திருக்கோயிலை நிர்மாணியுங்கள். அந்தத் திருக்கோயிலைப் பொன்னுலும், மணியாலும், மலராலும் எல்லாருக்கும் வியப்பளிக்கும்படி அலங்கரியுங்கள் '' என்று மக்களுக்குக் கட்டளை இட்டார் வள்ளலார்.

வள்ளல் பெருமானின் கட்டளையைப் பெற்ற அந்த நாள் சன்மார்க்க அன்பர்கள் ஏதோ தங்களால் முடிந்த அளவு மண் ணுலும், மரத்தாலும், தாமிர மேற்கூரையாலும் ஞானசபை யைக் கட்டி அதன் உச்சியில் கலசத்தையும் அமைத்தார்கள். ஞானசபையின் உள்ளே தகர விளக்கு தீபத்தையும், அதற்கு

முன்னால் பெரிய கண்ணாடியையும் வைத்தார்கள். அந்தக் கண்ணாடிக்கு முன்னால் தனித்தனி ஏழு திரைகளால் அதை மூடி வைத்தார்கள். வழிபாட்டுக் காலத்தில் அத்திரைகளை நீக்கி வழிபடச் செய்திருந்தார்கள்.

அந்த ஞானசபை சில காலத்திற்குப் பின் பழுதுபட்டு வழிபாடு இயற்ற முடியாத நிலையில் கிடந்தது. மக்களிடையே உள்விழிப்பு இல்லை; உண்மைத் தெளிவும் இல்லை; ஆர்வமும் மங்கியிருந்தது. அதனால் சத்திய ஞான ஆலயத்தின் தனிச் சிறப்பு அறிந்து கொள்ளப்படாமல் இருந்தது. ஞான சபையில் அருட்பெருஞ்ஜோதி தோன்றி இருந்தும், அது வெளியே பரவாமல் இருந்தது.

இப்போது, திருவருளே சன்மார்க்க அன்பர்களின் உள்ளத்தில் ஒளியைத் தூண்டிவிட்டுத் தீவிர முயற்சியோடு சத்திய ஞானசபைத் திருப்பணியை நிறைவேற்றி இருக்கிறது. உறுதியான முறையில் மிகச் சிறப்பாக ஞான சபையைப் புதுப்பிக்கச் செய்திருப்பதும் அவர் திருச் செயலே.

முன்பு மண்ணாலும், மரத்தாலும் சத்திய ஞானசபையை அமைத்திருந்தனர். அந்த ஞானசபைதான் பழுதுபட்டு விட்டது. அதை இப்போது மார்பிள் கற்களாலும், சிமண்டாலும், காங்கிரிட் உத்தரங்களாலும், தூண்களாலும் நவீன கட்டிடக் கலை முறையில் மிக உறுதியாக இருக்கும்படி அமைத்திருக்கிறார்கள். சத்திய ஞானசபைக்கு வள்ளலார் விரும்பியபடியே தாமிரத்தகட்டால் விமானமும், அதன் உச்சியில் தங்க முலாம் பூசிய கலசமும் வைத்திருக்கிறார்கள்.

நீண்ட நெடுங்காலத்துக்கு இந்த சத்திய ஞானசபை நிலைத்து விளங்கும் ஆற்றல் பெற்றிருக்கிறது. வருங்காலத்தில் சத்திய ஞானசபையைப் பொன்னாலும், மணியாலும் அலங்கரிக்கப் போகிறார்கள்.

இப்போது சத்திய ஞானசபைக்கு அகத்திலும், புறத்திலும், இயற்கையிலும், செயற்கையிலும், விண்ணிலும், மண்ணிலும் அருளாளன் உதவி கிடைத்திருக்கிறது.

அதனுல்தான் சத்திய ஞான சபையின் திருப்பணி நல்ல முறையில் சுத்த சன்மார்க்க வழியில் மிகச் சிறப்புடன் நிறைவேறியது. மக்களால் அருட் பெருஞ் ஜோதி மகாமந்திரம் கோடி முறை ஓதி ஓதி உணரப்பட்டது. இந்த அருட்பெருஞ் ஜோதி மகாமந்திரம் கோடி முறை ஓதப்பட்டவுடன், ஞான சபைத் திருப்பணி நிறைவு விழா திருவருளால் நல்ல நேரத்தில் பொருத்தமான முறையில் நடைபெற்று இருக்கிறது.

**7. ஞானசபையின் ஒளி ;**

திருவருளால் சத்திய ஞானசபை, தன் அகத்தில் வளர்கின்ற அருட்பெருஞ் ஜோதியை உலகம் முழுவதும் பரப்பத் தொடங்கி இருக்கிறது.

பிங்கள ஆண்டு, வைகாசித் திங்கள் முப்பதாம் நாள். ஏகாதசியுடன் கூடிய ஞாயிற்றுக் கிழமை. தன் அருள்ஒளி முழுவதையும் வீசிக் கொண்டு ஜோதி எழுகின்ற காலை வேளை. அப்போது ''அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ் ஜோதி! தனிப் பெருங்கருணை! அருட்பெரும் ஜோதி!'' என்ற மந்திரத்தை மக்கள் கோடி முறை உச்சரித்து ஓத ஆரம்பித்தார்கள். கோடி முறை ஓதி வழிபடும் அருட்பெருஞ் ஜோதி மகாமந்திர வழிபாடு சத்திய ஞானசபையின் முன்னுல் ஏழு தினங்கள் தொடர்ந்து நடந்து நிறைவு பெற்றது.

ஆனித்திங்கள், ஐந்தாம் நாள். அதாவது 19-6-1977 ஞாயிற்றுக் கிழமை. கிழக்கில் சூரியன் உதயமான வேளை. ஞான சபையின் உச்சியில் இருக்கும் கனக கலசத்துக்குத் திருமஞ்சனம் நடந்தது. அதற்குக் கற்பூர ஜோதி காட்டப்பட்டது. 'அருட் பெருஞ் ஜோதி' மகாமந்திரம் அங்கிருந்து எழுந்து ஒலிக்கத் தொடங்கியது.

அந்தக் கணம் முதல், அப்பொற்கலசத் தூபியே புகையாமல் அணையாமல் விளங்கும் கற்பூரச் சுடர்போல் சத்திய ஞானசபையின் உச்சியில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. இது நம் அகத்தில் எழும் ஜோதி அனுபவத்துக்கும் பொருத்தமாகத் திருவருளால் காட்டப்பட்டு இருக்கிறது.

அந்த நன்னாள், கடகநடுப்பூசப் பொன்னாள் ஆகவும் பொருந்தி இருந்தது. பூசம் எதைக் குறிக்கிறது? நமது சிர நடுவில் இருக்கும் கடகத்தைக் குறிக்கிறது. இதையே காற்குளம் என்றும், பூசம் என்றும் சொல்வார்கள்.

அதில் நிலைத்து நின்று ஒளி வீசுவது அருட்பெருஞ் ஜோதி. நம் தலையின் நடுவில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதியைப் பார்த்து அனுபவிக்க ஞானயோகப் பயிற்சியை மேற்கொள்ள வேண்டும். அருட்பெருஞ்ஜோதியுடன் ஒன்றி அதை உலக மெங்கும் பரவச் செய்ய வேண்டும். இது நமது கடமையாகும்.

ஒவ்வொருவரும் தம் உள்ளே இருக்கும் அருட் பெருஞ் ஜோதியை உணர்ந்து அதைத் தங்கள் உயிரிலும், உணர்விலும் உடலிலும், பரவச் செய்ய வேண்டும். நமக்கு வெளியிலும் அதைப் பரவவிட வேண்டும்.

ஒவ்வொருவரும் அவர் அவர்கள் அகத்தில் இருக்கும் ஞானசபையை உணர்ந்துகொள்வதன் மூலமாகத்தான் கட வுள் உண்மை விளக்கமும், உண்மைக் கடவுளின் வழிபாடும் எங்கும் பரவ ஆரம்பிக்கும்.

அப்போது அருள் ஒளி விளக்கு, ஒவ்வொருவரின் உள்ளத் திலும் சுடர் விடும். ஒளி வளர் ஞானசபையை அவர்கள் வசிக்கும் இல்லங்களிலும், தெய்வங்கள் வசிக்கும் திருக்கோயில் களிலும் காண்பார்கள். வெளியில் இருக்கும் பேதக் காட்சி களையும், அதன் தன்மைகளையும், செயல்களையும் மறப்பார்கள். இதனால் எல்லா மக்களும் ஒத்து வாழ்ந்து இன்புறுவார்கள்.

இதற்காக வடலூர் சத்திய ஞானசபையில் நித்திய வழி பாடு நடைபெறுவதற்கு ஏற்பாடு செய்தல் வேண்டும்.

வடலூருக்கு வருகிறவர்கள் எல்லோரும் சத்திய ஞான சபையின் உண்மை என்ன என்பதை ஒருவாறு அறிந்து கொள்ளும்படி சத்திய ஞானசபைக்கு வெளியில் அதைப் பற்றிய விளக்கத்தை எழுதி வைக்க வேண்டும். இதுபோல தியான வழிபாட்டிற்கான ஒழுக்க விதிமுறைகளையும் அங்கு எழுதி வைத்தல் மிகவும் அவசியம்.

தினமும் குறிப்பிட்ட காலங்களில் உண்மை விளக்கத்துடன் அமைதியான முறையில் திரைகளை நீக்கி மக்களுக்கு அருட்பெரும் ஜோதியைக் காட்ட வேண்டும். அந்த நாளில் மக்கள் சத்திய ஞானசபையைப் பற்றிய உண்மையைத் தெரிந்து கொள்ளவும், தினம்தினம் வடலூருக்கு வந்து அருட்பெருஞ் ஜோதியைத் தரிசிக்கவும், அங்கு தங்கிச் செல்லவும் வசதிகள் இல்லாமல் இருந்தன. ஆகையால் ஆண்டில் சில தினங்களை மட்டும் ஞான சபையின் திருநாட்களாகக் கொண்டாடிவிட்டு, மற்ற நாட்களில் சபையைப் பூட்டி வைத்திருந்தார்கள்.

இப்போது அப்படி இல்லை. மக்களுக்கு சத்திய ஞான சபையைப் பற்றிய உண்மை தெரிந்திருக்கிறது. அவர்கள் உள்ளத்தில் ஆர்வமும் ஏற்பட்டிருக்கிறது. வடலூருக்கு வருவதற்கும், அங்கு தங்குவதற்கும் வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொள்வதற்கான சூழ்நிலையும் அதிகரித்துள்ளன. அதனால் சத்திய ஞான சபையில், அருட்பெருஞ் ஜோதித் தரிசனம் தினந்தோறும் குறிப்பிட்ட காலங்களில் காட்ட வேண்டியது மிகவும் அவசியம்.

ஞான சபைக்குத் தினந்தோறும் ஏராளமான மக்கள் வந்து வழிபடுவார்கள். முக்கிய நாட்களில் பல சிறப்பு நிகழ்ச்சிகளுடன் அருட்பெருஞ் ஜோதி வழிபாடு ஞான சபையில் நடைபெறுவதால், அந்நாட்களில் மக்கள் கூட்டம் மிக அதிகமாக வந்து பயன்பெறப் போகிறது.

சாதாரண கோயில்களில் தினசரி வழிபாட்டுக்கு வரும் கூட்டத்தை விட, விழாக் காலங்களில் நடைபெறும் சிறப்பு வழிபாட்டுக்கு மக்கள் திரண்டு வருகிறார்கள்.

இதுபோல் சத்திய ஞானசபை நித்திய வழிபாட்டுக்கும் மக்கள் தினந்தோறும் வருவார்கள். சிறப்பு வழிபாட்டு நாட்களில் ஏராளமாகத் திரண்டும் வருவார்கள்.

சத்திய ஞான சபை சமரசப் பொதுமை இயல்பு கொண்டது. சத்திய ஞானசபை சந்நிதியில் சாதி, மத, இன

வேறுபாடு கிடையாது. அதனுல் எல்லா இன மக்களும், எல்லா நாட்டு மக்களும், எல்லாக் காலமும் சத்திய ஞான சபைக்கு வந்து அருட்பெருஞ் ஜோதியைத் தரிசிக்கப் போகிருர்கள். பெருவாழ்வு பெறப் போகிருர்கள்.

ஆகையால் ஞானசபைக்கு வரும் எல்லோரையும் அன்போடு உபசரித்து, அவர்கள் அருட்பெரும் ஜோதியை வழிபடுவதற்கு உதவி செய்வது நம் கடமையாகும்.

ஜீவ தயவும், தூய வாழ்வும். பேரின்ப விருப்பமும் உள்ள எல்லாரும் சத்திய ஞானசபைக்கு வந்து தாராளமாக வழிபட வகை செய்ய வேண்டும். அவர்கள் வழிபாடு செய்வதற்கு எந்தவிதமான தடையும் அங்கு இருக்கக்கூடாது.

சத்திய ஞானசபைக்கு வந்து வழிபாடு நடத்திச் செல் வோர் உள்ளத்தில் அமைதியும், தெளிவும், அன்புணர்ச்சியும் ஏற்பட்டு அவர்கள் வாழ்வு தழைக்க உதவ வேண்டும்.

## 8. ஞானசபையின் பிரதிபலிப்பு

உண்மையில் நம் அருட்பெரும் ஜோதியே எல்லா இடங் களிலும் தன் பூரண சக்தியோடு இருக்கிருர். ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வொரு உயிரிலும், அதுஅதுவாக, உள்ளி ருந்து செயல்படுகிருர். அந்தந்தப் பொருளின், அந்தந்த உயிரின், தோற்றத்துடன் அதன் அதன் தன்மைகளோடும், செயல்களோடும் இருக்கிருர்.

ஆகையால், நாம் புற நிலேகளேக் கடந்து, எல்லாவற் றிலும் இருக்கும் உண்மையான இறையொளியைக் காண வேண்டும். இறை ஒளியின் துணேயுடன் தயா வாழ்வு மேற் கொள்ளுதல் ஒன்றே பேரின்ப வாழ்வு பெறும் முறையாகும்.

நம்முள் நாமாக இறைவன் இருக்கிருர். அவர் தம் முடைய இயற்கையான அறிவின்ப அனுபவத்தை நமக்குக் கொடுப்பதற்காகவே பல தோற்றங்களில் நம்மைச் சுற்றிச் சுற்றி வந்து நம்மைத் தூண்டி விட்டுக்கொண்டிருக்கிருர்; நமக்கு உதவி புரிந்து கொண்டும் இருக்கிருர்.

ஆகையால், இறைவன் ஒருவனே என்றும், அவர் நம் உள் இருப்பது போலவே, எல்லாரிலும் இருந்தும் பிரதிபலித்துக்கொண்டிருக்கிருர் என்றும் அறிந்து கொள்ளவேண்டும். இந்த உண்மையை உலக மக்கள் அறிந்து கொள்ளும்படிச் செய்யவும் வேண்டும்.

வள்ளலார் தம் உள் கண்ட சத்திய ஞான சபையையே வடலூரில் பாமர மக்களுக்காகவும், அதற்கு உருவம் கொடுத்திருக்கிருர், அந்த ஞான சபையில் அருட்பெருஞ் ஜோதி எழுந்து தன் முழு ஆற்றலுடன் வெளியில் பரவத் தொடங்கி விட்டது. ஆகையால் உலகில் இருக்கும் எல்லா நாடுகளிலும் ஜோதிவழிபாடு நடத்தவும், எல்லா வீடுகளிலும் ஜோதியை அமைத்து வழிபடவும், வழி காட்ட வேண்டும்.

உலகில் உள்ள எல்லா மொழி ஏடுகளிலும் ஜோதி வழிபாட்டின் தத்துவத்தை விளக்கமாகவும், எளிதில் எல்லாரும் உணர்ந்து கொள்ளும்படியும், அதைப் பின்பற்றும்படியும் எழுதி வெளியிட்டு உதவ வேண்டும்.

சத்திய ஞான சபையின் முக்கிய அம்சமான அருட்பெருஞ் ஜோதி தீபத்தை ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சௌகரியப்படி, வசதியான இடத்தில் வைத்து தயவும் ஒருமையும் கூடிய உணர்வோடு தியானித்து வரவேண்டும்.

இந்தத் தியான சாதனையின் மூலமாக நம்முடைய சிரநடுவில் இருக்கும் ஞானசபையில் ஜோதி ஒளியைக் காணலாம். ஜோதி ஒளியுடன் கலந்து அதுவாகி நிற்கும் பழக்கம் நம்மை அறியாமலே நம்மிடம் வந்துவிடும்.

இந்தச் சுத்த அத்துவித நிலையில் இருந்து எல்லாரிடமும் அருட்பெருஞ் ஜோதி இயங்குகிறது என்பதை உள்நோக்கி உணரவேண்டும். அருட்பெருஞ் ஜோதியின் பிரதிபலிப்பாக இருப்பவர்கள் மக்கள் என்பதை உணர்ந்து அவர்களிடம் அன்புடன் பழக வேண்டும். அவர்களுக்குத் தயா உணர்வுடன் தொண்டாற்ற வேண்டும். இதனுல் தியானத்தின் பயனுகிய தியாகச் செயலும் நமக்கு ஏற்படும்.

**9. தகர விளக்கின் தத்துவம்;**

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை அறிந்து வழிபாடு செய்ய சத்திய ஞான சபையில் தகர விளக்கு வைக்கும்படி யாக வள்ளலார் கூறி இருக்கிறார்.

வள்ளலார் தகர விளக்கு வைக்க வேண்டும் என்ற சொன் னதின் பொருள் என்ன?

தகரத்தால் செய்து, கண்ணாடிக் கதவு அமைந்த விளக்கு மலிவாக இருக்கும். சுத்தம் செய்வதற்கும் எளிதாக இருக் கும். அதற்குள் இருக்கும் அருட்பெருஞ் ஜோதி தீபச்சுடர் ஆடாமல் அசையாமல் எரியவும் காற்று பூச்சிகள் முதலிய வற்றால் பாதிக்கப்படாமல் இருக்கவும் உதவியாக இருக்கும்.

இந்தத் தகர விளக்கு எல்லாருக்கும் சுலபமாக கிடைக்கக் கூடியது. அதனால் எல்லாரும் தகர விளக்கை வாங்கி, அதன் தீபச்சுடரில் அருட்பெருஞ் ஜோதியைப் பார்த்து வழிபட்டு உய்யலாம் என்ற எண்ணத்தில் சொன்னதுதான்.

அன்றைய சூழ்நிலையில் ஞானசபை வழிபாட்டிற்கு, தகர விளக்கு மிகவும் ஏற்றதாக இருந்திருக்கிறது.

இப்போதும், வருங்காலத்திலும், தகரமே கிடைப்பதற்கு அரிதாய்ப் போகும் காலத்தில்கூட தகர விளக்கையே தேடிக் கொண்டிருக்க முடியுமா?

கருக்காத உருக்கிலும், எளிதில் சிதைவுறாத கண்ணாடி யிலும், வேறு உலோகங்களிலும் விளக்குகளை அமைத்து அதில் தீபத்தை ஏற்றி வழிபாடு செய்தால் தவறாகுமா?

ஒருக்காலும் தவறாகாது.

கடவுள் உண்மை எல்லாக் காலத்திலும், எல்லா இடத் திலும் ஒரே மாதிரியாக மாற்றமில்லாதிருக்கிறது. மனி தனின் புறவாழ்வு முறையில், சதா மாற்றங்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன. இந்த மாற்றங்கள் அவன் வாழ்க்கை யில் மேன்மையடைவதற்காகவே, திருவருள் ஏற்படுத்தி அவனுக்கு உதவிக் கொண்டிருக்கிறது.

அருள் ஆண்டவர், சத்திய ஞானசபையின் ஜோதி வழி பாட்டின் மூலமாக நமக்கு அருள் அனுபவத்தை வழங்க வந்திருக்கிறுர். வள்ளலார் குறித்த தகர விளக்கு ஒவ்வொருவர் உள் இருக்கும் மெய்ஞ்ஞான பீடத்தில் சுடரும் கடவுள் உண்மையை விளக்குவதுதான்.

கடவுள் உண்மை வடிவம் வானவெளியிலும் மற்ற இடங்களிலும் நிரம்பி இருப்பது. அது அருள்வயப்படாத மனம், வாக்கு, காயத்திற்கு எட்டாதது.

ஆனுல், அது பரிபூரணமாய், நித்தியமாய் எங்கும் நிறைந்திருந்தாலும் அதுவே தன் பெருங்கருணையால் ஓர் ஆன்மச் சிற்றுருவில் ஒவ்வொருவர் உள்ளும் அவர்கள் மெய்ஞ்ஞான பீடத்தில் இருந்து செயல்படுகிறது.

அதன் அருளே, அந்த ஆன்மாவுக்கு, உயிர் உடல், எல்லாவற்றையும் கொடுத்திருக்கிறது. அந்த அருள் உணர்வுதான் அவ் அருள் இறையை அவர் உணர்வதற்கும் உதவுகிறது.இதுதான் மனிதன், ஆண்டவர் உண்மையை அறியும் மெய்ப் பொருள் ஞானம்.

இந்த மெய்ஞ்ஞான ஆன்ம ஆகாச அருட்பெரு வெளி நிலை இருக்கும் இடம்தான் சித்-அம்பரம், சிதம்பரம் எனும் சிதாகாசம். இது யோக அனுபவத்தின் ஏழாவது நிலையின் போது உணரக்கூடிய மெய்ஞ்ஞான பீடம். இந்த இடத்தைக் காட்டுவதற்காகவே ஏழாவது வரிசையில் இருக்கும் உயிர் மெய்யான 'த' என்ற எழுத்தால் குறிக்கிறுர் வள்ளலார். 'த' என்ற எழுத்தை தகரம் என்று சொல்வது தமிழ் மரபு. இந்த மரபு கெடாமல் ''தகராகாசம்'' என்று நம் உள்ளிருக்கும் மெய்ஞ்ஞான பீட வெளியைச் சொல்கிறுர்.

இந்தத் தகராகாசக் கடவுள் வடிவைச் சிவரூபம் என்று தசகாரிய சாத்திரம் கூறும். சுத்த சன்மார்க்கத்திலும் அருட்பெரும் ஜோதி ஒளிரும் ஞான ஆகாச நிலை தகராகாசம் என்றுதான் சொல்லப்படுகிறது.

இத்தகர ஆகாசத்தில் விளங்கும் அருள் ஒளி விளக்குதான் தகர விளக்கு. கடவுள் உண்மை அனுபவத்தைத் தர வந்தது

தகர விளக்கு. இதைத்தான் 'தகர விளக்கு' என்று சொல்லி இருக்கிருர் வள்ளலார்.

எனவே,''சத்திய ஞானசபையில் எப்போதும் சாதாரண தகரத்தால் செய்த விளக்கையே ஏற்றி வைத்து வழிபடச் சொன்ஞர் வள்ளலார்'' என்று எண்ணிக்கொண்டு வீண் வாதம் செய்யக்கூடாது.

காலத்திற்கும் வசதிக்கும் ஏற்ப பொன்ஞலும் மணி யாலும் ஞானசபை அலங்கரிக்கப்பட்டு இருக்கும்போது, அருட்பெருஞ் ஜோதி தீபம் பொன்மணி விளக்கில் துலங்கிஞ லும் பொருத்தமாகவே இருக்கும்.

## 10. திருவிளக்கு வழிபாடு:

சூரிய வழிபாடு, உலகம் எங்கும் பரவி இருந்த காலம் ஒன்று இருந்தது. அந்த வழிபாடு நம் நாட்டிலும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் நடைபெற்று வந்தது. இன்றும் ஒவ்வொரு நாள் மாலையிலும் வீடுகள் தோறும் திருவிளக்கை ஏற்றிப் பெண்கள் வழிபாடு செய்து வருவதைக் காணலாம்.

இந்தத் திருவிளக்கு ஒரு முகத்தை உடையதாகவோ, மூன்று அல்லது ஐந்து முகங்களை உடையதாகவோ,காமாட்சி, மகாலட்சுமி தீபமாகவோ இருக்கும்.

இந்த விளக்கைச் சுத்தமாய்த் தேய்த்து, மாலை வேளையில் அலங்கரித்து ஏற்றி வைத்து, வணங்கி வழிபடுவது நம் மிடையே நீண்ட நெடுங்காலமாக இருந்துவரும் வழக்கம். இந்த வழக்கம்தான் மார்கழி மாதத்தில் அதிகாலையில் திருவிளக்கு பூஜை செய்யும் வழக்கமாக நடைபெற்று வரு கிறது. கார்த்திகை, தீபாவளி முதலிய காலங்களிலும் இவ்விளக்கு பூஜையைச் சிறப்பாக செய்து வருவதை இன்றும் காணலாம். திருமணங்களின் போதும் இவ்விளக்கு பூஜை யைத்தான் முக்கியமாக நடத்துவார்கள்.

இவையெல்லாம், நம் தலையின் உச்சிக்குக் கீழே உண்ணு வுக்கு மேலே புருவ மத்திக்கு நேரே இருக்கும் அருள் ஜோதி விளக்கு உண்மையைக் காட்டும் வழிபாடுதான்.

இந்தத் திருவிளக்கு வழிபாட்டால் தெய்வத்தின் திரு அருள் பெறலாம் என்பது முன்னோர் அனுபவம். இன்றைய மக்களின் நம்பிக்கையும் அதுதான்.

''ஆன்ம ஜோதியாகிய அகவிளக்கு ஒன்றே மெய்விளக்கு; மற்ற மனித உடல் முதலிய பிரபஞ்சப் பொருட்கள் யாவும் பொய்த்துப் போகும் மாய தீபம்'' என்று அன்றைய ஆன்ம ஞானிகள் உறுதியாய் நம்பிச் சொல்லி வந்தனர். அந்த நம்பிக்கை தவருனது என்பதுதான் வள்ளலார் அனுபவம்.

சத்திய ஞானசபையில் ஒளிரும், அருட்பெருஞ் ஜோதி தீபம், நம்மை ஆட்கொண்டு இருக்கிறது. நம் அகத்தில் இருந்து ஒளி வெள்ளமாகப் பொங்கிப் பரவிக்கொண்டு இருக்கிறது. அது நம் உள்ளத்தையும், உயிரையும், உடம்பையும் சுத்தமாக்க உதவுகிறது.

இதனுல் அசுத்த மாய உடம்பே, சுத்த மாயா அருள் ஒளி உடம்பாய் மாறி விளங்குகிறது.

இந்த உண்மையை வள்ளலார் தம் சென்னை அன்பர்கட்கு செய்யுள் வடிவத்தில் வரைந்த ஒரு கடிதத்தில் இருந்து விளங்கிக்கொள்ள முடிகிறது.

''மெய்விளக்கே விளக்கல்லால் வேறு விளக்
கில்லையென்ருர் மேலோர்; நானும்
பொய்விளக்கே விளக்கென உட்பொங்கிவழி
கின்றேன்ஓர் புதுமை யன்றே
செய்விளக்கும் புகழுடைய சென்னநகர்
நண்பர்களே, செப்பக் கேளீர்!
நெய்விளக்கு போன்ருெரு தண்ணீர்
விளக்கும் எரிந்தது சந்நிதியின் முன்னே!''

ஆன்மாவே நித்தியம், உடல் அநித்தியம் என்ற முன்னோர் கருத்தை இந்தப் பாடலில் வன்மையாகச் சாடுகிருர் வள்ளலார். அவர்கள் கருத்துப்படி பொய் விளக்காகிய இந்த உடல் மெய்யாக விளங்காதுபோனுல், நமக்கு ஆன்ம அனுபவம் எப்படி விளங்கும்? என்று கேட்கிருர்.

இந்த உடல் ஆன்மாவின் ஒரு நிறை அங்கமாக இருக்கிறது. அதனுல் இதுவும் அதன் நித்தியத் தன்மையுடன் நிலவ வேண்டியதுதான் நியதியாகும்.

அகத்தில் ஓங்கும் ஆன்ம நித்திய ஒளி, திருவருளால் அருள் அமுத வெள்ளமாகச் சதா பாய்ந்துகொண்டு, அதைச் சுற்றி இருக்கும் உடம்பைச் சுத்த பிரணவ ஞான தேகமாக விளங்கச் செய்யும். அதற்கு நித்திய வாழ்வை அளிக்கும். இதுதான் இறைவனின் திருவுள்ளம்.

ஒவ்வொரு மனித உடலின் உள்ளேயும் அருள் அமுதம் பொங்கி நிறைகிறது. தேகம் அழியாமல் இருப்பதற்கு இது இயல்பான செயலாகும். இதனுல் இதுவரை பொய்யான தேகம் என்று சொல்லி வந்த நமது தேகம் மெய்யாக இருக்கும் என்பது சத்தியம்.

நம் ஆன்மாவில் அருள் சக்தி நித்தியமாய் இருக்கிறது. நித்தியானந்த அனுபவ வாழ்வு பெறும் வரை அந்த அருள் சக்தி, காரண அருவ தேகமாய் இருக்கிறது. காரண காரிய அருவுருவச் சூக்கும தேகமாயும் இருக்கிறது. காரிய உருவத் தூல தேகமாயும் இருக்கிறது. அது ஒடுங்குவதும் தோன்றுவதுமாகவும் இருக்கிறது.

எனவே தேகம் தோன்றுவதும் ஒடுங்குவதுமாக இருப்பினும் உண்மையில் இந்தத் தேகம் நிலைத்து இருக்கக்கூடியது. அழிந்துபோகும் பொய் அல்ல. நிலைத்து இருக்கும் மெய்யே.

இந்த உண்மையை எப்படியோ உணர்ந்திருந்த யாரோ ஒருவர் நம் உடலுக்கு 'மெய்' என்ற பெயரை வைத்திருக்கிருர். அந்தப் பெயரும் நிலைத்து நின்றுவிட்டது.

ஆனுல் அருளை அறியாத மருள் ஆளர்களோ மெய்யான இந்த உடலைப் பொய் என்று கூறுகிருர்கள்.

ஒரு விளக்கு எரிய வேண்டுமானுல் எண்ணெய், நெய் முதலிய துணைப் பொருள்கள் அதற்குத் தேவைப்படுகிறது,

ஆனால், திருவருள் ஆற்றலால், தீபம் தண்ணீரிலேயே எரிதலும் கூடும் என்பது வள்ளலார் அனுபவம்.

தீபம் தண்ணீரால் எரிந்ததுபோலவே நமது உடம்பையும் அன்னம் ஆகாரம் முதலியவை இல்லாமல் அருள் அமுத நன்னீராலேயே வாழ்ந்துகொண்டிருக்கச் செய்ய முடியும் என்று வள்ளலார் சொல்கிறார்.

இப்போதுதான் எண்ணெய்க்குப் பதில் மின்சக்தியின் துணையால் விளக்கு எரிவதைப் பார்க்கிறோமே.

இதுபோல், 'அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணையால் நம் தேகம் அருட்பிரகாசத்தோடு புறத் துணை ஏதும் இன்றி, அழியாது இருக்க முடியும்.

ஆகவே, நமது ஆன்ம ஆலயத்தில், சத்திய ஞானசபையில், அருட்பெருஞ் ஜோதி விளக்கு நித்தியமாக இருந்தபோதிலும், ஏற்றப்படாத விளக்கு போலவும், 'சுவிட்சு' போடப்பெறாத மின்விளக்கு போலவும், அதன் ஆற்றல்கள் வெளியே தெரியாமல் மறைந்து இருக்கிறது.

அதன் ஆற்றலை இறைவனின் தனிப்பெருங் கருணையால் ஏற்றி அகண்ட தீபமாய்ப் பிரகாசிக்கச் செய்யவேண்டும்.

ஞானசபையில் இந்த அருள் ஒளி விளக்கு தன் கருணை ஜோதியை சதா பரப்பிக்கொண்டே இருக்கும்படிக் கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும்.

வடலூர் சத்திய ஞானசபையில் அருட்பெருஞ் ஜோதியைத் தினந்தோறும் தரிசிக்க ஏராளமான மக்கள் வருவார்கள். அவர்கள் அருட்பெருஞ் ஜோதியை வழிபட்டு வாழ்வில் அருள் இன்பம் பெற்று உயர்வதற்கு உதவ வேண்டும். இது நம் கடமையாகும்.

இப்போது திருவருளும் நமக்குத் துணைபுரிய இசைந்திருக்கின்றது. அகப்புற அருள் விளக்கத்திற்கு ஏற்பு உரிய

வேளையில் அருட்பெருஞ் ஜோதி மகாமந்திரத்தைக் கோடி முறை ஓதி ஓதி ஞானசபை உச்சியில் பொற்கலச ஜோதிக் காட்சியை ஏற்றி வைத்திருக்கிறோம்.

இனி சத்திய ஞானசபையில் தினந்தோறும் ஜோதி தரிசனம் நடைபெறும். இதனால் எல்லா மக்களும் வாழ்வில் எல்லா நலமும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வார்கள்.

இதற்குத் திருஅருள் துணைசெய்ய ஆரம்பித்துவிட்டது.

# 7. சுத்தசன்மார்க்கம்

சன்மார்க்கம், சத்மார்க்கம் என்று விரியும். சத்து என்றால் இறைவன். மார்க்கம் என்றால் நெறி அல்லது வழி. ''இறைவனின் வழி'' தான் சன்மார்க்கம்.

இறைவனின் வழி என்றால் என்ன?

அருள் அறிவால்தான் இறைவனின் உண்மையை உள்ள படி அறிய முடியும். அப்படி அறிந்தால் தான் அவன் நெறி விளங்கும். முன்னோர்களோ கடவுள் உண்மையை உள்ளபடி அறிந்துகொள்ளாமல் தங்கள் மருள் அறிவால் அவரை மாறு பாடாகத் தெரிந்துகொண்டிருந்தார்கள். அதனால் ஆண்ட வன் மார்க்கத்தை அவர்கள சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

அவர்கள் கடவுள் நம்மை விட்டுப் பிரிந்து எங்கோ தனி யாக இருப்பதாகக் கருதினார்கள். கடவுளை அடைவதற் கென்று பலவகைக் கொள்கைகளைக் கொண்ட பல வழிகளை வகுத்துக் கொடுத்தார்கள்.

இவ்வாறு வகுக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு மார்க்கமும் சன்மார்க்கம் தான் என்று அந்த மார்க்கங்களைப் பின்பற்று வோர் போற்றிக்கொண்டு இருக்கிறார்கள்.

இவர்களுடைய எந்த மார்க்கத்தாலும் மனிதன் கடவுளை அடைந்து வாழ முடிந்ததா என்று ஊன்றிச் சிந்தித்தால், இல்லை என்றே சொல்லலாம்.

மனிதன் கடவுளை விட்டுப் பிரிந்து, இவ்வுலகத்தில் வந்து பிறக்கிருன். எத்தனையோ காலமாக எத்தனையோ வகையான பிறவிகளை எடுத்து அதில் அவத்தைப் பட்டுக் கொண்டிருக்கிருன். அவன் பெற்றிருக்கும் சன்மார்க்கத்தின் வழிசென்று, கடவுளை அடைந்து அவருடன் கலந்து, அவர் மயமாகி விடலாம் என்று நம்புகிருன். இறைவனை அடைவ தன் மூலமாக மீண்டும் பிறவாமல் இருப்பதே மனித வாழ்க் கையின் முடிவு என்றும் எண்ணிக் கொண்டிருக்கிருன்.

இந்தக் கருத்தும், அவன் மேற்கொண்டு அடைந்த முடிவும் சரியல்ல என்பது மெய்ஞ்ஞானிகளின் அனுபவம்.

**உண்மைக் கடவுள் விளக்கம்:**

''உண்மைக் கடவுள் விளக்கம்'' என்ற இந்தத் தலைப் பைக் கண்டதும், ''உண்மைக் கடவுள், பொய்க் கடவுள் என்று இரண்டு கடவுள் உண்டோ?'' என்று எண்ணக்கூடும்.

உண்மையில் சச்சிதானந்தமாய், பரிபூரணமாய் இருக் கிற பரம்பொருள் ஒன்றேதான். நம் முன்னேர் அதை உள்ள படி அறிந்து கொள்ளவில்லை. தங்கள் மருள் அறிவால் அதன் ஒரு பகுதியை மட்டும் அறிந்தார்கள். மற்ற பகுதிகளைப் பற்றிக் கற்பனை மனேபாவனைகளையும், தவருன தீர்மானங் களையும் மேற்கொண்டார்கள்.

கடவுளைப் பற்றியும், அவரை அடையும் மார்க் கத்தைப் பற்றியும் பல கருத்துக்களை வெளியிட்டார்கள்.

வேதாந்தம், சித்தாந்தம் முதலியவைகள், பரப்பிரம்ம மும், சிவபெருமானும், மனிதனைப் பந்தபாசத்தில் இருந் தும், பிறவித்தளையில் இருந்தும் நீக்கி அவனைத் தம்முடன் ஐக்கியப்படுத்திக் கொள்வதாகக் கூறுகின்றன. இந்த ஐக்கிய நிலையில் மனிதனுடைய தனி வாழ்வு போய்விடுகிறது. தன் வாழ்வை இழந்து விட்ட மனிதனல் பிரம்மானுபவத் தையோ, சிவானுபவத்தையோ எப்படி அனுபவிக்க முடியும்? முடியாது. காரணம் அவன் வாழ்வு சூனியமாகிவிடுகிறது.

கடவுள் உண்மையோ சச்சிதானந்தமாய் இருக்கிறது. மனிதன் கடவுள் நிலையைப் பெற்று இறை இன்பத்தை அனுபவிக்கவேண்டும். அதற்கு இறைவனுடன் தானும் அழியாமல் இருக்க வேண்டாமா?

எனவே இறைவனுடன் இரண்டறக்கலந்து மறைவதை லட்சியமாக வைத்து ஆக்கப்பட்ட சன்மார்க்கங்கள் எல்லாம் இறை இன்ப வாழ்வுக்குப் பயன் படவே இல்லை.

இப்போது திருவருள் உண்மை, அருட்பெருஞ் ஜோதி யாய்த் தனிப் பெருங்கருணையுடன் மனிதனின் உள்ளும் புற மும் எழுந்திருக்கிறது. அவன் உண்மைக் கடவுள் விளக் கத்தை, அந்தக் கடவுள் அனுபவத்தின் மூலமாகவே பெற்றி ருக்கிறான். இறை அனுபவம் பெற்ற அவனுக்கு ஆனந்த மாக வாழ்வதற்கான நெறிமுறைகளும் இருக்கின்றன.

அனாதி நித்திய சத்துப் பொருள் அருட்பெருஞ் ஜோதி. அதுவே எங்கும் பரிபூரணமாய் இருக்கிறது. ஆனால் அது காண்பதற்கு அரியதாய் இருக்கிறது.

சத்துப் பொருளின் சித்துத் தன்மையால் அதுவே எப் பொருளாயும், எவ்வுயிராயும், எச்சக்தியாயும் விளங்கி வருகிறது. அருட்பெருஞ் ஜோதியின் உண்மை விளக்கமே ஒருவனின் உடல், உயிர், உணர்வு எல்லாமாய் இருக்கிறது. அருட்பெருஞ்ஜோதியே அதுவாகவும் இருக்கிறது. அதனால் உண்டாக்கப்பட்ட எல்லாப் பொருள்களாகவும் இருக்கிறது.

வெறும் புலன் இச்சை வாழ்வின் இன்பங்களில் மூழ்கி விடாமல், அருட்பெருஞ் ஜோதியின் உண்மையை உணர்ந்து அதனுடன் ஒன்றி சலனமற்று இருக்கையில் ஏற்படும் அனு பவம் தான் மெய்இன்பம்.

மெய் இன்பத்தை அளிப்பது அருட்பெருஞ் ஜோதி. அது இப்பொழுது நம்மில் நாமாய் இருக்கிறது.

எந்தக் காலத்தும் கடவுள் உண்மை நித்தியமாய் இருக் கிறது. இருந்தும் அந்த உண்மை இதுவரையில் சரியாக

அறிந்து கொள்ளப்படவில்லை. இப்போதுதான் அதன் அருளாலேயே அதன் உண்மையை அறிந்து கொண்டிருக்கிறோம்.

நாம் என்றும் கடவுளைப் பிரிந்து இருந்ததும் இல்லை; பின் அதனிடம் போய்ச் சேர்ந்ததும் இல்லை. கடவுளும் நாமும் என்றும் எப்போதும் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமலேயே இருக்கிறோம்.

திருவருள் ஞானத்தால்தான் இதை அறிகிறோம். திரு அருளால் அறியாமல் மருளால் அறிந்தவர்கள் கடவுள் எங்கோ வெளியில் தனியாக இருப்பதாக எண்ணினார்கள். வெளியில் இருக்கும் கடவுளை அடைவதற்கென்று முன்னோர்களால் வகுக்கப்பட்ட நெறிகளை உண்மையான சன்மார்க்கம் என்று எப்படிச் சொல்ல முடியும்? எனவே அந்த மார்க்கங்களை எல்லாம் மதிக்கவோ மேற்கொள்ளவோ தேவையில்லை.

மெய்ப்பொருளே நாமாகவும், நாமே மெய்ப்பொருளாகவும் இருக்கிறோம். இந்த உண்மையை மெய்யறிவால் தெளிவாக அறிந்து கொண்டோம். இதுமட்டும் ஒரு மனிதனுக்குப் போதுமா? போதாது.

ஒருவன் தேக போக வாழ்வில் உழன்று கொண்டிருக்கிறான். சுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டிருக்கிறான். அவன் தன்னைக் கடவுள் மயமானவன் என்று அறிந்துகொள்வதால் மட்டும் அவனுக்குக் கடவுள் இன்ப வாழ்வு கிடைத்து விடுமா? கிடைக்காது.

அவன் கடவுள் நிலையை உணர்ந்து அதில் ஒன்றி வாழ வேண்டும். ஜீவகாருண்யத்துடன் தயவு வாழ்வில் தழைத்திட வேண்டும். புலன் இச்சையில் சிக்கிவிடாமல் இருக்க வேண்டும். இவ்வாறு அவன் வாழும்போதுதான் அவனிடம் உள்ஒளி பெருகும். அந்த ஒளி அவன் உடம்பைச் சுத்த நித்திய அருள் உடம்பாக மாற்றும். அவனை இறை இன்ப வாழ்வில் விளங்கச் செய்யும். அவனுக்கு மரணமிலாப் பெருவாழ்வை அளிக்கும். இவ்வாறு வாழும் முறைதான் உண்மையான சுத்த சன்மார்க்கமாகும்.

**சுத்த நெறி :**

சுத்தம் என்பது கடவுளின் உண்மை விளக்கம். அதாவது மெய்யருளே சுத்தமாகும்.

உலகியலில் ஈடுபட்டிருக்கும் மனம், உண்மையை அறியாமல் பலப்பல சிந்தனையில் உழன்றுகொண்டிருக்கிறது. அதனால் அது நினைப்பும் மறப்பும் அடைந்துகொண்டிருக்கிறது.

இந்த நிலையில் ஏதோ ஒரு கடவுளைப்பற்றி இடையறாது நினைந்து அந்தக் கடவுளை அடைய முற்படும்போது, அவன் தன்னையே மறந்து இழந்துவிடுகிறான். தன் உணர்வு தலை தூக்கி இருக்கும்போது அவன் கடவுளை மறந்துவிடுகிறான்.

இவ்விதம் நினைத்தலும், மறத்தலுமாகிய நிலையையே சகலம், கேவலம் என்று கூறுவர்.

சகல கேவலம் அடையாதிருக்க வேண்டுமானால் சுழுத்தியாகிய உறக்கத்திலோ, சமாதியாகிய ஒடுக்கத்திலோ இருக்கவேண்டும், அவ்வாறு இருந்தால் அங்கு சகலமும் இல்லை கேவலமும் இல்லை. அதாவது நினைப்பும், மறப்பும் இல்லை. ஆனால் அது கேவலமே; வெறும் சூனியமே.

தூக்கத்தில் இருந்து விழித்தெழுந்ததும், சமாதியில் இருந்து விடுபட்டதும் நினைப்பாகிய சகல நிலையும் மறப்பாகிய கேவல நிலையும் அவனுக்கு வந்து விடுகின்றன. இந்த நினைப்பும் மறப்பும் இல்லாது இருக்கும் தூக்க நிலையும், சமாதி நிலையும் சூனிய நிலைதான்.

சகல கேவல நிலை அடையாமல் அருள் உணர்வோடு இருப்பதுதான் சுத்த நிலை. ஒருவன் சுத்த நிலையில் இருக்கும் போது அவனுக்கு நினைப்பும், மறப்பும் ஏற்படுவதில்லை. அருள் உணர்வு மாத்திரம் சர்வசாட்சி நிலையில் அவனிடம் இருந்துகொண்டே இருக்கும். இந்த அருள் உணர்வோடு உலகில் வாழும் முறையே சுத்த நெறியாகும்.

சுத்த நெறிதான் சன்மார்க்கம். சத்து மார்க்கமாகிய கடவுள் நெறி மனிதனைக் கடவுளோடு கொண்டுபோய்ச்

சேர்க்கும் மார்க்கம் அல்ல. கடவுளும் நாமும் பிரியாமல் வாழும் மார்க்கம்தான் சன்மார்க்கம். இவ்வாறு வாழ்வது தான் சுத்த அத்வைத வாழ்க்கை.

மார்க்கம் என்பதும் நெறி என்பதும் இங்கே ஒரு இடத்தி லிருந்து மற்ருேர் இடத்துக்குச் செல்லும் வழியைக் குறிப்பிடு வது அல்ல. மார்க்கம், நெறி, வழி என்பவை எல்லாம் நாம் வாழும் வகையையும். முறையையும் குறிப்பவைதான்: இயல்பாகக் கடவுளோடு ஒன்றியுள்ள நாம் அந்த மேலான அருளியல் வாழ்வோடு செயல்படுவதுதான் சுத்தநெறி.

சுத்தம் என்னும் அருள் உண்மையை உணர்ந்துகொண்டு வாழும் முறையைத்தான் வள்ளல் பெருமான் ''சுத்த சன் மார்க்கம்'' என்கிருர்.

அருள் உண்மையை அறியாதவர்கள், சுத்த சன்மார்க்க உண்மையையும் அறியாதவர்களே. மற்றவர்கள் காட்டும் சன்மார்க்கம் எல்லாம் சுத்த நெறிக்குக் கொஞ்சமும் பொருந்துவன அல்ல. இவை முற்றிலும் மாருனவை: நம்மைத் திசை திருப்பிவிடுபவை.

இந்த நேர்மாருன வித்தியாசத்தைச் சற்றும் உணர்ந்து கொள்ளாது, முன்ஞேர் நெறிகளோடு சுத்த நெறியை ஒப்பு நோக்குவதும், இரண்டு நெறிகளும் ஒன்றுதான் என்று கூறுவதும் அறியாமையாகும்.

பழைய நெறிகளில் பயின்று மரணம் அடையும் நிலைக்கும், வள்ளலார் வழியில் பெறும் மரணமிலாநிலைக்கும் வேற்றுமையே இல்லை என்ருல் அதை ஏற்க முடியுமா? உண்மையை உணர்ந்தவர்கள் ஏற்கமாட்டார்கள்.

உண்மையை அறியாதவர்களே அகக்கண்ணை மூடிக் கொண்டு, முன்ஞேர் முடிவே வள்ளலார் முடிவும் என்று வாதாடிக்கொண்டு இருப்பார்கள்.

அருட்பெருஞ்ஜோதி தோன்றி இருக்கும் இத்தருணத் தில் உண்மையைப் பலரும் உணர்ந்து ஏற்றுக்கொள்ள முன் வந்து இருக்கிருர்கள். ஏற்றுக்கொண்டும் வருகிருர்கள்.

ஆதலால் இனிமேல் பழைய கண்மூடி வழக்கம் எல்லாம் மண்மூடிப்போகும் என்பது நிச்சயம்,

வள்ளலார் காட்டிய சுத்த சன்மார்க்கம் அருட்பெருஞ் ஜோதி நெறியாகும்.

சில இடங்களில் வள்ளல் பெருமான் ''சுத்த சன் மார்க்கம்'' என்ற சொற்ருெடருக்கு இடையில் 'சிவம்' என்ற சொல்லைச் சேர்த்து ''சுத்த சிவ மார்க்கம்'' என்று கூறியிருக்கிருர். இதைப் பார்த்து சிலர் இது சமய மதச் சார்புடைய நெறியோ என்று சந்தேகப் படுகிருர்கள்.

எங்கும் எப்போதும் கடவுள் உண்மையைக் குறிப்பது அருட்பெருஞ்ஜோதி. ஆதியில்இதை கந்தழி என்ற சொல்லால் குறித்தார்கள். பின்பு அதற்கே சிவம் என்று பெயர் சூட்டி ஞர்கள். எனவே சிவம் என்ற சொல்லின் உண்மைப் பொருள் அருட்பெருஞ்ஜோதி என்பதுதான்.

''சுத்த சிவம்'' என்று வள்ளல் பெருமான் குறிப்பதெல் லாம் அருட்பெரும் ஜோதியைத்தான்.

தமிழின் மூலமாகக் கடவுளின் உண்மை வெளியான செய்தியை உணர்த்தவே சுத்தமாகிய அருளோடு சேர்த்து அப்பெருநெறியை 'சுத்தசிவமார்க்கம்' என்ருர் வள்ளலார்.

முன்ஞேர்கள் சொன்ன 'சிவம்' என்ற சொல்லுக்கு முன்ஞல் 'அருள்' என்ற சொல்லை வைத்து 'அருட்சிவம்'' என்றே அருட்பெருஞ்ஜோதி அகவல் ஆரம்பத்தில் வள்ளல் பெருமான் சொல்லி இருக்கிருர்.

ஆகவே சிவம் என்ற சொல்லுக்கு உரிய அனுபவப் பொருள் அருட் பெருஞ் ஜோதி என்பது. இது எல்லாரும் ஏற்றுக்கொள்ளக்கூடியது.

ஆதலால் சிவம் என்ற சொல்லை ஏதோ இடைச்செருகல் என்று எண்ணிவிட வேண்டாம். ''சுத்த சன்மார்க்கம்', என்பதைத்தான் ''சுத்த சிவமார்க்கம்'' என்று வள்ளலார் குறிப்பிட்டிருக்கிருர். இப்போது கிடைத்திருக்கும் இன்னெரு சொல்லும் இந்த உண்மையை மிகத்தெளிவாகக் கூறுகிறது.

**சுத்த தயா மார்க்கம்**

அருட்பெருஞ் ஜோதியின் தனிப்பெருங் கருணையால் ஆண்டவர் உண்மை முழுவதையும் பொருந்தும்படிக் காட்டக்கூடிய ஒரு சொல் நமக்குக் கிடைத்திருக்கிறது.

அந்தச் சொல்தான் ''தயவு.'' இந்தச் சொல் பழமையானதுதான். ஆனாலும் இதன் மூலமாக அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் உண்மையை இப்போது அறிகிறோம்.

''தயவு'' என்ற சொல்லில் இருக்கும் 'த' என்பது தமிழில் ஆயிரம் என்ற எண்ணைக் குறிக்கும். நமது தலையில் இருக்கும் மூளைப் பகுதியை சகஸ்ரதளம் என்று சொல்லுவார்கள். அதாவது ஆயிரம் இதழ்களையுடைய தாமரை பீடம். இந்தத் தாமரை இதழைப் போன்ற மெய்ஞ்ஞான பீடத்தில்தான் அருட்பெருஞ் ஜோதி இருக்கிறது. ஆகையால் தயவு என்ற சொல்லில் இருக்கும் 'த' நமது தலையில் உள்ள தகர ஆகாசத்தைக் குறிக்கும்.

'தயவு' என்ற சொல்லில் இருக்கும் 'ய' என்பது தமிழில் பத்து என்ற எண்ணைக் குறிப்பது. எண்சாண் உடலையும் இரண்டு மூச்சுகளையும் சேர்த்தால் பத்தாகும். பத்து என்ற எண் உடலையும் மூச்சையும் உடைய ஆன்மாவைக் குறிக்கும்.

தகர ஆகாசத்தைக் குறிக்கும் 'த' என்ற எழுத்துடன் நம்உள் இருக்கும் ஆன்மாவைக் குறிக்கும் 'ய' என்ற எழுத்தையும் சேர்த்தால் 'தய' என்பது உருவாகிறது.

'தய' என்பதுடன் 'வு' என்ற எழுத்துச் சேரும்போது 'தயவு' என்ற சொல் தோன்றுகிறது.

'வு' என்ற எழுத்தை வ்+உ என்று பிரிக்கலாம். 'வ்' என்ற எழுத்து அருளைக் குறிக்கும். உ என்பது தமிழ் எழுத்தில் ஐந்தாவது உயிர் எழுத்து. இந்த ஐந்தாவது நிலை, ஐம்பெரும் சக்திகளான அருள், யோகம், ஞானம், செயல், பொருள் ஆகிய சக்திகளைக் குறிக்கும். எனவே 'உ' என்ற எழுத்து அருள் முதல் பொருள் வரையில் உள்ள ஐம்பெரும் சக்தியின் செயல்களைக் குறிக்கும். 'வ்' ஆகிய அருளுடன்; உ ஆகிய

ஐம்பெருஞ் சக்திகள் சேர்ந்து 'வு' என்ற எழுத்து ஐம்பெரும் சக்திகளின் செயலைக் குறிக்கும் எழுத்தாகிறது.

எனவே தயவு என்ற சொல்லில் இருக்கும் 'த' என்ற எழுத்து சத்தையும், 'ய' என்ற எழுத்து சித்தையும், 'வு' என்ற எழுத்து ஆனந்தத்தையும் குறிக்கும். தயவு என்றாலே சச்சிதானந்தம்தான். 'ச ச் சி தா ன ந் த ம்' என்பது சிவம். சச்சிதானந்தமும் சிவமும் எந்தப் பொருளைக் குறிக்கிறதோ, அதே பொருளைத்தான் 'தயவு' என்ற சொல்லும் குறிக்கிறது.

அருட்பெருஞ் ஜோதியின் உண்மையையும் அக அனுபவத்தின் அருள் உணர்வையும் ''தயவு'' என்பதில் காணலாம்.

கடவுள் தன்மையில், அவருடைய அருள் என்பதும் தயவு என்பதும் ஒரே பொருளையே உணர்த்தும்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் தன்மையின் உண்மை 'தயவு' என்பதிலும் அப்படியே இருக்கிறது. ''அருள்'' என்பது ''தய'' என்பதிலும் ''பெருஞ் ஜோதி'' என்பது ''வு'' என்பதிலும் அடங்கும். ''அருட்பெருஞ் ஜோதி'' என்ற சொற்றொடரே ''தயவு'' என்ற சொல்லில் அதன் முழு தெய்விக ஆற்றலுடன் அடங்கியிருக்கிறது.

இயற்கையில் அருட்பெருஞ்ஜோதி என்று இருக்கும் கடவுளே, தயவு என்ற பெயரிலும் அகத்தில் நின்று சுத்த சன்மார்க்க வாழ்வை வழங்கக் கூடியதாய் இருக்கிறார். ஆகையால் இந்தத் தயவு என்ற சொல் சுத்த சன்மார்க்க உண்மையை விளங்கக்கூடிய ஆற்றலுடன் இருக்கிறது.

இந்த உண்மையை அறிவதற்கு முன்பே ''தயவு'' என்ற சொல் வழக்கில் இருந்து வருகிறது. இருந்தாலும் இப்போது தான் அதற்குக் கடவுள் உண்மையை விளக்கும் பொருள் இருப்பதைத் தெரிந்து அதை உவகையோடு ஏற்கிறோம்.

தயவு முன்பு யாரும் பெறாத சுத்த சிவானந்த அனுபவ வாழ்வை நமக்குத் தரும் கடவுளின் பெயர்தான்.

''கந்தழி'', ''சிவம்'', ''அருட்பெருஞ்ஜோதி'' என்ற சொற்கள் எந்த மெய்ப்பொருள் உண்மையை உணர்த்த வந்தனவோ, அதே மெய்ப் பொருள் உண்மையை உணர்த்தும் சொல்தான் ''தயவு.''

திருவருட்பாவில் பல இடங்களில் வள்ளலார் உபயோகித்துள்ள ''சிவம்!' என்ற சொல்லுக்குப் பதில் ''தயவு'' என்ற சொல்லை வைத்துப் பார்த்தோமானுல், எந்தப்பொருள் மாறுபாடும் தோன்ருது.

''தயவு'' என்ற சொல் எந்த ஒரு சமயத்தின் கடவுளையும் குறிக்காமல் எல்லாச் சமயக் கடவுள் உண்மையும் பொதுவாகக் குறிக்கும் சொல்லாக மிகுந்த ஆற்றலுடன் இருக்கிறது. அதனுல் திருஅருட்பாவில் 'சிவம்' என்ற சொல்லுக்குப் பதிலாக 'தயவு' என்ற சொல்லை உபயோகித்தோமானுல் திருஅருட்பா உலகமக்கள் எல்லாரும் உவந்து ஏற்றுக் கொள்ளக்கூடிய பொது நூலாகிவிடும்.

''சுத்த சிவ மார்க்கம்'' என்பதை ''சுத்த தயா மார்க்கம்'' என்றும் சொல்லலாம். ''தரமிகுபேர் அருள் ஒளியால் 'சிவமயமே' எல்லாம் தாமெனவே உணர்வது சன்மார்க்கநெறி'' என்ற திருஅருட்பா பாடல் வரியில் ''சிவமயமே'' என்ற சொல்லுக்குப் பதிலாக ''தயாமயமே'' என்ற சொல்லைப் போட்டோமானுல் அதன் பொருளிலும் மாறுபாடு இருக்காது; ஆற்றலிலும் ஏற்றம் இருக்கும்; எல்லா சமயத்தவரும் திருவருட்பாவைத் தங்கள் நூலாக விரும்பி ஏற்றுக்கொள்ளவும் முன் வருவார்கள்.

இதுபோல் திருவருட்பாவில் ''சிவம்'' என்ற சொல் சன்மார்க்கத்தைக் குறிக்கவரும் இடங்களில் எல்லாம் ''தயவு'' என்ற சொல்லைப் பயன்படுத்திக் கொண்டால் இதனுல் உலகுக்குப் பெரும் பயன் உண்டாகும்.

இதை அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் உள்ளமும், அருட்பிரகாச வள்ளலார் திருவுள்ளமும் இசைந்து ஏற்றுக் கொள்ளும். இதில் எந்தச் சந்தேகமும் வேண்டாம்.

கடவுள் உண்மைக்கு ''தயவு'' என்ற சொல்லை உபயோகிப்பதன் மூலமாக சுத்த சன்மார்க்கம் ஒன்றே உலகம் எல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டிய மார்க்கமாகிவிடும். இதனால் உலகமக்களின் வாழ்வு தழைத்து ஓங்கும்.

**உலகப் பொதுநெறி**

உலகம் இதுவரையில் கண்ட நெறிகள் பலவாகும். இவற்றில் தெய்விக வாழ்வுக்கு உரிய கடவுள் ஆன்ம உண்மையை அடிப்படையாய் வைத்து அதன்படி உலக வாழ்வை அமைத்துக்கொள்ள உருவாக்கப்பட்ட சமய மத நெறிகளைச் சன்மார்க்கம் என்றார்கள்.

வெறும் உடல் இன்ப வாழ்வை மட்டும் அடிப்படையாக வைத்து சமூக, பொருளாதார, அரசியல் சீர்திருத்த முறையில் அமைக்கப்பட்ட நெறிகளும் பல இருக்கின்றன.

இவைகளுக்கெல்லாம் மேலாக, உலக ஒருமைப்பாடு, அகில உலக சகோதரத்துவம், சமவுரிமை முதலியவற்றை வலியுறுத்தும் பொதுக்கொள்கை கொண்ட நெறி முறைகளும் பல இருக்கின்றன.

இவைபோக கலாச்சாரம், தத்துவம், கலை அறிவியல் விளக்கம், யோகாசனம், தியானம், பக்திநெறி ஆகியவற்றை வளர்க்கும் சங்கங்கள், பல தோன்றிருக்கின்றன.

இப்படியெல்லாம் மக்கள் சமுதாயம் பலவகையில் பல வழிகளில் முன்னேறுவதற்குத் துடித்துக்கொண்டிருக்கிறது.

எல்லோருக்கும் பொதுவாக இருக்கும் நோக்கம்தான் என்ன? வாழ்வில் சுகமும், அமைதியும், இன்பமும் பெற வேண்டும் என்பதுதானே!

உலகம் பலவிதம் என்பது உண்மை. அது எந்தக் காலமும் அப்படித்தான் இருக்கும். ஒரே மாதிரி இருக்காது.

பலநெறிகளில் செல்லும் உலகை ஒரே நெறியில் செல்லும்படிச் செய்ய முடியுமா? முடியாது என்றுதான் பலரும்

கருதுவார்கள். இது அவரவர் மனோ எல்லை வரை உண்மை யாக இருக்கலாம். பொதுவாக மனத்தின் அனுபவமும் அப்படித்தான் இருக்கிறது.

ஆனால் உலகில் இப்போது இருக்கும் நெறிகளின் மூலமாக மக்களுக்கு ஏதாவது நன்மைகள் ஏற்பட்டிருக்கிறதா? அவர் களுக்கு நிலையான இன்ப வாழ்வு ஏற்பட்டிருக்கிறதா? ஏற்படவில்லை; ஏற்படவும் முடியாது.

கடவுள் திருவுள்ளமோ மக்களுக்கு அமைதியும்; ஆனந்த மும், நிறைவாழ்வும் வழங்கத் திட்டங்களை வகுத்து வைத் திருக்கிறது. இந்தப் பேருலகத்து உயிர்களையும் பொருள் களையும் அளவில்லாத நெடுங்காலமாகத் தடைபடாது நடத்திக்கொண்டு வருகிறது.

முடிவற்ற பலவகை வேறுபாடுகளுடன் கூடிய பிரபஞ்சத் தில் ஊடுருவி இருப்பது ஒரே பரம்பொருள்தான். அதன் போக்கில் நாமும் சுத்த சன்மார்க்கத்தில் இருந்து உலகியல் வாழ்க்கையை நடத்தவேண்டும். அப்போதுதான் வாழ்வில் உயர்ந்த குறிக்கோளைப் பெறலாம்.

அருள்மார்க்கம் உலகில் அறிந்து கொள்ளப்படவில்லை. அதனால்தான் எந்த வகையில், எவ்வளவு முயன்றும், மக்களை நல்வழிப்படுத்த முடியவில்லை, மக்களும் புறவாழ்வில் விருப்பு வெறுப்புடன் பலநெறிகளிலும் சென்று சென்று அவத்தைப் பட்டுக்கொண்டு இருக்கிறார்கள்.

இவற்றையெல்லாம் மாற்றவும், மனித உள்ளத்தில் அருள் உண்மையைப் புகட்டி அவர்களை அருள் வழியில் நடத்த வும், மெய் இன்ப வாழ்வை அவர்களுக்கு அளிக்கவும் அருட் பெரும் கடவுளே திருவருட்பிரகாச வள்ளல் உருவத்தில் தோன்றி இருக்கிறார். படிப்படியாக மக்களைச் செயல்படுத்திக் கொண்டு இருக்கிறார். இனிமேல் மக்களிடம் கடவுள் உண்மை வெளிப்பட்டு அவர்கள் நல்வாழ்வைப் பெறுவார்கள்.

உலகில் பல இடங்களில் இருந்தும், பல செயல்களைப் புரிந்தும், பலவிதமான முறையில் வாழ்க்கையை நடத்தியும்

வரும் எல்லோரும் இன்பமாக வாழவேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன்தான் வாழ்ந்து வருகிறுர்கள்.

ஆனுல் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு வகையில் நிலேயற்ற இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவித்துக் கொண்டு வாழ்கிறுர்கள். முடிவில் மடிந்து போகிறுர்கள்.

இவ்வாறு உலக மக்கள் வீண்போகாமல், உண்மை இன்பம் இன்னதென்று அறிந்து அதை அடைவதற்காக அவர்களுக்கு உதவ வந்திருக்கிறது சுத்த சன்மார்க்கம்.

இது மெய் அன்பாலும், மெய் அறிவாலும், மெய் இன்பம் காண வழி செய்வதற்கு வந்திருக்கிறது. வேறு எந்த நெறியுடனும் இந்த நெறியை ஒப்பிட முடியாது.

ஆகையால் எல்லாரும், எவ்வகை வழியில் ஈடுபட்டிருப் போரும் நல்ல இன்ப வாழ்வைக் கருதி, அருள் ஒளி நெறியைப் பின்பற்றி முன்னேற வேண்டுகிறுேம்.

**சுத்த நெறியின் உரிமை**

சமயங்கள், மதங்கள், தம்மைச் சார்ந்த பிரிவினருக்கு முதலில் ஒரு முத்திரையைக் குத்திவிடுகிறது. அதைப் பெற்ற வர்கள் மட்டுமே அது அதற்கு உரியவர்களாக ஏற்றுக் கொள்ளப்படுகிறுர்கள்.

உதாரணமாக சிவதீட்சை பெற்றவனே சைவன். ஞானஸ் நானம் பெற்றவனே கிறிஸ்தவன். உபநயனமும் பிரம்மோப தேசமும் பெற்றவனே பிராமணன் என்று அவரவர்கள் கூட்டத்தினரால் சொல்லப்படுகின்றனர்.

ஒருவன் பிறவியால் மட்டும் அந்த அந்த இனத்தவனுக இருந்தாலும், அந்த இனத்துக்கு உரிய முத்திரையைப் பெற்ற பின்னர்தான் உண்மையில் அந்த இனத்துக்கு உரிய வனுக மதிக்கப்படுகிறுன்.

இது ஒரு புறச்சடங்கு. ஆசாரக் கோட்பாட்டின் நடை முறை. அவ்வளவுதான். இவை எல்லாம் அருளியல் நெறிக்கு எப்படிப் பொருந்தும்? சிறிதும் பொருந்தாது.

ஆன்மநேய ஒருமைப்பாட்டு உரிமைச் சகோதரர்கள் எல்லோருமே சுத்த சன்மார்க்கத்துக்கு உரியவர்கள்.

அவர்கள் பெறவேண்டியது வெற்றுச்சடங்கு ஆசாரமல்ல.

ஜீவதயா ஒழுக்கம், புலனடக்கம், பணிவன்போடு பரோபகாரச் செயலில் ஈடுபட்டிருத்தல் முதலிய உணர்வு களுடன் வாழ்பவர்கள் எல்லோருமே சன்மார்க்கிகள்தான்.

சன்மார்க்கிகள் பெறவேண்டிய நிலை என்ன? சத்விசார முறையில் தயாவுணர்வுடன் புருவத்துக்கு நேரே சிரநடுவில் இருக்கும் ஒளியைப் பாவித்துப் பாவித்து, அவ் ஒளியே தானாய் இருக்கும் உண்மையை உணர்ந்து, அதில் ஒன்றி இருப்பது தான். உலகில் யார் வேண்டுமானாலும் இந்த நெறியைக் கடைப்பிடித்துச் சன்மார்க்கி ஆகலாம்.

இந்த நெறியாளர் தம் அகக்கடவுளை உணர்ந்து தயா வாழ்வுடன் வாழ்வதால் அவர்களிடம் உள்ஒளி பெருகி, அவர்கள் உடம்பை அருள்ஒளி உடம்பாக மாற்றிவிடுகிறது. இது வள்ளல்பெருமான் அனுபவம்.

அகநிலையில் ஒன்றி அருள்ஒளி வடிவில் இருக்கப் பழகாத வர்கள் உண்மையில் சன்மார்க்கிகள் அல்லர். பல சன்மார்க்க சங்கங்களில் உறுப்பினர்கள் என்றும், செயலாளர்கள் என்றும், தலைவர்கள் என்றும் சொல்லிக்கொள்ளுகிறவர்கள் எல்லாம் சுத்த சன்மார்க்கிகள் அல்லர்.

சன்மார்க்க உண்மையை அறியாமல் நாட்டில் நூற்றுக் கணக்கான சன்மார்க்க சங்கங்கள் தோன்றி இருக்கின்றன. பல்லாயிரக்கணக்கான சன்மார்க்க அன்பர்கள் ஆங்காங்கு கூடி சன்மார்க்க விழா கொண்டாடுகிறார்கள். பலர் கூடி வடலூரில் பெருவிழாக்கள் எடுக்கிறார்கள்.

இவர்கள் எல்லாம் இறைவனின் உண்மையை உள்ளபடி புரிந்துகொள்ளவில்லை. அதனால் இவர்கள் பெரும்பயனும் அடையவில்லை. இவர்கள் முயற்சிகள் எல்லாம் விழலுக்கு இறைத்த நீராகவே வீணாகிப்போகின்றன.



**சன்மார்க்கக் கொடி**

பலவகையான விழாக்களிலும், தேசிய கொண்டாட்டங்களிலும் அவற்றின் குறிக்கோளைக் காட்டுவதற்காக அது அதற்கு உரிய கொடியை ஏற்றிப் பறக்கவிடுகிறுர்கள்.

வெளியில் பறக்கும் கொடியைப் பார்த்ததுமே அது என்ன விழா, எந்த லட்சியத்தை உடைய கூட்டம் நடக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

தெய்வ ஆலயங்களில் பெருவிழா தொடங்கும்போது முதலில் கொடியேற்று விழாதான் நடைபெறும். சிவ ஆலயங்களில் ரிஷபக் கொடியும், திருமால் கோயில்களில் கருடக் கொடியும், முருகன் சந்நிதியில் சேவற்கொடியும், பிற சமய மத பீடங்களின் கொடி மரங்களில் அவற்றுக்கு உரிய கொடிகளையும் ஏற்றுகின்றனர்.

புறத்தில் காணுகிற கொடிகளுக்கும், அகத்துள் உறையும் தெய்வசக்தியைக் குறிக்கும் வாகனங்களுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. இரண்டும் ஒன்ருகவோ அல்லது சார்பு உடையதாகவோ இருக்கும்.

சிவனுக்கு ரிஷபம் வாகனம். அதுவே கொடியும் ஆகும். திருமாலுக்குப் பெரிய திருவடியாகிய கருடனையோ சிறிய திருவடியாகிய அனுமனையோ வாகனமாயும் கொடியாயும் வைத்திருக்கிறுர்கள். குமரனுக்கு மயில் வாகனம். கோழிக் கொடி. இவை இரண்டும் ஒன்றில் இருந்தே வந்தவை.

சமயக் கொடிகளையும், அவை ஏன் தோன்றின என்பதையும் அவற்றின் குறிக்கோள் என்ன என்பதையும் ஆராய்வது நம் நோக்கம் அல்ல.

சன்மார்க்கக் கொடியை விளக்குவதே நம் நோக்கம்.

சத்திய ஞானசபையின் அகத்தையும், புறத்தையும், அதன் மெய்ப் பொருள் விளக்கத்தையும் தெரிந்து கொள்வதற்கு சன்மார்க்கக் கொடி உதவுகிறது.

இந்த சன்மார்க்கக் கொடியை முதல் முதலில் வள்ளல் பெருமான் 1873ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 22ஆம் நாள் (ஸ்ரீமுக வருடம், ஐப்பசித் திங்கள் ஏழாம் தேதி) புதன்கிழமை காலை எட்டு மணிக்கு, மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திருமாளிகையின் முன்னல் ஏற்றிவைத்தார்.

அப்போது அவர் நிகழ்த்திய பேருரைதான் மகா உப தேசம். இது திருஅருட்பா வசனப் பகுதியில் வெளியாகி இருக்கிறது. இந்தப் பேருரையில்தான் வள்ளலார் சுத்த சன் மார்க்க உண்மையை வெளியிட்டிருக்கிறுர். இனிமேல் அருட் பெருஞ்ஜோதி ஆண்டவர் உண்மையை உலகம் அறிந்து கொள்ளும் என்றும் தெரிவித்திருக்கிறுர்.

சன்மார்க்கக் கொடி வெள்ளை நிறமும் மஞ்சள் நிறமும் உடையது. கொடியில் முக்கால் பங்கு வெள்ளை நிறம், கால் பங்கு மஞ்சள் நிறம். கொடியின் மேல் பகுதியை மஞ்சளா கவும், அடிப்பகுதியை வெள்ளையாகவும் வைத்துக் கொடி மரத்தில் பறக்கவிட வேண்டும். சன்மார்க்கக்கொடி அருட் பெருஞ்ஜோதி ஆண்டவருக்கே ஒரு விளக்கம்.

அருட்பெருஞ்ஜோதி!

அருட்பெருஞ்ஜோதி!

தனிப்பெருங்கருணை!

அருட்பெருஞ்ஜோதி!

என்ற மகாமந்திரத்தையே கொடியாக உருவாக்கி அதை ஏற்றிப் பறக்க விட்டிருக்கிறுர் வள்ளல் பெருமான்.

1873 ஆம் ஆண்டு. கார்த்திகை மாதம். புனர்ப்பூச நாள். அன்றைய தினம், தாம் அருள் உருவேற்றி வழிபாடு நடத்தி வந்த தீபத்தைத் தம் அறைக்கு வெளியில் வைத்தார்.

''இதனைத் தடைபடாது ஆராதியுங்கள். ஆண்டவர் இப்போது இந்த தீப முன்னிலையில் விளங்குகிறுர். அதனுல் உங்களுடைய காலத்தை வீணில் கழிக்காமல்,

நினைந்துநினைந்து உணர்ந்துஉணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந்து அன்பே

நிறைந்து நிறைந்து ஊற்றெழுங் கண்ணீரதனல் உடம்பு
நனைந்துநனைந்து அருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே என்உரிமை நாயகனே என்று
வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மின்உல கியலீர்

மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்!
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம்சொல் கின்றேன்
''பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே,

என்னும் இருபத்தெட்டு பாடல்கள் அடங்கிய 'மரணமிலாப் பெரு வாழ்வு' என்னும் பதிகத்தில் இருப்பதுபோல் தெய்வ பாவனையை இத்தீபத்தில் செய்யுங்கள்'' என்று மக்களுக்குக் கட்டளை இட்டார்.

இந்த அருள் விளக்குதான் மேட்டுக்குப்பத்தில் இன்றும் எரிந்துகொண்டு இருக்கிறது. இரவு பகல் இருபத்து நாலு மணி நேரமும் இடைவிடாமல் எரிந்துகொண்டிருக்கிறது. சுத்த சன்மார்க்கிகளுக்கு தெய்வ அருள் நலத்தை வாரி வழங்கிக் கொண்டிருக்கிறது.

அந்த அருள் ஒளி தீபம் இருக்கும் இடம் இன்று சிறு ஞான சபையாகவே இருக்கிறது. இந்த அருள் விளக்கு ஞான சபையின் சந்நிதியில் சன்மார்க்கக் கொடியை பறக்கவிட வேண்டும். அந்த சன்மார்க்கக் கொடி அருட்பெருஞ்ஜோதி உண்மையை உலகுக்கு உணர்த்திக்கொண்டே இருக்கும்.

கார்த்திகைத் திங்கள் புனர்ப்பூச நாளில் தாம் வழிபட்ட அருள் ஒளி தீபத்தைத் தம் அறையில் இருந்து எடுத்து வெளியில்வைத்து வணங்கச் சொன்னர் அல்லவா வள்ளலார்? 1874ஆம் ஆண்டு. தை மாதம். பத்தொன்பதாம் நாள். அதே புனர்ப்பூச வேளையில் வள்ளல் பெருமான் தம் அறைக்குள் நுழைந்து திருக்காப்பிட்டுக்கொண்டார். தம் அறைக் கதவை மூடி விட்டதைத்தான் அவர் திருக்காப்பிட்டுக் கொண்டதாகச் சொல்கிறோம்.

''சுத்த பிரணவ ஞான தேகத்துடன் தோன்றுவோம்'' என்று சொல்லிவிட்டுத் தம் அறைக்குள் சென்று கதவை அடைத்துக் கொண்டுவிட்டார்.

திருவருளால் முத்தேக சித்தியைப் பெற்றிருக்கிறார்.

வெள்ளையும் மஞ்சளுமான சன்மார்க்கக் கொடி கடவுள் உண்மை முழுவதையும் அனுபவ பூர்வமாகக் காட்டி முத்தேக சித்தியையும் விளக்கக்கூடியவை.

அருட்பெருஞ் ஜோதியாய் ஆதிமுதல் இருந்து வருகிறார் ஆண்டவர். இப்போது நம்மில் தனிப் பெருங்கருணையுடன் தோன்றி இருக்கிறார். நம் சிரநடு சிற்றம்பலத்தில் விளங்கு கிறார். இதை உணர்த்துவது அருட்பெருஞ் ஜோதி மகாமந் திரத்தின் ஆரம்பத்தில் இருக்கும் '' அருட் பெருஞ் ஜோதி '' யும் அடுத்து இருக்கும் '' அருட்பெருஞ் ஜோதி தனிப் பெருங் கருணை'' என்ற மந்திரப் பகுதியுமாகும்.

மகாமந்திரத்தின் முடிவில் இருக்கிற '' அருட்பெருஞ் ஜோதி ''நம் வடிவமே அருட்பெருஞ் ஜோதித் திருவுருவாகி ஆதிமனித தோற்றத்தோடு முத்தேக சித்திபெற்று நித்திய இன்பத்துடன் இருப்பதைக் குறிப்பிடுகிறது.

சன்மார்க்கக் கொடியின் அடியில் இருக்கும் அதன் முக் கால் பங்கு வெள்ளை நிறமானது, மூன்று அருட்பெருஞ் ஜோதி மந்திரங்களைக் குறிப்பது. கொடியின் மேலே இருக்கும் மஞ் சள் நிறம் தனிப்பெருங்கருணையைக் காட்டுவது.

எனவே சன்மார்க்கக்கொடியையே அருட்பெருஞ்ஜோதிக் கொடி என்றும் சொல்லலாம். அருட்பெருஞ் ஜோதிக் கொடி யில் இருக்கும் முக்கால் பங்கு வெள்ளைப்பகுதி மூன்று அருட் பெருஞ்ஜோதி மந்திரங்களைக் குறிப்பதுடன் மனிதன் பெற வேண்டிய முத்தேக சித்திகளையும் உணர்த்துகிறது.

மேல் பகுதியில் இருக்கும் கால்பங்கு மஞ்சள் நிறப்பகுதி தனிப்பெருங்கருணையைக் காட்டுவதுடன் தனிப்பெருங் கருணை கொண்டு வாழும் இறைவனே மனிதனில் தன் நிறை வடிவத்துடன் இருக்கிறார் என்பதையும் விளக்குவது.

அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரத்தின் முழு அனுபவ உண்மையையும் விளக்குவதுதான் அருட்பெருஞ்ஜோதிக் கொடி; சன்மார்க்கக் கொடி.

அருட்பெருஞ்ஜோதி மந்திரம் ஆறு தனி உயிர் மெய் எழுத்துக்களுடன் கூடியது. மகாமந்திரத்தில் அருட்பெருஞ் ஜோதி மந்திரம் மூன்று முறை வருகிறது. மூன்று அருட் பெருஞ்ஜோதி மந்திரத்திலும் மூவாறு பதினெட்டு உயிர்மெய் எழுத்துக்கள் இருக்கின்றன, இத்துடன் தனிப் பெருங்கருணை என்ற மந்திரத் தொடரில் இருக்கும் ஏழு உயிர்மெய் எழுத் துக்களையும் கூட்டினுல் இருபத்தைந்து எழுத்துக்கள் ஆகின் றன. இருபத்தைந்து என்ற எண்ணைத் தமிழில் எழுதுவ தானுல் '' உரு '' என்று எழுத வேண்டும். '' உரு '' என்ப தற்கு உருவம் என்றும் பொருள் உண்டல்லவா ?

எனவே இந்த மந்திர எழுத்துக்களின் கூட்டு எண்ணிக்கை ''உரு''வாகி, தெய்வத்தின் திருஉருவமாகவே காட்சி அளிக் கிறது. அருட்பெருஞ் ஜோதி மகாமந்திரமே இறைவனின் உரு வத்தைக் காட்ட வந்த மனிதனின் உருவம்தான்.

வானத்தில் தோன்றுகிற முழுமதியிலும் முக்கால் பாகம் வெண்மையும், கால்பாகம் பொன்மையும் இருக்கின்றன. ஆண்டவரின் உண்மையையும் அவரை வெளிப்பட உணர்த்த வந்த சுத்த சன்மார்க்கக் கொடியின் உண்மையையும் முழு மதியும் நமக்கு உணர்த்துகிறது.

சன்மார்க்கக் கொடியின் உண்மை, மெய்ஞ்ஞான பரம் பொருள் தன்மையின் உண்மையாயும் இருக்கிறது. அறிவின்ப மயமாயும் இருக்கிறது.

சன்மார்க்கக் கொடியான அருட்பெருஞ் ஜோதிக் கொடி கடவுளையே காட்டும் கொடியாக இருக்கிறது. கடவுள் உண் மையையே தன் உண்மையாகவும் கொண்டிருக்கிறது. கடவுள் உருவைக் காட்ட வந்த சன்மார்க்கக் கொடி மனித உருவத் தின் ரகசியத்தையும் விளக்குகிறது.

மனித உருவத் தோற்றத்திற்கு ஆதாரம் இறை ஒளியின் சிற்றுருவாகிய ஆன்மாவே. அந்த அருள் ஒளியான ஆன்மாவை உள்வைத்தே நம் உடல் விரிந்திருக்கிறது.

நமது உடம்பு, கன்ம தூலதேகம். இது ஆணவ மாசுடையது. அருள்ஞான விசாரத்தில் ஆழ்ந்து எழும் போது நாம் சுத்த ஆன்ம சொரூபியாய் இருப்பதை அறிகிறோம். திருவருளே உண்மையில் நாமாக இருக்கிறது. நம்மிடம் இருக்கும் ஆணவத்தை ஒழித்து விடுவதன்மூலமாகத்தான் இந்த உண்மையை அறிந்து கொள்கிறோம்.

நான் என்பது ஒருமை. நாம் என்பது பன்மை. கடவுளும் நான் என்ற ஆன்மாவும் ஒன்றி இருப்பதால்தான் நாம் ஆகிறோம். கடவுள் நம்மை விட்டுத் தனியே இருக்கிறார் என்று சொன்னால் நாம் என்ற சொல்லுக்குப் பொருள் இல்லாமல் போய்விடும். அதாவது நமது உடல் கடவுளைப் பிரிந்த உயிர் அற்ற வெற்று உடலாகிவிடும்; சத்துப்போன, செத்துப் போன உடலாகிவிடும்.

நான் என்ற ஆன்மா கடவுளுடன் ஒன்றி அதை அனுபவித்துக் கொண்டு இருக்கும்போது நான் மறைந்து விடுகிறது.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரே நம் அகத்தில் பரம் பொருளாகவும் இருக்கிறார். புறத்தில் உடலாகவும் உருவாகிக் காட்சி தருகிறார்.

இந்த உடலே சன்மார்க்கக் கொடி ஆகி புற அடையாளச் சின்னமாகக் கொடி மரத்தில் ஆடிப்பறக்கிறது.

கொடிக்கு மனித உடல் என்று ஒரு பொருள் இருப்பது போலவே காகம் என்ற ஒரு பொருளும் உண்டு.

இந்தக் காகம் என்ற சொல்லைக் கொண்டு ஞான சித்தர்கள் தங்கள் ஞான யோக அனுபவத்தைப் பரிபாஷையில் சொல்லி வைத்திருக்கிறார்கள். கருங்காக்கை கங்கையில் மூழ்கி வெள்ளை அன்னமாகிறது. அதுவே மேரு மலையைச் சாரும்போது பொன் மயமாகிறது.

தூலதுக்கதேகம் கருங்காகம். இது சத்விசாரஞானத்தால் புறத்தேக நிலையைக் கடக்கிறது. தன் உள்நோக்கிச் செல்கிறது. தான் ஆன்ம வடிவினனே என்பதைத் தெரிந்து கொள்ளுகிறது. அப்போது கறுப்புக்காகம் வெள்ளைஅன்னம் ஆகிவிடுகிறது. கறுப்புக் கொடி வெள்ளைக் கொடி ஆகி விடுகிறது. வெள்ளைக் கொடி அன்புக்கும் அமைதிக்கும் சமாதானத்துக்கும் அடையாளம் அல்லவா?

வெள்ளை அன்னமான கருங்காகம் பொன் மேருவான ஜோதி மலையை அடைகிறது. ஜோதி மலையை அடைந்ததும் காகம் பொன் நிறம் பெற்று விடுகிறது.

இது மனிதன் தானே முயன்று திருவருளினுல் பொன்னுர் மேனிக் கடவுளாக உயரும் உண்மையை உணர்த்துவது.

மேட்டுக்குப்பம் சித்தி வளாகத் திருமாளிகையின் முன்னுல் சன்மார்க்கக் கொடியைக் கட்டி வள்ளலார் கடவுள் உண்மையை வெளியிட்டார். அன்றைய மக்கள் பக்குவக் குறைவால் வள்ளல் பெருமான் வெளியிட்ட கடவுள் உண்மையை அறிந்து பயன்பெற முடியாமல் போய் விட்டனர்.

அந்த விளக்கம் இப்போது ஞானசபையின் அருட்பெருஞ் ஜோதி மகா மந்திரத்தைக் கோடி முறை ஓதி உணர்ந்த போது மக்களுக்குக் கிடைத்திருக்கிறது. மகா மந்திரம் கோடி முறை மக்களால் ஓதி உணரப்பட்டவுடன் சத்திய ஞான சபையில் காட்டிய அருட்பெருஞ் ஜோதி நிறை தரிசனம் பலருக்குத் தங்கள் உள்ளும் புறமும் கடவுள் உண்மையைக் காணும் நிலையை ஏற்படுத்தி இருக்கிறது.

எழுவார் மேடையில் ஏறி நிற்கும் மனம், புறத்தும் அகத்தும் நிரம்பியுள்ள கடவுள் காட்சி உண்மையை உணர்ந்து உணர்ந்து அனுபவிக்கிறது.

இந்த மேடையின் பக்கத்தில் சன்மார்க்கக் கொடிக் கம்பம் இருக்கிறது. அதில் பறக்கும் சன்மார்க்கக் கொடி அருட்பெருஞ்ஜோதியை விளக்குவதோடு ஒருவர் பெற வேண்டிய

முத்தேக சித்தியையும் நிலையான, இன்ப வாழ்வையும் அவருக்கு உணர்த்துகிறது.

அருட்பெருஞ்ஜோதி உண்மையை எல்லோரும் தெரிந்து கொள்வதற்கு வசதியாக ஞானசபையின் தென்கிழக்குப் பகுதியில் இருக்கும்கொடி மரத்தில் சன்மார்க்கக் கொடியை ஏற்றிப் பறக்க விடவேண்டும். அதன் விளக்கத்தையும் அதன் அடியில் எழுதி வைக்கவேண்டும்.

ஆன்மாவும் உடலும் சேர்ந்து மனிதனாகிறான். அருள் ஒளிக்கடவுளின் அகம் வெண்ணிறமாகவும் புறம் பொன் னிறமாகவும் இருக்கிறது. அதனால் வெள்ளையையும் மஞ்சளை யும் கொண்ட கொடியைச்சன்மார்க்கக் கொடியாகக்கொடுத் திருக்கிறார் வள்ளலார்.

நமக்கு முத்தேக சித்தியை வழங்கி நம்மை நித்திய இன்பத்தில் விளங்கச் செய்யும் தத்துவமும் இந்தக் கொடியில் முக்காலும், காலும் ஆக இருக்கிறது. வெள்ளை முக்கால் பகுதியும், மஞ்சள் கால் பகுதியுமாக இருக்கிறது.

முக்கால் பங்கான வெள்ளைப் பகுதியைக் கீழேயும் கால் பங்கான மஞ்சள் பகுதியை மேலேயும் கொண்ட கொடியே முத்தேக சித்தியைக் காட்டும் அருட்பெருட்ஜோதிக் கொடி.

இதற்குச் சான்று அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரமே.

''அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி''

இந்த மகாமந்திரத்தில் மூன்று அருட்பெருஞ்ஜோதியும், ஒரு தனிப்பெருங்கருணையும் இருக்கின்றன. இதை ஆழ்ந்து கவனித்தால் முத்தேக சித்தி உண்மை விளங்கும்.

இறைவனின் அகம் தனிப்பெருங்கருணையுடனும், புறம் அருட்பெருஞ்ஜோதியாகவும் இருப்பதை, மூன்று அருட் பெருஞ்ஜோதி மந்திரத்துக்கு உள்ளே தனிப்பெருங்கருணை என்ற சொற்றொடரை வைத்து மகாமந்திரம் அமைத்திருப் பதைப் பார்த்தே தெரிந்துகொள்ளலாம்.

உள்ளொளியை உள்ளே கண்டு நாமே அதுவாக இருந்து புறத்தில் பரோபகாரப் பணியைப் புரிந்து வருவதுதான் சன்மார்க்கியின் வாழ்க்கையாக இருக்கவேண்டும்.

கடவுள் உண்மையைப் புரிந்துகொள்ளாமலும், ஜீவதயா ஒழுக்கத்தை ஏற்றுக்கொள்ளாமலும் தம்மைச் சன்மார்க்கத் தொண்டர்கள் என்று சொல்லிக்கொள்வதில் அர்த்தமில்லை. வீட்டில் ஒரு தகர விளக்கையும், கையில் ஒரு சன்மார்க்கக் கொடியையும் ஏந்திக்கொண்டுவிட்டதால் மட்டும் ஒருவன் சன்மார்க்கி ஆகிவிட முடியாது.

தாம் ஒரு சன்மார்க்கி என்பதை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல், உள்ளத்தில் அருட்பெருஞ் ஜோதியையும், வெளியில் தயவுப் பணியையும் ஏற்று விருப்பு வெறுப்பு இல்லாமல் உயிர்களுக்குத் தொண்டு செய்து கொண்டிருக்க வேண்டும் இதுதான் சன்மார்க்கம்.

அருட்பெருஞ்ஜோதி உண்மை, மக்கள் அகவெளியில் இருந்து தோன்றவேண்டும்: அப்போதுதான் அவர்கள் வாழ்வில் கருணைச்செயல் வெளிப்படும். இந்த நிலையில் எல்லா ருடைய உள்ளத்திலும் விளக்கும் கொடியும் நித்தியமாய் விளங்கிச் செயல்படும்.

சென்ற 19-6-77 அன்று ஆயிரக்கணக்கான மக்கள் அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரத்தைக் கோடி முறை ஓதி உணர்ந்தார்கள். அதன் பிறகு ஜோதி தரிசனமும் காட்டப் பட்டது. சன்மார்க்க அன்பர்களின் அகவானிலும் ஜகஜ் ஜோதியாகக் கடவுள் உண்மை உதயமாகியது.

அந்த நாள் பூசநாள். பூசம் என்பது நமது சிரநடுவில் இருக்கும் காற்குளம். காற்குளம் என்பது பூச நட்சத் திரத்தைக் குறிக்கும். இந்தப் புனிதமான பூசநாளில் ஞான சபைத் திருப்பணி நிறைவு விழாவும், ஜோதி தரிசனமும் கடவுள் உண்மையை உலகத்துக்கு உணர்த்தி இருக்கிறது.

அருட்பெருஞ்ஜோதி பலகோடி கோடி அகிலமெல்லாம்
அருட்பெரும் மந்திர ரூபாதி ரூப அனகநிறை

அருட்பேறு மாந்தர் பரவி அழியா தகமகிழ்ந்து
அருட்பெரு வாழ்வேற்க நம்காற் குளத்தின்
றருள்கின்றதே!

நமது சிரநடுவில் இருக்கும் காற்குளமாகிய பூசஜோதியே அருட்பெருஞ்ஜோதி மகாமந்திர வடிவமாக எழுந்து ஒலித்தது. தன் அருள் வேண்டி வருபவர்க்கெல்லாம் அனக நிறைவு பெற்ற அதிரூப வாழ்வு வழங்க இன்றுபோல் என்றும் கருணை பாலிக்கத் தயாராக இருக்கிறது. அதிரூபம் என்பது ஆண்டவனின் திருஉருவம். அருட்பெருஞ்ஜோதி என்ற மந்திரத்தின் முதல் எழுத்தாகிய 'அ' என்ற எழுத்தையும் கடைசி எழுத்தாகிய 'தி' என்ற எழுத்தையும் சேர்த்தால் 'அதி' என்ற உருவம் கிடைக்கும். இதுதான் அருட்பெருஞ் ஜோதிக் கடவுளின் உண்மை வடிவம். இறைவனின் திரு உருவமாகிய அதிரூப வடிவத்தை நமக்கு வழங்கத் தயாராக இருக்கிறது அருட்பெருஞ்ஜோதி.

அகத்தில் இருந்து பரவிக்கொண்டிருக்கும் அருட்பெருஞ் ஜோதி உண்மை கோடிக்கணக்கான உலக மக்களுக்கும் இன்ப வாழ்வளிக்க எழுந்து இருக்கிறது.

**சன்மார்க்க சங்கத்தார்க்குப்**
**பணிவான வேண்டுகோள்:**

சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியேன் உமது
தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடும் கேட்பீர்!
என்மார்க்கத்(து) எனைநுமக்குள் ஒருவனெனக் கொள்வீர்!
எல்லாஞ்செய் வல்ல நம(து) இறைவனையே தொழுவீர்!
புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர்! பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்கும் சுத்த சிவம் ஒன்றே
தன்னாணை என்ஆணை சார்ந்தறிமின் ஈண்டே!

இந்தப் பாடலில் வள்ளல் பெருமான் சொல்லும் ''சுத்த சிவம்'' அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர்தான். அது பூரண மெய்ச் சுகம் ஆனது. இறை உண்மைகொண்ட இன்ப உருவம் ஆனது. அதன் நெறியும்கூட அப்படியே இறை

இன்பத்தை மக்களுக்கு வழங்கிக்கொண்டே இருப்பது. இவ்வாறு பூரண மெய்ச்சுகமாய்ச் சன்மார்க்கமாய் விளங்குவது சுத்த சிவம் ஒன்றே.

அருட்பெருஞ் ஜோதியோடு ஒன்றி அதுவாகி நின்று ''தன் ஆணை, என் ஆணை சார்ந்திடுமின் ஈண்டே!'' என்று சன்மார்க்க சங்கத்தாரை அன்போடும் பணிவோடும் அழைக்கிறார் வள்ளல் பெருமான்.

தன்னைப் பிறர் புகழவோ, தான் உயர்நிலை அடைந்து விட்டதாக மதித்துத் தன்னைப் போற்றவோ வேண்டுமென்ற அகங்கார போதத்தோடு வள்ளலார் சன்மார்க்க சங்கத்தார்க்கு ஆணை இடவில்லை. நட்புறவோடும் மிகப் பணிவன்புடனும் வேண்டிக்கொள்கிறார்.

''சிற்றடியேன் உமது தாள் வணங்கிச் சாற்றுகின்றேன் தயவினொடும் கேட்பீர்! எனையடுத்துள்ள நீவிர், என்னை உமக்குள் ஒருவன் எனக்கொள்வீர்! எல்லாம் செய்யவல்ல இறைவனைத் தொழுது ஏத்தி சுகானந்தம் பெறுவீர்களாக! மற்ற சிறு நெறியாளர்களைப்போல ஏதேதோ சொல்லிக் கொண்டு மயங்கி வீண்போகாதீர்கள். இங்கு வந்து என்னை அடைந்து கடவுள் உண்மையை உள்ளபடி அறிந்து வாழ்வீர்களாக!'' என்று தாழ்மையோடு மக்களுக்கு விண்ணப்பித்துக் கொள்கிறார் வள்ளல் பெருமான்.

இந்த அழைப்பும் விண்ணப்பமும் இடும் அருள் அடிகள் நம் உள்ளக் கோயிலில் இருந்தே எக்காலமும் நம்மை வரவேற்கிறார். என்றோ, எங்கேயோ இருந்து அவர் சொல்லிவிட்டு போகவில்லை என்பதை சன்மார்க்கத்தைச் சார்ந்தவர்கள் புரிந்துகொள்ள வேண்டும்.

வள்ளல் பெருமானின் அழைப்பும், ஆணையும் ஏதோ ஒரு குறிப்பிட்ட மக்கட் பிரிவினர்க்கு மட்டும்தான் என்று எண்ணிப் பேசாமல் இருந்துவிட வேண்டாம்.

அவர் யாரோ, நாம் யாரோ என்று வள்ளலாரை எண்ணி அவரை விட்டு விலகிச் சென்றுவிட வேண்டாம். அருள்ஞான

விசாரத்தால் நம் அகக்கடவுள்உண்மையில் ஒன்றி மற்றவர் களுக்குத் தெரியாமல் இருக்கிறார் வள்ளலார். வள்ளலாரின் துணை என்பது ஆண்டவரின் துணையேதான்.

நம் உள் இருக்கும் இறைவனை உணர்ந்து அவனோடு ஒன்றி இருப்பதுதான் சங்கம் சார்தல். அவ்வாறு இருந்து அருள் வாழ்வு வாழ்வதுதான் சன்மார்க்கத்தின் தன்மை.

தம் தனிப்பெருங்கருணையால், கடவுள் உலக உயிர்களை ஆள்கிறார். கடவுள் நெறியே சன்மார்க்கம்.

அருள் ஞானத்தால் கடவுள் உண்மையே நம் உண்மை என உணர்ந்துகொள்ள வேண்டும். நம் உள் இருக்கும் இறை வனுடன் ஒன்றி நாமே இறைவனாக இருக்கவேண்டும்.

இந்த அருள் வாழ்வு, கருணைவாழ்வு, தயா வாழ்வு வாழ் வதுதான் மனிதனுக்கு உரிய சுத்த சன்மார்க்கம்.

அருட்பெருஞ்ஜோதி நெறிதான் தம்முடைய நெறி என்றும் சன்மார்க்க நெறி என்றும் வள்ளல் பெருமான் சொல்கிறார். இறைவன் செய்கிற செயல்கள் எல்லாம் தம்முடைய செயல்களாகவும், தாம் செய்கிற செயல்கள் எல்லாம் இறைவன் செயல்களாகவும் வள்ளல் பெருமான் சொல்வது சுத்த சன்மார்க்கத்தின் உண்மையை நமக்குத் தெளிவாக்குவதற்காகவே சொன்னதுதான்.

**புதுநெறிகள்:**

சுத்த சன்மார்க்கமும் இல்லாமல், பழைய சமய நெறி களும் இல்லாமல், பல புது நெறிகள் உலகில் தோன்றிக் கொண்டும், மறைந்து கொண்டும் இருக்கின்றன.

புலன்களை அடக்கிக் கடுந்தவம் ஏற்று தனித்து வாழும் பழமையான துறவு மார்க்கம் இப்போது மறைந்து வருகிறது. துறவு மார்க்கம் அதை மேற்கொள்பவர்களுக்கோ, மக்க ளுக்கோ பெருநலத்தை உண்டாக்கவில்லை. அதனால் அது உலகத்தில் இருந்து மறைய ஆரம்பித்துவிட்டது.

துறவு பூணுமல் உலக வாழ்வில் இருந்துகொண்டே, உடலையும், உயிரையும், மனத்தையும் சிலவகைப் பயிற்சிக்கு உள்ளாக்குவதன் மூலமாகப் பல நன்மைகளை அடையலாம் என்று சொல்லிக்கொண்டு பலவகையான மார்க்கங்கள் தோன்றி இருக்கின்றன. அவை பக்தி மார்க்கம், யோக மார்க்கம், ஞான மார்க்கம், தியான மார்க்கம் என்ற பெயரில் உலகில் செயல்பட்டு வருகின்றன.

யோகாசனப் பயிற்சிக் கூடங்கள், பக்தி வழிபாட்டு இல்லங்கள், இறை பணி மன்றங்கள், மடங்கள் சங்கங்கள் என்று பல தோன்றி இருக்கின்றன.

தெய்வ நெறிக்கழகம் (Divine Life Society) பூரண யோகாஸ்ரமம் (Integaral Yoga Asharam) கடநிலைத்தியான முறை (Transcendental Meditation System) எனப் பல ஆசிரமங்களும், கழகங்களும், முறைகளும் இப்போது பல இடங்களில் தோன்றிப் பரவி இருக்கின்றன.

இவைகளால் நாகரிக வாழ்வில் சுகமாக இருந்துகொண்டே கடுமையான முயற்சியும், வெளி ஆர்ப்பாட்டமும் இல்லாமல் அசாதாரண சக்தி சித்திகளைப் பெற்று இன்பத்துடன் வாழலாம் என்று மக்கள் முயன்று வருகிறார்கள்.

இந்நெறிகளில் கடவுள் உண்மையைப் பற்றிய தெளிவும் இல்லை. கடவுள் தன்மையுடன் கூடிய தயவு வாழ்வு இல்லை. ஆகையால், ஆரம்பத்தில் ஏதோ இன்பம் காண்பதுபோலத் தோன்றினாலும், ஆயிரக்கணக்கான மக்கள் இந்த நெறிகளை நம்பிச் சென்றுகொண்டிருந்தாலும், முடிவில் இவர்கள் எல்லாம் எந்த நிலையான பயனும் அடையாமல் மறைந்து போவதையே காண்போம்.

எனவே இப்போது நெறிகளின் போக்கு திசை திருப்பப் படவேண்டும். எல்லா மக்களையும் சுத்த சன்மார்க்கத்தைப் பின்பற்றும்படிச் செய்யவேண்டும்.

உடல் இன்ப வாழ்வில் விருப்பு வெறுப்பு இல்லாமல் இருக்கவேண்டும். தயா உணர்வுடன் நல்ல முயற்சியை மேற்

கொள்ளவேண்டும். நம் உள் இருக்கும் உள் ஒளியைப் பற்றி அதனுடன் ஒன்றி நின்று, மக்களுக்கு அறிவு விளங்கும் செயல்களையே செய்து வரவேண்டும்.

தயா உணர்வுடன் எந்த இடத்திலும் எந்தச் சூழலிலும் சன்மார்க்கக் குறிக்கோளை மறவாது முன்னேக்கிச் சென்று கொண்டிருக்க வேண்டும்.

இதற்கு வேண்டியது சத்விசாரம். சத்விசாரம் என்ருல் சத்தான உள் ஒளியைப் பார்த்து அதனுடன் சார்ந்து நிற்பது.

விசாரம் என்ற சொல்லும் சத்விசாரம் என்ற சொற்ருெடரும் சன்மார்க்கத்தில் ஒரே உண்மையைத்தான் விளக்குகின்றன. சத்விசாரம் என்ற சொற்ருெடரில் இருக்கும்'சத்து' என்ற சொல்லும் விசாரம் என்ற சொல்லில் இருக்கும் 'வி' என்ற எழுத்தும் ஒரே பொருளைத்தான் குறிக்கின்றன. 'சத்து' என்ருலும் 'வி' என்ருலும் அருள் ஒளியைத்தான் காட்டிக் கொண்டிருக்கிறது.

'வி' என்பது வ்+இ என்று பிரியும். 'வி' என்பது அருளைக் குறிக்கும். 'இ' என்பது ஒளியைக் குறிக்கும். 'இ' உயிரெழுத்து வரிசையில் மூன்ருவது எழுத்து. உலகம், உயிர் இறைவன் என்ற வரிசையில் 'இ' இறைவனின் ஒளியைக் குறிக்கும். சத்தாகிய 'வி' என்ற அருள் 'இ' என்ற இறை ஒளியைச் சார்ந்து 'வி' ஆகி அருள்ஒளிஆவதே சத்விசாரம்.

இந்த நிலையில் இருந்து உலகியலை, அருளியலாக அமைத்துக்கொண்டு வாழ்வதே புதுநெறி.

திருவருளால் இந்தப் புதுநெறி மனிதனிடம் அவன் உள்ளத்திலும் புறத்திலும் தோன்றி வருகிறது.

உலகம் இந்தப் புதுநெறியை விரைவில் ஏற்றுக்கொண்டு எல்லா நலமும் பெற்று ஓங்குமாக.

# 8. அனக வாழ்வு

மரணமிலாப் பெருவாழ்வில் தழைத்து ஓங்கச் செய்வது அனக வாழ்வு. மனிதனுக்குக் கவலே, துன்பம், பயம், பிணி மூப்பு, மரணம் ஆகியவை அணுகாத பேரின்ப வாழ்வை நித்திய வாழ்வைத் தருவது அனகம்.

இப்படி ஒரு வாழ்வு முறை உண்டென்பதை மக்கள் அறியவில்லே. இதற்கென்று ஒரு வழி இருப்பதையும் அவர் கள் தெரிந்து கொள்ளவில்லே.

மனிதன் தனக்கு அடிக்கடி உண்டாகும் பயம், கவலே, வறுமை, பிணி, மனநோய் முதலியவற்றை பலவகையான சாதனைகளாலும், முயற்சிகளாலும், மணி மந்திர மருந்து முதலியவற்ருலும், பிற தந்திர முறைகளாலும் ஒருவாறு தடுத்து வந்தான். இவ்வளவு கவனமாக அவைகளேத் தடுத்து அவன் வாழ்ந்து வந்த போதிலும், அவனுல் மரணத்தை மட்டும் வெல்ல முடியவில்லே.

மனித வாழ்வில் அவனுடைய முயற்சிகள் எல்லாம் புறத் தில் இருந்தே செயல்பட்டன. அவன் உள் இருக்கிற இறை அருளால் அவன் செயல்படவில்லே.

மனித வாழ்வை இறை உள்ளத்துக்கு உயர்த்தப்பட வேண்டியது மிக மிக அவசியம். இந்த நெறியில் வாழ்வது தான் அனக வாழ்வு.

அகம் என்று உள் நிலேயையும், புறம் என்று வெளி நிலே யையும் கூறுவார்கள். உலகில் உள்ள எந்த ஒரு பொரு ளுக்கும், உள்ளும் உண்டு, புறமும் உண்டு.

ஒரு சிறு அணுவில்கூட அதன் அகத்தில் ' புரட்டான் ' இருப்பதையும், அதன் புறத்தில் ' எலெக்ட்ரான் ' இருப்பதையும் விஞ்ஞான உலகம் நமக்கு அறிவிக்கிறது.

அகம், புறம் என்பவற்றைத் தவிர ' அனகம் ' என்ற ஒன்றும் இருக்கிறது.

அனகம் என்ற சொல் உலக வழக்கில் இல்லை.

அதனால் அனகம் என்ற சொல்லுக்கு உரிய பொருளை எல்லாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை.

' அனகம் ' என்ற சொல்லுக்கு உரிய பொருள் என்ன?

பாவமற்றது, புல்லுருவி, கீழானது, நற்சிந்தை, மாசற்றது, அகங்காரமற்றது, அழகன், கடவுள், தூயவன், அனகன் என்று ' அனகம் ' என்ற சொல்லுக்கு அகராதியில் பொருள் சொல்லப்பட்டிருக்கிறது.

சொல் முந்தியதா, பொருள் முந்தியதா என்றால் பொருள்தான் முந்தியது. நமக்குத் தெரிந்த ஒரு பொருளைக் குறிக்கவே அதன் குணம், தன்மை, பயன் முதலியவற்றால் அந்தப் பொருளுக்குப் பெயரிடுகிறோம். அந்தப் பெயருக்கு உரிய காரணம் தெரியும்போது அது காரணப் பெயர். காரணம் தெரியாத போது அது இடுகுறிப் பெயர்.

பொருள் என்னவோ ஒன்றுதான். ஆனால் அதைக் குறிக்க வந்த சொற்களோ ஏராளமாக இருக்கின்றன. அச் சொற்களில் ஒரு சொல்லைக் கொண்டு பொருளைத் தெரிந்து கொள்ள முடியாத போது, அதற்கு உரிய வேறு சொற்களை வைத்து பொருளை அறிய முயலுகிறோம்.

இவ்வாறு அறிவதற்கு பிறர் உதவியோ, அகராதியின் துணையோ மனோ கற்பனை உணர்வோ தேவைப்படுகின்றன.

பொதுவாக மனம், வாக்கு, காயத்தாலும், புறக் கருவிகளாலும் அறிவதற்கு இயலாமல் இருக்கும் பரம் பொருளை எந்தச் சொல்லால் குறிப்பிட முடியும்?

பரம்பொருளை அறிய முடியாத காரணத்தால் அதற்குரிய எந்த ஒரு சொல்லும் தெளிவாக உருவாகவில்லை.

எனினும், அப்படி ஒரு பரம்பொருள் இல்லை என்றும் சொல்வதற்கில்லை. நிச்சயம் ஒரு மெய்ப்பொருள் இருக்கத்தான் இருக்கிறது. இது மறுக்க முடியாத உண்மை.

இதுவரை பரம் பொருளை உள்ளபடி யாரும் அதன் தன்மையுடன் பார்க்கவில்லை. அதனல் அதை உணர்த்தும் தெளிவான ஒரு சொல் ஆக்கப்படவும் இல்லை.

பரம்பொருள் இருப்பது உண்மை என்ருல், அதற்குரிய சொற்களும் இருந்தாகவேண்டும் அல்லவா ?

அறிவதற்கு அரிய பரம்பொருளை, மனம், வாக்கு, காயத்தால் அறிய முடியாதுதான்.

அனல் இறைவனின் பெருங் கருணையே மனிதனில் தோன்றி தன்னை அவனுக்கு உணர்த்துகிறது. அந்த உணர்வாலேயே பரம்பொருளை அவன் உணரும் போது அதை முழுவதுமாக அவனல் சொல்லில் காட்டமுடியவில்லை. எனினும் பரம்பொருள் ஒருவன் அக அருள் அனுபவத்தில் அவனுக்குத் தெளிவாக விளங்குகிறது. அவனுல் அதைப் பூரணமாக அனுபவிக்கவும் முடிகிறது.

இந்த அனுபவிகளாலும் பரம்பொருளை உணர்த்தும் சொல்லையும் பரம்பொருளையும் பிரித்துக்காட்டி விளக்க முடியவில்லை. சொல்லால் விளக்கிக்காட்ட முடியாத பரம்பொருளை அது சொல்லாகவும் இருக்கிறது; சொல்லுக்கு உரிய பொருளாகவும் இருக்கிறது என்கிருர்கள்.

சொல்லும் பொருளும் ஆன பரம்பொருளை இது சொல், இது பொருள் என்று விளங்கும்படியாக எடுத்துக்காட்டி விளக்க முடியாது என்றும் சொல்கிருர்கள்.

விளக்கிச் சொல்ல முடியாத அந்த அரிய பொருளை, மெய்ப்பொருள் என்றும், பரம்பொருள் என்றும், கடவுள் என்றும் இன்னும் பல பெயர்களிலும் கூறி வைத்தார்கள்.

கடவுளை உணர்த்தவந்த பல சொற்களில் ஒன்றுதான் 'அனகம்' என்ற சொல்.

கடவுள் உண்மை எதுவோ அதுவே இந்த அனகத்தின் உண்மையுமாகும்.

அறியாத, அறிய முடியாத ஒன்றை அறிவிப்பதற்கு அதை ஒருவகையில் ஒத்திருக்கும் அதுபோன்ற மற்றொன்றைக் கொண்டு உவமித்துக் கூறுவது மரபு.

ஒரு சொல்லுக்கு உரிய பொருளையும்கூட நாம் அறிந்த ஒரு பொருளின் பெயரைவைத்து, நாம் அறியாத ஒரு பொருளைக் குறிப்பதும் மரபாகிறது.

**அனகம்**

அனகம் என்ற சொல் கடவுளை எப்படி விளக்குகிறது?

கடவுள் என்பதில் இருக்கும் 'கட' புற உருவத்தையும், 'உள்' அதன் அகஅருள் நிலையையும் காட்டுகின்றன. அதுபோல அனகத்தையும் அன்+அகம் என்று பிரிக்கலாம். 'அன்' என்ற முற்கூறு அடி முடி காணாத பரம்பொருளின் புற நிலையையும், பிற்கூறுகிய 'அகம்' அதன் உள் இருக்கும் அருள் ஆற்றலையும் காட்டுகின்றது.

கடவுள் என்ற சொல்லின் பொருளை முன்பே தெளிவாக விளக்கி இருக்கிறோம்.

உள் அதாவது அகம்தான் நமது ஆன்மா. கட என்பது அந்த ஆன்மாவின் புறத்தே சூழ்ந்து இருக்கும் உடல்.

ஆன்மாவே விரிந்து உடம்பாக வளர்ந்து கடவுள் உண்மையைத் தெரிந்துகொள்ள உதவிக் கொண்டிருக்கிறது.

'அன்' கடவுளின் அடி முடி நிலையைக் குறிக்கும். 'அகம்' நம் உள் இருக்கும் ஆன்மாவைக் குறிக்கும். அன் அகத்துடன் ஒன்றி அனகம் என்று விரிந்து விளங்குகிறது. அனகம் என்ற சொல்லுக்கு கடவுளைத் தவிர வேறு பொருள்களும் இருக்கின்றன; அந்தப் பொருள்களையும் ஆராய்வோம்.

1. அனகம் என்ற சொல்லுக்கு உரிய பொருள்களில் பாவமற்றது என்பது ஒன்று. பாவமற்றது என்ருல் இயல் பாகவே தூய்மையானது, அருள் ஒளி மயமானது, மனத் தால், பாவனே செய்து அறியப்படாதது என்று பொருள். பாவம் என்ற சொல் பவம், உற்பவம் ஆகிய பிறப்பைக்குறிப் பது. ''பாவமற்றது''என்ருல் பிறப்பற்றது என்று பொருள். பிறப்பில்லாமல் இயல்பாக இருக்கும் கடவுளேயே அனகம் என்ற சொல் குறிக்கிறது. அதையேதான் பாவமற்றது என்ற சொல்லும் குறிக்கிறது.

2. அனகம் என்ற சொல்லுக்கு 'புல்லுருவி' என்ற ஒரு பொருளும் உண்டு. இந்தப் பொருள் அனகம் என்ற சொல்லுக்கு எப்படி வந்தது?

ஒரு மரத்தில் வேறு ஒரு தாவரம் முளேக்கிறது. அது அந்த மரத்தின் சத்து அம்சத்தை கிரகித்து வளர்கிறது. அந்த மரத்திலேயே நிலேத்தும் விடுகிறது. இந்தத் தாவரத் துக்குப் புல்லுருவி என்று பெயர்.

இதுபோல கடவுள், ஆன்மாவில் தோன்றுகிறது. அதன் அருளால் அந்த ஆன்மாவைச் சுற்றி உடல் வளர்ந்து நிலே கொள்கிறது. மரத்தின் சத்துப் பொருளே கிரகித்துக் கொண்டு புல்லுருவி வளர்ந்து நிலேத்துவிட்டதுபோலவே இறைவனும் மனித ஆன்மாவைச் சுற்றி உடலாக வளர்ந்து நிலேத்துவிடுகிருர். 'அன்' ஆகிய அடி முடி காணு இறைவன் ஆன்மாவைத் தன் உள் கொண்ட அந்த மனித உடலே அனக மாக உயர்த்தி விடுகிருன்.

கடவுள் சிற்றுருவமே ஆன்மாவில் தோன்றி வளர்ந்து மனித உடலாகி நிலேத்துவிடுகிறது. மனித உடல் பரம் பொருளின் அகத்தையே தன் அகமாகவும், தன் புறஉடலே பரம்பொருளின் புறமாகவும் கொள்கிறது. மனிதஉடல் தன் அகமனத்தின் அருள் ஆற்றலால் இறை அனுபவத்தைப் பெற்று அனகமாகிவிடுகிறது.

புல்லுருவி என்பதும், மனிதன் பெற்ற ஒப்பற்ற அனக அனுபவத்தையே காட்டுகிறது.

3. அனகம் என்ற சொல்லுக்கு மாசற்றது, தூயது, அகங்காரமற்றது, நற்சிந்தை, அழகன், கடவுள், பரம், அபரம், கீழானது முதலிய பல பொருள்கள் இருக்கின்றன. இந்தச் சொற்கள் காட்டும் பொருள்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ந்தால் முடிவில் அது அனகம் என்ற கடவுள் அனுபவ நிலையில் விளங்குவதை அறியலாம்,

அனகம் என்ற சொல்லின் பொருள்களை இதுவரை ஞானிகள் தனித்தனியாக உணர்ந்திருந்தார்கள். அவர்கள் அனகம் என்ற சொல்லுக்குத் தந்திருக்கும் பொருள்களை எல்லாம் வெறும் உடல் இன்பத்துக்காகவே வாழ்ந்துவரும் மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

உண்மையை அறியும் ஆற்றல் பெற்ற ஞானயோக சித்தர்கள், ஓரளவு தாங்கள் பெற்ற அனுபவத்தால் அனகம் என்ற சொல்லையும், அதன் பொருளை விளக்கிக் காட்டும் சொற்களையும் ஏற்றுக்கொண்டு இருந்தார்கள். ஒவ்வொரு குழுவினர்க்கும் ஏற்றபடி அனகம் என்ற பொருளை உணர்த்தும் சொற்களை அவர்களிடம் சொல்லி வந்தார்கள்.

கடவுள் உண்மை, அனுபவ பூர்வமாக உணரப்படாத வரை, அக்கடவுளைக் குறிக்க வந்த அனகம் என்ற சொல்லுக்கு உரிய அனுபவப் பொருள் விளங்காமல் இருந்தது.

சுத்த சன்மார்க்கம் இப்போது நம் கண்களை திறந்து விட்டது. கடவுள் உண்மையை சுத்த சன்மார்க்கத்தால் அறிந்து அதை அனுபவிப்பதன் மூலமாக நமது அகஉடலையும், புறஉடலையும் அனகமாக்கிக்கொள்ளலாம். இதனால் அழியாத இன்ப வடிவுடையவராகத் திகழலாம்.

**அனக கனக வடிவம்:**

ஆன்மாவுக்கு ஆணவம் இயற்கை என்பார்கள். ஆணவத்தின் மேல், செயற்கையாகிய மாயையும், கருமமும் சேர்ந்து கொள்கின்றன. இதனால் ஆன்மாவுக்குப் பிறப்பு தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது என்பார்கள்.

திருவருளால் ஆன்மாவுக்கு ஆணவம் போனுல் மனிதன் சிவமயமாகிவிடலாம். பிறவித்தளே அற்று இருக்கலாம் என்பது முன்னேர் சித்தாந்தம்.

செம்பின் உண்மையான நிறத்தை மறைப்பது அதன் மேல் தோன்றிக் கொண்டிருக்கும் களிம்பு. அதுபோல ஆன் மாவின் உண்மைத் தன்மையை மறைப்பது ஆணவம்.

தொட்டால் பொன்னுக்கும் பரிசவேதியால் செம்பைப் பொன்னுக்கிவிடலாம். பிறகு அது என்றும் மாசடையாது, தன் உண்மையான நிறத்துடன் ஒளிவிட்டு விளங்கும்.

அதுபோலவே உயிருக்குக் களிம்பு போன்றது ஆணவம். உயிரில் பரிசவேதி போன்ற திருவருள் சேருகிறபோது ஆணவம் என்ற களிம்பு நீங்கி உயிர் தன் உண்மைத் தன்மை யுடன் சிவமாகிறது என்கிருர்கள்.

இப்போது சுத்த சன்மார்க்கம் தோன்றி இருக்கும் காலம். கடவுள் உண்மை முழுவதையும் அறிந்திருக்கிற காலம். அதனுல் முன்னேர் கூற்று எந்த அளவுக்கு உண்மை என்பதையும், எந்த அளவுக்குத் தவறு என்பதையும் தெரிந்து கொள்வதற்கு ஆவல் ஏற்பட்டிருக்கிறது.

நம் உள்ளிருக்கும் ஆன்மா அருட்பெருஞ்ஜோதி ஆண்ட வரின் முழுத் தன்மையும் கொண்ட சிறு உருவம். இந்த இறை ஒளியைத் தன்னுள்ளே கொண்டு அதன் அருளால் வளர்ந்தது மனித உடல். திருவருள் கடவுளின் பிரிவற்ற தன்மையை உடையது. நாம் திருவருளின் அனுபவத்தைப் பெறுவதற்காகவே இறைவன் தன் திருவருளே ஐந்து பெரும் சக்திகளாக ஆக்கிக் கொடுத்திருக்கிருர். பொருளாய், செய லாய், ஞானமாய், யோகமாய், அருளாய் வெளிப்பட்டு அவற்றின் ஊடேயும் இருக்கிருர்.

கடவுளின் அருளான பிரணவத்தாலேயே அவருடைய சிற்றுருவமான ஆன்மாவைச் சுற்றி உடம்பு முதலியன தோன்றி பிரணவ வடிவத்துடன் வளர்கின்றன பெருகின்றன.

முன்னோர்களோ கடவுளின் அருளான பிரணவமே ஆன்மாவின் ஆணவம் என்று தவருக எண்ணி வந்திருக்கிருர்கள்.

ஒரு மனிதனுக்கு அருள் அனுபவம் அவன் தன் உடம்பையே அருள் மயமாகக் கொண்டு வாழ்வதன் மூலமாகத்தான் கிடைக்கும். அவன் உடலை விட்டு உயிர் நீங்கி விட்டால் அவனல் அருள் அனுபவத்தை அனுபவிக்கமுடியாது. முன்பு மனித உடம்பை நீக்கப்பட வேண்டிய பொருளாகவே கருதி வந்தார்கள். அதனல் உடலை மாசுடைய ஆணவமாக நம்பினர்கள்.

ஆன்மாவைத் தன் உள்ளே கொண்டு விரிந்திருக்கும் மனித உடம்பே ஒருவருடைய அருள் அனுபவத்தால் பசுங் கற்பூர மணமுடையதாகிவிடும் என்பது வள்ளல் பெருமான் அனுபவம். இதுதான் உடல் சுத்த பொன்னுடம்பாய்த் திகழும் உண்மை.

''ஆதியுமாய் அரனய் உடல்உள் நின்ற
வேதியுமாய் விரிந்துஆர்ந் திருந்தான் அருட்
சோதியுமாய்ச் சுருங்கா ததோர் தன்மையுள்
நீதியுமாய் நித்த மாகிநின் ருனே''

என்ற திருமந்திரச் செய்யுளில் இருந்து அகத்தே இருக்கும் அருள் ஜோதியின் பரிச அனுபவத்தால், ஒருவன் சுத்த பொன்மேனியுடன் வாழலாம் என்ற உண்மையைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

இந்தப் பொன் மேனியுடன் அதாவது கனக ஜோதி வடிவில் இருந்துகொண்டுதான் இறை உண்மையை முழுவதுமாக அனுபவிக்க முடியும்.

இந்த அனக வடிவத்திலிருக்கும் மனிதன், வெறும் உடம்பை மட்டும் உடையவன் அல்லன், அக நின்று அருள் உணர்வால் அகண்ட பெருவெளி முற்றும் நிரம்பிய பேருருவ அனுபவத்துடன் இருப்பவன்.

இவனுடைய கனக வடிவம். அனக வடிவமே.

புற தேகத்தையே கண்ணுலும், மனத்தாலும் பார்த்துப் பார்த்து நினைந்து நினைந்து அதன் மீது பற்ருேடு வாழ்ந்து வந்தால் நம் உள்ளே நிறைந்து இருக்கும் அனக வடிவ அனுபவம் ஏற்படாது.

எனவே அக ஒளியில் ஒன்றி இருக்கவேண்டும். புறத் தேகத் தோற்றத்தில் ஈடுபட்டு மகிழக்கூடாது. நம் உள்ளே நிறைந்து இருக்கிற அனக நிறை உருவையே பற்றி இருக்க வேண்டும்.

அவ்வாறு இருந்து நம்மைச் சுற்றி இருக்கிற பாமர மக்களுக்கு விருப்பு வெறுப்பு இன்றி தயவுப்பணி புரிதல் வேண்டும். இது தான் அனக வாழ்வு பெறுவதற்கான முறையாகும்.

வெளியில் இருக்கும் தெய்வ உருவங்களை வணங்கி வழிபடும் வாழ்வையே மேற்கொண்டிருந்தோமானுல், நம்உள்ளே இருக்கும் அனக உருவமான இறைவனை மறந்துவிட நேரிடும். அதனுல்தான் வள்ளல் பெருமான் தம் உருவத்தை வைத்து வணங்க வேண்டாம் என்று சொன்னுர்.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுளைத் தீபத்தில் பாவித்து, அக நிலையில் அதுவாகி நின்று அனக வாழ்வு வாழப் பழகுவது தான் சன்மார்க்க முறை.

அனக வாழ்வு முறைதான் சுத்த சன்மார்க்கம். இதுவரை இந்த மார்க்கமும், இந்த மார்க்கத்தின் வாழ்வு முறையும் உலகுக்குத் தெரியாமல் இருந்தன.

உலகம் தெரிந்து கொண்டிருந்தது எல்லாம் உடல் இன்பத்தைப் பற்றிய வாழ்வே. உடல் இன்பத்தைத் தருகிற நெறியையே பெரும்பாலான மக்கள் பின்பற்றினுர்கள்.

அவற்ருல் எவ்வளவோ துன்பமும், கேடும், அழிவும் ஏற்பட்ட போதிலும் மீண்டும் மீண்டும் அவ்வழியிலேயே சென்று துன்பப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள்.

சற்று நல்ல அறிவும், பழக்கமும் உள்ளவர்கள் புற மார்க்கத்தை, நன்மைகளைப் பெறுவதற்கான முறையில் கடைப்பிடிக்கிருர்கள்.

எத்தனையோ வகையில் முயன்றும், எவ்வளவோ சீரும் சிறப்புமாக வாழ்வோரும் இன்ப துன்பங்களில் அதிகமாகப் பாதிக்கப்படுகிறார்கள்.

உடல் இன்ப வாழ்வுக்கு எனவும், கலை வளர்ச்சிகளுக்கு எனவும், சமயமத அபிவிருத்திகளுக்கு எனவும், போட்டி விளையாட்டுகளுக்கு எனவும், போர்ப்படைகளுக்கு எனவும் எவ்வளவோ பொருள்களையும், ஆற்றல்களையும் காலத்தையும் செலவழிக்கிறார்கள்.

இம்மாதிரியான வாழ்க்கையில் உண்மையும் விளங்குவதில்லை; நன்மையும் விளைவதில்லை. இவைகளைப் பார்த்து வெறுப்படைந்த சிலர் அமைதியையும், அக இன்பத்தையும் தேடி எங்கெங்கோ அலைகிறார்கள். இறுதியில் தேடிய பொருள் கிடைக்காமல் மடிந்து போகிறார்கள்.

உலகை நல்வழிப்படுத்தி, வாழ்வில் அமைதியையும், மெய்யான இன்பத்தையும் அளிப்பதற்காகவே திருவருளால் இப்போது சுத்த சன்மார்க்கம் வெளிப்பட்டிருக்கிறது.

இனிமேல் உலகம் கலகமில்லாமல் வாழ்ந்துவரும்; பல நலங்களைப் பெற்று உயரும். நல்ல முயற்சியுடன் விருப்பு வெறுப்பில்லாமல் தயவு பணியைச் செய்து வரவேண்டும்.

இதற்கு அகத்தில் மெய்ப்பொருளில் உறுதியான பிடிப்பும், பரோபகாரத்தில் ஆர்வமும் இருக்கவேண்டும்.

இவ்வாறு அகத்தையும் புறத்தையும் இணைத்துக் கொண்டு வாழச் செய்வதே அனக வாழ்வு முறை.

ஏராளமான மக்கள் புற இன்பத்திலேயே மூழ்கிக்கிடந்து அக உண்மையை அறியாமலேயே மடிந்தார்கள். அதுபோல் புறவாழ்விலே வெறுத்துப்போய் தம்மைத் தாமே சிதைத்துக் கொண்டவர்களும் எத்தனையோ பேர்.

தனிமையில் இனிமை காணலாம் என்று இறுமாந்து இருந்தவர்களும் எத்தனையோ பேர். பல புது முறைகளை

மேற்கொண்டு ஆர்வத்தோடு உழைத்து அதனல் வீண் போகிறவர்களையும் தினமும் காண்கிறோம்.

இவைகளுக்கெல்லாம் ஒரு மாற்றமாக, ஒரு அருள் மார்க்கம் இப்போது தோன்றியிருக்கிறது. அதுதான் சுத்த சன்மார்க்கம். அனக வாழ்வு முறை.

உத்தரஞான சித்திபுரத்து சத்தியஞான சபையிலே அருட்பெருஞ்ஜோதி எழுந்தருளி மக்களுக்கு உண்மையான நிலையான இன்ப வாழ்வை அளிக்க இருக்கிறது.

இனிமேல் இந்த உலகம், புறத்தே வீணில் உழன்று கெடாது, அருட்பெருஞ்ஜோதி அதைக் காப்பாற்றும்: அகத்தே அடங்கி மடிந்து ஒழியாது, அனகத்தே இருந்து அகத்தையும் புறத்தையும் பிரிக்கும் அறியாமையைத் தயா ஞானத்தால் விலக்கிக்கொண்டு இருக்கும்: அருள் ஒளியுடன் நம்மில் ஒன்றி இருந்து, நம்மை வாழவைத்துக் கொண்டும் இருக்கும்.

இந்நெறிமுறைக்குத் திருவருட்பா ஞானசரியை அந்தாதிப் பாடல்கள் நல்ல விளக்கம் தருவனவாகும்.

அவற்றில் ஒன்றிரண்டு செய்யுட்களை மட்டும் இங்கு எடுத்துக் காட்டி விளக்கம் செய்ய விரும்புகிறோம்: அதை முழுமையாக ஓதி உணர்ந்தால் அனக நெறியின் அனுபவத்தைத்தெரிந்து கொள்ளலாம்.

அனகத்தின் சிறப்பை விளக்கவே ஞானசரியைப் பாடல்களில் இரண்டு பாடல்களை எடுத்துக்காட்ட விரும்புகிறோம்.

அனகம் என்ற சொல்லின் பொருளைப் புரிந்துகொள்ளவில்லையானல் வள்ளலாரையும் அவரது அருட்பெரு நெறியையும் புரிந்துகொள்ள முடியாது.

சுகம்அறியீர், துன்பமொன்றே துணிந்தறிந்தீர், உலகீர்
சூதறிந்தீர்; வாதறிந்தீர்; தூய்மையறிந் திலிரே!
இகமறியீர், பரமறியீர், என்னே நும் கருத்து ஈது?
என்புரிவீர், மரணம்வரில் எங்குறுவீர்? அந்தோ

அகமறிந்தீர், அனகமறிந்து அழியாத ஞான
அமுதவடிவம்பெறலாம், அடைந்திடுமின் ஈண்டே!
முகமறியார் போலிருந்தீர் என்னையறி யீரோ?
முத்தரெலாம் போற்று(ம்) அருட் சித்தர்மகன் நானே!

இந்தப் பாடலுக்குரிய சொற்பொருளை அறிவது எல்லார்க்கும் எளிது. ஆனால் இதன் உண்மைப் பொருள் வேறு இருக்கிறது. அருட்பெருஞ் ஜோதியேதான், திருவருட் பிரகாச வள்ளல் வடிவத்தில் அதுவேறு தான்வேறு என்று இல்லாமல் ஒன்றி இருக்கிறது. இந்த ஒன்றிய நிலையில் இருந்து வள்ளலார் தம் அனுபவத்தைச் சொல்கிறார்.

''எதை எதையோ அறிந்தும், அறிய வேண்டியதை அறியாமல் அலைந்து கெடுகின்ற, உலக மக்களே!

''உங்கள் வாழ்விலே பெருந்தடையாய் இருப்பது மரணம். நீங்கள் எதைத் தடுத்தாலும் தடுக்கலாம். மரணத்தை மட்டும் உங்களால் தடுத்துவிட முடியாது. மரணத்தைத் தடுத்து நிறுத்தி நித்தியமாய் வாழவேண்டுமானால் அதற்கு அருட்பெருஞ்ஜோதி ஒன்றே வழி.

''அதனை ஏற்று வாழ்வு பெற வாரீர்!

''இங்கு வந்து பாருங்கள். நான் யார் என்பதையும், என்னோடு அத்துவிதமாய் இருக்கிற அருட்பெருஞ்ஜோதித் தந்தையையும் பார்த்துப் பெருநலம் அடைவீர்கள்!'' என்று நம் உள்ளே நின்று உரைக்கிறார் வள்ளல் பெருமான்.

மேலே எடுத்துக் காட்டியிருக்கும் அருட்பாவில் மூன்றுவது அடியில் வருகிற ''அகம்'' ''அனகம்'' என்ற இரண்டும் சத்விசாரத்தால், அறியக் கூடியவை.

அகம் என்பது, நமது உடல், உயிர், அறிவு, உணர்வு இவைகளுக்கும் உள்ளாக இருக்கும் ஆன்மாவாகும்.

இது உடலும் உயிரும் சேர்ந்த ஒன்று அல்ல.

இது உள்ளம் எனவும் குறிக்கப்படும்.

ஆன்மாதான் நமது உண்மை வடிவம் என்றும், மற்றவை யெல்லாம் நாம் அல்ல; அன்னியமான அழியும் பொருட்களே என்றும் வேதாந்தம் உபதேசிக்கிறது.

நமது அகம், உள்ளம். வேதாந்திகளின் ''அஹம்,'' ''நான்'' என்று பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

''அகம்'' தனி ஆன்மாவே. இந்த அகத்தில் நின்று திருவருள் விரிகிறது. உயிர், உடல், உணர்வு எல்லாமாகத் தோன்றுகிறது. அந்த உணர்விலே அருள் விளக்கம் உண்டா கிறது. அப்போது ஆன்ம ஞானத்தையும், 'அன்' என்னும் கடவுளின் அடிமுடி உண்மையையும் தெரிந்துகொள்கிறோம்.

இந்த நிலையில் நாமே ஆன்மாவின் உண்மையை அறிந்துச் எங்கும் நிறைந்த அனகக் கடவுளின் பெருவடிவையும் புரிந்துகொள்கிறோம்.

இதுதான் அகம் அனகம் இரண்டையும் அறிகின்ற நிலை. இத்துடன் சத்திய ஞானசபையிலும் பொருந்தி நின்றால்தான் இறைவனின் உண்மை விளங்கும்.

அங்கிருந்து அருள் ஒளியையே அமுதமாக உட்கொண்டு பிறப்பு இறப்பு இல்லாத அருளின்ப வாழ்வில் தழைக்கலாம்.

அனக வாழ்வுடன் விளங்கும் அருட்பிரகாச அடிகளின் உடம்பு பொன் உடம்பாகி, சுத்த உடம்பாகிவிட்டது. தாம் பெற்ற அருள் அனுபவங்களைப்பற்றி வள்ளல் பெருமான் சொல்லுவதைக் கேளுங்கள்.

இன்புறலாம் எவ்வுலகும் ஏத்திட வாழ்ந்திடலாம்
எல்லாஞ்செய் வல்லசித்தி இறைமையும் பெற்றிடலாம்
அன்புடையீர் வம்மினிங்கே சமரசசன் மார்க்கம்
அடைந்திடுமின் அகவடிவிங் (கு) அனகவடி வாகிப்
பொன்புடைநன் கொளிர்ஒளியே புத்தமுதே ஞான
பூரணமே ஆரணத்தின் பொருள்முடிமேல் பொருளே
வன்புடையார் பெறற்கரிதாம் மணியேசிற் சபையின்
மாமருந்தே என்றுரைமின் தீமையெலாம் தவிர்ந்தே!''

வள்ளலார் அழைப்பை ஏற்று அன்புடையார் எல்லாம் சமரச சுத்த சன்மார்க்கத்துக்கு வருகின்றனர். சத்திய ஞான சபையை அடைகின்றனர். திருவருள் செயல்படுகிறது. அவர்களிடம் அக ஆன்ம வடிவமாக இதுகாறும் அருகிக் கிடந்த ஒன்று மலர்கிறது. மணங்கமழ விரிகிறது. உயிருடம்பில் சார்கிறது. அதையும் கடந்து அனக நிறைவாகிறது. அகண்ட வானவெளி முழுவதும் நிரம்புகிறது.

இதுதான் அருட்பிரகாசரின் உளத்தே பிரியாமல் எங்கும் நிறைந்த பெரும் வடிவமாகும். அனக வடிவமும் ஆகும்.

அக அனுபவத்தில், அனகமாய் நிறைந்து விளங்குவதால் புறவுடம்பின் அசுத்த அநித்தியத் தன்மை ஒழிந்தது. அது சுத்த நித்திய சுவர்ண தேகம் ஆகியது.

இதையே 'பொன்புடை நன்கு ஒளிர் ஒளியே!' என்கிறார்.

சிற்சபையில் காணுகிற அருட்பெருஞ்ஜோதியே புத்தமுதாகிறது; அருட்பெரும் மணியாகிறது; மந்திரமாகிறது. அழியாமையையும் அருட்சித்தி வல்லபத் திறத்தையும் பெற்று எல்லாப் பிணிகளையும் தீர்க்கும் 'சர்வரோக நிவாரணி' என்னும் மாமருந்தாகவும் ஆகிறது.

அகத்தில் உள்ள அருட்பெருஞ் ஜோதியுடன் ஒன்றி அனக வாழ்வு ஏற்றால் இவ்வளவு சக்தி சித்தியுடனும் மரணமில்லாப் பெருவாழ்வில் வாழலாம் என்கிறார் வள்ளலார்.

அனக வாழ்வை யாரும் பெறலாம். இதற்கு இடையில் நின்று தடைசெய்ய எதுவுமில்லை. எவருமில்லை.

தயவுடன் இருக்கவும், சிந்திக்கவும், பேசவும், பிறர்க்கு உதவவும் என்ன தடை ஏற்படப்போகிறது?

ஏதேனும் சமய மதக் கட்டுப்பாடுகளோ, சட்ட திட்டங்களோ தடையாக இருந்தால் அவற்றை விதி எனக்கொண்டு, தயவின்றி நடந்து கொள்ளக்கூடாது.

அருள்நெறி அனக நெறி எல்லாருக்கும் பொதுவாகும்.

எந்த இனத்தவர்க்கும், எந்த நாட்டவருக்கும், எந்தக் காலத் தவர்க்கும் உரியது அனக சுத்த நெறி.

அகம் மறைந்து அருவமாய் இருக்கிறது. ஆகையால் அதன் உண்மையை அறிந்துகொள்ளமுடியவில்லை-

புறமோ அகண்டமானது. அதனால் அந்தப் பெரு வெளியில் அற்பமாகிய ஒரு சிறு கூறுதான் தெரிகிறது.

இவ்வாறு இருக்கும் அகத்திற்கும் புறத்திற்கும், உள்ளும் வெளியும் இருந்து எல்லாவற்றையும் இயக்கி வருவதுதான் கடவுள். கடவுள் உண்மையையும், அதன் பேராற்றலையும், அதனால் விளைகின்ற பயனையும் பற்றி அறியவும், அதன் துணைகொண்டு நல்வாழ்வு பெறவும் முடியுமா என்பதைச் சிந்திக்கவும் தொடங்கி இருக்கிறான் மனிதன். அவனுக்குத் திருவருளும் துணை செய்துவருகிறது.

இதுவரை நாம் அறியாததை அறியவும், காணாததைக் காணவும், அடையாததை அடையவும் அருட்பெருஞ்ஜோதி சத்திய ஞான வானில் எழுந்திருக்கிறது. அகத்திலும் புறத் திலும் அது தன் உண்மையைப் பரப்பத் தொடங்கி இருக் கிறது.

மனிதப் பிறவி, உண்மையில் முழு கடவுள் தன்மை யுடன் விளங்குகிறது. பக்குவ காலத்திலே எல்லாவற்றையும் அறியவும், அதனால் பெரும் பயன் அடையவும் முடிகிறது.

உண்மைக் கடவுள் எங்கும், எப்போதும், ஒரே தன்மை யுடன் இருக்கிறது. அது நிறை இயல்பு உடையதாய் இருக் கிறது. அதை அனுபவத்தில் தெரிந்து கொள்வதற்காகவே படிப்படியாக பல காரியங்கள் நடைபெறுகின்றன. இதற் காகவே இந்தப் பேருலகத்தின் செயல்கள் எல்லாம் நீண்ட நெடுங்காலமாக நிகழ்ந்து வருகின்றன.

பிரபஞ்சப் படைப்பில் மனிதத் தோற்றக் காலம் ஒரு முக்கிய கட்டம். மனிதனின் மனம்தான் கடவுள் உண்மையை அறிவதற்குரிய அரிய கருவி.

மனமே அருள் ஞான உணர்வுமயமாகும்போது, அருட் பெருங் கடவுளின் உண்மையை அது அறிகிறது.

எல்லாம்வல்ல ஆண்டவர் திருவருளே மனமாய் இருப்ப தால் அருட் பக்குவத்தில் தன்னைத்தானே அறிவது அதற்கு இயல்பாயிருக்கிறது.

மனத்தின் துணையுடன்தான் கடவுள் உண்மையை முழு மையாக அடையமுடியும். வேறு எதனாலும் யாராலும் எக்காலத்திலும் கடவுள் உண்மையை அறியமுடியாது!

கடவுளின் உண்மை நிரம்பி செயலொடு விளங்கிக் கொண்டிருக்கும் அகத்தையும், காண்பதற்கு அரிய புறத் தையும் அருள் மயமான மனத்தால்தான் உணர முடியும்.

அருள் மனோநிலை, அகத்தையும், புறத்தையும் தன் உணர்வில், அல்லது தன்னிலையில் அடக்கிக்கொண்டிருக்கிறது.

அருள்ஞான மனோநிலைதான் அனகம்.

இது அகமும் அல்ல, புறமும் அல்ல, இடையுற்றும் ஒளிர்வது; எங்கும் பரவி ஒளிர்வது.

அன்+அகம் என்றால் அகம் அல்லாதது என்றும் ஆகும். அனகம், அகம் அல்லாததே ஒழிய இல்லாதது அல்ல.

இருப்பதுதான்.

அனகத்தில் அகம் என்ற கூறு இருக்கிறது. அகத்தோடு பிரியாமல் கூடி நிற்கும் 'அன்' கடவுளின் அடிமுடி நிலைகளை யும், அக, புறங்களின் முழு நிலைகளையும் உடையது.

இந்த உண்மையை உணராத அந்த நாளில் அனகம் என்ற சொல் எப்படித் தோன்றியிருக்க முடியும்? யார் சொல்லி இருப்பார்கள்?

இதைப்பற்றிய ஆராய்ச்சியில் இறங்கி, வீணாகக் காலத் தையும், ஆற்றலையும் போக்கவேண்டாம். அருள் உணர் வோடு சற்றும் அசையாத தீபம்போல் சிறிதுநேரம் ஞான யோகத்தில் இருந்து உளநெகிழ்வு பெறுவோம்.

அந்த நிலையில் உண்மைக் கடவுளை உணரலாம். ஒவ்வொருவர் உள்ளத்திலும் இறைவன் இருந்து, காலச் சூழ்நிலைக்கு ஏற்ப எதை எதை வெளியாக்க வேண்டுமோ அதை அதை வெளியாக்கி வருகிறார்.

அனகம் என்ற சொல்லும் அந்த நாளில் யாரோ ஒருவர் வாயிலாக வெளியாகி இருக்க வேண்டும். ஆனால் இச்சொல்லில் இப்போது காணும் கடவுள் உண்மை விளக்கம், அப்போது காண முடியாமல் இருந்திருக்கலாம்.

அனகம் என்ற சொல்லை வழங்கிய ஒருவரோ, அவரைச் சார்ந்த குழுவினரோ உணராத கடவுள் விளக்கத்தைத் திருவருளால் உணர்ந்து கூறுகிறோம்.

**வாழ்வு :**

உலகில் எண்ணற்ற உயிரினங்கள் இருக்கின்றன. இவற்றை ஜீவர்கள் என்றும் பிராணிகள் என்றும் சொல்கிறோம். உயிர்க்கு மூலகாரணமாக இருப்பதை ஆன்மா என்கிறோம். உயிரைக்கொண்டு உலவுகிற நிலவுகிற உடல்களை எல்லாம் உயிரினங்கள் என்கிறோம்.

உயிரினங்கள் தம் உயிர்ப்பு ஆற்றலால் செயல்படுகின்றன. இவ்வாறு செயல்படும் நிலையே உயிர்களின் வாழ்வாகும். உயிரினங்கள் செயலற்று, உயிர்ச்சக்தி மறைந்து மரம்போல மரத்துக் கிடக்கும் நிலையே மரணம்.

மனிதனில் உயிர் விளங்கும் போதுதான், அறிவும், ஆற்றலும், செயலும் அனுபவமும் விளங்கும். மரணத்தில் ஒன்றுமே விளங்காது, வெறும் சூனியம்தான்.

உயிர் விளக்கத்தோடு மனிதன் காரியப்பட்டுக்கொண்டிருக்கும் நிலைதான் அவனுடைய வாழ்வு. உயிர் விளக்கம் இல்லாத அவனுடைய நிலையே சாவு, மரணம், இறப்பு.

ஆன்மாவாகிய கடவுள் சிற்றுரு நிலை நித்தியமானது. அதனிடத்தில் இருந்து தோன்றி விரிந்து செயல்படுவதும், சுருங்கி ஒடுங்கி மறைந்துபோவதும் சுவாசத்தின் நிலையாகும். உயிர்ப்பின் செயலாகும்.

நம் உள்ளே இருக்கும் உயிரின் செயலால்தான் வெளியே மூச்சுக் காற்றின் இயக்கம் நடைபெற்று வருகிறது. இதனு லேயே உயிர் இனங்களின் தோற்றமும், மறைவும் இடையருது ஆன்மாக்களைச் சூழ்ந்து நடந்துகொண்டே இருக்கின்றன.

ஒவ்வொரு பிறவியிலும் உண்மை வெளியாவதற்கான அறிவனுபவ விளைவு ஓங்கிக் கொண்டே இருப்பதால் இப்பிறவித் தொடர் வந்துகொண்டே இருக்கிறது.

மனிதப் பிறவியில்தான் உண்மையான கடவுள் ஆன்ம நித்திய நிலையை அறிந்துகொள்ள முடியும்.

கடவுளின் நித்திய உண்மையை அறியும்போது மனிதன் நிலையும் நித்தியமானது என்பதை அறிந்துகொள்கிருன். இந்த நித்திய நிலையில் வாழ்வதற்காகத்தான் மனிதப் பிறவியை எடுத்திருக்கிறேம் என்பதையும் உணர்கிருன்.

அநித்தியப் பிறவியில் இருக்கும் தன் உடலை நித்தியமாக ஆக்கப் பல வழிகளில் முயல்கிருன்; அதில் தோல்வியே காண் கிருன்; கடைசியில் ஒரு முடிவுக்கு வருகிருன்.

மனிதனுல் தன் உடலை எந்தவிதத்திலும் நித்தியமாக்க முடியாது. மனிதன் தன் உடலோடு வாழ்வதற்கு முயல்வது வீண் முயற்சி என்று தீர்மானித்துவிட்டான். உடலை நித்திய மாக்குவதில் தோல்வி கண்ட மனிதன், தன் அக நித்திய நிலையை அறிந்து அதைப் பற்றிக்கொண்டு நின்றுவிட்டான். நியதிப்படி தன் உடல் கழன்ற பின் நித்திய ஆன்ம வடிவத் துடன் இருக்கலாம் என்ற முடிவுக்கு வந்தான்.

மரணத்தில் வாழ்வு ஏது? உடல் இல்லாமல் அந்த உடலுக்கு உரிய ஆன்மா எப்படி வாழும்? ஆன்மாவுக்குத் தனியே வாழ்வு இருக்கிறது என்று அவன் எண்ணியது தவறு. வாழ்வு அற்றுப் போனவன் வாழ்வை இழந்தவனே!

இந்த மனித உடலுடனேயே திருவருள் துணையுடன் அகநிலையில் நித்திய ஆன்ம சொரூபியாய் இருந்து வாழத் தொடங்க வேண்டும். அப்போது திருஅருளே தன் அருள்

அமுத சக்தியால் நமது உடம்பை அழியாமல் செய்து விடும். இது வள்ளலார்அனுபவம்.

மனிதன் பிற உயிர்களுக்கு உதவிக் கொண்டு நிலேத்து வாழ்வதற்காகவே அவனுக்கு மனிதப் பிறவி அளிக்கப்பட்டிருக்கிறது. இந்த உண்மையை அறியாமலும், உண்மையை உணர்ந்தும் அதற்கு வேண்டிய பக்குவத்தைப் பெறத் தவறுவதாலும் அவன் இறந்து போய்க்கொண்டே இருக்கிருன்.

உண்மையான வாழ்வு என்பது இறை இன்பத்துடன் இவ்வுலகில் நிலேத்து இருக்கும் வாழ்வுதான்.

இதுவரை மனிதகுலம் வாழ்வாகக் கருதிக் கொண்டிருப்பதெல்லாம் மெய்யான வாழ்வல்ல. வெறும் வயிற்றுப் பிழைப்புதான். விலங்கு வாழ்க்கை தான்.

மனித உடலுடன் நடமாடும் மனிதனே எல்லாம்உண்மை மனிதன் என்று கருதுவது தவறு. அதுபோல மனிதனின் உள்ளத்தில் இருக்கும் நித்திய ஆன்மாதான் உண்மை மனிதன் என்று வேதாந்தம் பேசிக்கொண்டிருப்பதும் தவறு.

ஆன்மா, மனிதனின் அழிவற்ற அகவடிவம், ஆன்ம ஞானத்தைப் பெற்று வாழ்வதற்காகத்தான் அவனுக்கு மனிதப்பிறவி கொடுக்கப்பட்டிருக்கிறது. மனிதன் உடலுடன் அழியாமல் இருந்தால்தான் ஆன்மாவின் அனுபவத்தை அவனுல் அனுபவிக்க முடியும்.

என்றும் ஆன்ம அனுபவத்தோடு நிறை மனிதனுய் வாழ்கிற வாழ்வே ஒருவனது மெய்யான வாழ்வு. நிலேத்து வாழாமல், உடலே நீத்துவிட்டு எங்கு எப்படி இருந்தாலும் அது உண்மை வாழ்வாகாது.

இறந்தும், மறைந்தும் போனவர்களே அவர்கள் புகழுடம்பில் வாழ்வதாகவும், கடவுளோடு இரண்டறக் கலந்து அவர் திருவடி நிழலில் வாழ்வதாகவும்,மோட்சத்தில் வாழ்ந்து கொண்டு இருப்பதாகவும் கூறுவதெல்லாம் உண்மையல்ல,

உடம்பைத் துறந்த பிறகு கருவி கரணங்கள் ஒன்றுமில்லாத தனி ஆன்மாவுக்கு இன்ப அனுபவ வாழ்வே கிடையாது.

இந்த உலகில் நிலையாக வாழ்ந்து, இறைவனின்இயற்கை உண்மை நிலையையும், இயற்கை விளக்க இயலையும்,இயற்கை இன்ப அனுபவத்தையும் பெற்று இறை மயமான வாழ்வில் நிலவ வந்தவன் மனிதன்.

நிலைத்த இறை அனுபவத்தோடு வாழவேண்டிய மனிதன் மடிந்து போவதனுல் அவன் வாழ்வு குறைபட்டதாய்ப் போய் விடுகிறது. அதனுல் அவன் நிறைவாழ்வு பெறுவதற்காகத் திருவருள் அவனுக்கு மீண்டும் மனிதப் பிறவியை வழங்குகிறது. இது திருவருள் நியதியாகும்.

மனிதன் நிறை வாழ்வு பெற்று, நித்தியானந்தமாய் இருந்து தனது அனுபவத்தை மக்கள் சமுதாயத்திற்கு வழங்கக்கடமைப்பட்டவன்.

இவ்வாறு வாழும் நிறை வாழ்வுதான் அனக வாழ்வு.

அனக வாழ்வைப் பெற்ற மனிதன் சத்திய ஞான சபையில் அருட்பெருஞ்ஜோதியே அவனுய், அவனே அருட்பெருஞ் ஜோதியாய் ஒன்றி இருந்து அருள் வாழ்வு வாழ்கிருன்.

அனகவாழ்வு பெற்ற மனிதன் எல்லாவற்றையும் அறியும் ஆற்றலுடைய ஞானதேக அனுபவத்தையும், ஒன்றுமே வேண்டாத தன்னிறைவு பெற்ற சுத்த தேகத்தையும், தன்னதாய்க் கொண்டு சுகானந்த அனுபவத்தோடு விளங்கிக் கொண்டிருப்பான்.

அனக வாழ்வு பெற்ற மனிதனுல் எல்லோர்க்கும் நன்மையே உண்டாகும்; யார்க்கும் எந்தத் தீங்கும் ஏற்படாது.

அனக வாழ்வு பெற்ற மனிதன்தான் சுத்த சன்மார்க்கியாய், இறவாது வாழ்ந்து கொண்டிருப்பான்.

அனக வாழ்வைப் பெறுகிறவன் இந்த நில உலகிலும், மற்ற உலகங்களிலும் தான் விரும்பியபடியே தயவுடன்

தோன்றுவான். மக்களுக்கு இறை உண்மையை உணர்த்து வான். தான் பெற்ற பெரும் பேற்றை மக்கள் குலம் அடைந்து மகிழ அவர்களுக்கு உதவிக்கொண்டே இருப்பான்.

திருவருளால் முதலில் கொஞ்சம் கொஞ்சமாகவும், பின் னர் பெருவாரியாகவும் இம்மார்க்கத்திற்கு மக்கள் வருவார் கள். உலகம் எங்கும் சுத்த சன்மார்க்க அனக வாழ்வு விரை வில் பரவும்.

**இறந்தோர் எழுதல் :**

இறந்து போனவர்களை உயிருடன் எழுப்புவது உலகில் நடைபெற்றிருக்கிறது. இதை மகான்கள், சித்தர்கள், பக்தர்கள் வரலாற்றின் மூலமாக அறிகிறோம்.

செத்தவர்களை எழுப்பும் ஆற்றலை அவர்களுக்கெல்லாம் ஆண்டவர் ஓரளவு கொடுத்திருந்தது உண்மைதான். அதனால் இது போன்ற அற்புதங்களை அவர்களால் நிகழ்த்த முடிந்தது.

செத்தவர்களை எழுப்பும் அற்புதச் செயலை யார் வேண்டு மானாலும், எங்குவேண்டுமானாலும், எந்தக் காலத்திலும் திருவருளால் செய்யலாம்.

இதனால் திருவருளின் ஆற்றல் வெளிப்பட்டு, மக்களுக்கு ஆண்டவரிடம் பக்தியும் நம்பிக்கையும் பெருகும்.

இந்தக் காலத்து மக்களோ வெறும் உடல் இன்ப வாழ் வில் பெரும் மோகம் கொண்டு அலைகிறார்கள். இவர்களின் பக்தியும், வழிபாடும் தங்கள் உடல் இன்பத்தைப் பூர்த்தி செய்து கொள்வதற்கு மேல் செல்வதில்லை.

திருவருள் துணையுடன் உலக போகத்தில் இச்சை இல்லா மல் ஆருயிர்களுக்கெல்லாம் அன்பு செய்ய வேண்டும் என்ற நோக்கில் யார் இறைவனை வேண்டுகிறார்கள்?

தம்மைப் பிறர் மதித்துப் போற்ற வேண்டும் என்பதற் காகத் தாம் பெற்ற அற்புத சித்தி சக்திகளைக் காட்டிப்பக்தர் களையும், பாமர மக்களையும் கவர்கிறார்கள். அவர்கள் தம் உள் இருந்து செயல் புரியும் கடவுளை உலகுக்கு உணர்த்தாமல்

தங்களையே காட்டிக் கொள்கிறார்கள். கடவுள் அவர்களுக்கு அபூர்வ ஆற்றலைக் கொடுத்திருக்கிறார். தங்களுக்கு ஆற்றல் கொடுத்த கடவுளை மறந்து செய்ந்நன்றி கொன்றவர்களாக இருக்கிறார்கள். அவர்களுக்கு வாழ்வேது? தம்மைக் காட்டிக் கொள்ளாமல் தயவோடு வாழ்கின்றவன்தான் இறைவன் அருளுக்குப் பாத்திரம் ஆக முடியும்.

இன்றைய பற்றாக்குறை உலகத்துக்கு இறந்தவர்களை மீண்டும் உயிர் பெற்று எழச் செய்தல் தேவைதானா?

உடல் இன்பத்திற்காகத் தேவைகள் பெருகிக் கொண்டும், மக்கள் இனம் அளவுக்கு மேல் அதிகரித்துக் கொண்டும் இருக்கும் இந்த நாளில், இறவாமை அடைவதும், ஆயுட் பெருக்கம் அடையச் செய்வதும், மரணத்தைத் தடுப்பதும், இறந்தாரை எழுப்புவதும் தேவைதானா? இதனால் உலகில் பெருநலம் காண முடியுமா?

நிராசையோடு கூடிய தயாவொழுக்க நன்முயற்சி ஒவ்வொருவர் உள்ளிருந்தும் ஓங்க வேண்டும். சத்த சன்மார்க்கத்தை உலகுக்கு அளித்த வள்ளலார், ஜீவகாருண்ய ஒழுக்கத்தையும் தான் வலியுறுத்திக் கூறினார். மக்களுக்கு சுத்த சன்மார்க்கத்தைப் போதிக்கவே விரும்பினார்.

ஆனால் மக்களோ மருள் நிலையில், அருளைப் புரிந்து கொள்ளாத நிலையில், அற்புதச் சித்தி செயல்களுக்காகவே வள்ளலாரை நாடினார்கள்.

வள்ளலார் உள்ளத்தையும்,அவர் சொன்ன கருத்தையும் சரியாகப் புரிந்து கொள்ள யாரும் முன் வரவில்லை.

ஆகையால் அவரும் தமது அருளுரைகளை நிறுத்திக் கொண்டார். என்றாலும் அவர் அனுபவங்கள் பாடலாக இருக்கின்றன. அவர் அனுபவங்கள் தான் திருவருட்பா.

செத்தவர்களை எழுப்பலாம் என்கிறார் வள்ளலார்.

அற்புத சித்து செய்து மக்களைக் கவரும் நாட்டம் கொஞ்சமும் இல்லாதவர் வள்ளலார். அப்படிப் பட்டவர் இறந்

தாரை எழுப்பலாம் என்று சொன்னால் அதன் உண்மைக் கருத்தை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

அவருடைய அனக வாழ்வை உணர்ந்து கொண்டால் தான், இறந்தாரை எழுப்பலாம் என்ற அவருடைய வாசகத் தின் முழுப் பொருளையும் தெரிந்து கொள்ள முடியும்.

மனிதனின் உண்மை அவன் உள்ளிருக்கும் ஆன்மநிலை. அது செயலற்றதாகி அவன் உள்ளே ஒடுங்கிக் கிடக்கிறது. அதனால் அவன் வெறும் விலங்கு போல வயிறுபுடைக்கத் தின்றும், இனவிருத்தி செய்து வாழ்ந்தும், முடிவில் மடிந்தும் போகிறான். மீண்டும் மீண்டும் பிறவி எடுக்கிறான். மனிதப் பிறவியின் நிலையான இன்ப வாழ்வை உணராமல் துன்பப் பட்டுத் துன்பப்பட்டு மீண்டும் இறந்துபோகிறான்.

சுத்தசன்மார்க்க வாழ்வினால் அவன் உள் செயல்படாமல் இருக்கும் ஆன்மா விழிப்படையும். செத்துக்கிடந்த அவன் ஆன்மா எழுந்து அவனை அனக வாழ்வில் வாழ அழைக்கும். இதனால் அவன் சாகமாட்டான். நிலையான பேரின்ப அனு பவத்தில் இருப்பான். இதுதான் வள்ளலார் சொன்ன செத்தவன் எழும் உண்மை.

இந்தக் கருத்தைத்தான், பல பாடல்களில் வள்ளலார் கூறுகிறார். செத்தாரை எழுப்புவது சாதாரண சித்து செயலால் நடைபெறும் நிகழ்ச்சி. செத்தவனை ஒருதரம் எழுப்பினால் மீண்டும் அவன் சாகாமல் இருக்கப் போவதில்லை. அவன் தன்விலங்கு வாழ்க்கையில் உழன்று துன்பப்பட்டு இறந்துதான் போவான். இதனால் யாருக்கும் எந்த நிலையான பயனும் ஏற்படாது.

ஓர் ஆன்மா நித்தியானந்த வாழ்வில் நிலைபெறும் வரை அதற்குப் பிறவி தொடர்ந்து கொண்டே இருக்கும். இது ஆண்டவனின் நியதி.

உலகில் புலன் இன்ப வாழ்வில் விலங்குகள்போலவாழ்ந்து இறந்து போன ஒருவனை மீண்டும் உயிர் பெற்று எழச் செய்

வதில் ஒரு பயனும் இல்லை. செத்தவன் மீண்டும் பிறவி எடுக்காமல் அவன் சூனியத்தில் ஒடுங்கிக் கிடப்பதாலும் பயனில்லை. இறந்து போனவன் மீண்டும் பிறக்காமல் அவனை எழுப்பி அவன் மறு பிறப்பைத் தடை செய்வது திருவருள் ஆணைக்கு மாறான செயலாகும். நியதிக்கு எதிரான காரியமாகும். இது சன்மார்க்கமல்ல.

மனிதன் தன்னைப் பிரமிக்க வைக்கும் அற்புதங்களில் மயங்கி வீண் போகக் கூடாது. அவன் திருவருள் நிலைபெற்று உலகில் அமைதியும், ஆனந்தமும் ஏற்படப் பாடுபட வேண்டும். இதுதான் திருவருளின் விருப்பம்.

வள்ளலார் யாரைச் செத்தவர் என்று சொல்லுகிறார்?

உலகில் மனிதனாகப் பிறந்தும், நிலையான வாழ்வைப் பெறாது உடல் இன்பத்தையே குறிக்கோளாகக் கொண்டு விலங்குகளைப்போல் வாழும் மனிதர்கள் எல்லாருமே செத்துப் போனவர்கள் என்கிறார்.

செத்துப் போனவர்கள் என்றால் சத்துப் போனவர்கள். சத்து என்றால் நம் உள் உயிருக்கு உயிராக இருந்து இயக்கும் சக்தி. அதாவது கடவுளான்மா. அந்த ஆன்மா செயலற்றுக் கிடக்கும் நிலையில் வாழ்கிற மனிதர்கள் எல்லாம் உண்மையில் செத்தவர்களே.

உடலில் உயிர் இருந்தும், அதை நிலைத்து வாழவைக்கத் தெரியாமல் வாழும் செத்துப் போன மனிதர்களையே அவர்கள் அகத்தில் இருந்து எழுப்பலாம் என்கிறார் வள்ளலார். அவர்கள் இறவாமல் அனக வாழ்வில் வாழலாம் என்கிறார்.

இறை உண்மையை மறந்து வெறும் உடல் இன்பத்தில் சிக்கி வாழ்பவன் உயிருடன் இருந்தாலும் அவன் செத்தவனே. திருஅருளால் அவன் இறை உண்மையை உணர்ந்து கொள்ளும்படிச் செய்ய வேண்டும். அதனால் அகமும், புறமும் ஒத்து விளங்க அவன் அக எழுச்சி பெறுகின்றான். மரணமிலாப் பெரு வாழ்வைப் பெறுகிறான். அவன் தன் உடலுடனேயே நித்திய இன்பத்தில் வாழ்வான்.

ஒருவனை அவன் செயல் அற்ற அகத்தில் இருந்து எழச் செய்து அவனை வாழவைப்பதுதான் வள்ளலார் சொன்ன செத்தாரை எழுப்புதல் ஆகும்.

இது வெறும் அற்புதமோ அதிசயமோ அல்ல. இறை வனின் விருப்பமே இதுதான்.

''என்னே உலகில் இறந்தார் எழுதல்மிக
அன்னே அதிசயமென் றுடுகின்றார்-இன்னே
திருஅம் பலத்தான் திருநோக்கம் பெற்றார்க் (கு)
உருஅம் பலத்தேயென் (று) உன் ''

இப்போது இறைவனின் அருளால் அனக வாழ்வில் வாழும் நிலையைப் பெற்றிருப்பவர்கள், ஒரு காலத்தில் ஆன்ம எழுச்சியில்லாமல் அகக் கல்லறையில் புதைந்து கிடந்த நடைப்பிணங்கள்தான்.

இன்று அவர்கள் ஆன்மா உயிர்த்தெழுந்து அவர்களை அம்பல வாழ்வு வாழச் செய்திருக்கிறது.

மனிதர்கள் தங்கள் உள்ளேஇருக்கும் ஆன்மாவை எழுப்பி அதனுடன் இணைந்து வாழாமல் விலங்குகளைப் போல் வாழ்ந்து கொண்டிருப்பது, உயிருடன் கூடிய உடலுடன் இருந்தாலும் அவர்கள் உண்மையில் இறந்த நிலையில் இருப்பவர்களே.

அருள் வாழ்வு வாழ்ந்து அழியாமல் இருப்பதுதான் உண்மையான மனித வாழ்வு ஆகும். நம்முடைய மெய்ப் பிறப்பு அருள் உண்மையை அறியாத காலத்திலேயே, இரண்டாம் பிறப்பு (துவி ஜென்மா) என்றும், மறுபடியும் பிறத்தல் (Regeneration) என்றும், தெய்வப் பேறு (Divine Life) என்றும் சொல்லி வந்திருக்கிறார்கள்.

ஆன்மப் பக்குவம் பெறாத நிலையில் மருளால் எழுந்த மயக்கத்துடனும், வெற்றுப் பாவனையுடனும், கிரியா சடங்குகளுடனும் இருந்தது அகப்பிறவி.

அகப் பிறவியை அதன் செத்த நிலையிலிருந்து எழுப்பி, அதற்கு இறைவன் உண்மையை உணர்த்தி, அதனுடன் அனகமாக வாழும் முறைதான் வள்ளலார் சொன்னது.

தன்உள் இருக்கும் ஆன்மாவை எழுப்பி அதனுடன் வாழ்பவனே சுத்த சன்மார்க்கி. மரணமிலா பெருவாழ்வைப் பெற்றவன். நிலைத்து வாழ்ந்து கொண்டிருப்பவன்.

இவன் கடவுள் மயமாகிறான். இவனே எல்லாமும் ஆகிறான். என்றும் யார்க்கும் இடையூறாக இல்லாமல் அவர் களுக்கு உதவி செய்யவே வாழ்கிறான்.

ஆகையால் எத்தனை ஆயிரம் பேர் அகஆன்மாவை எழுப்பிக்கொண்டு இறை மய வாழ்வு வாழ்ந்தாலும், அவர் களால் மக்கள் சமுதாயத்திற்கு எந்தத் துன்பமும், பிரச்சினை யும் ஏற்படாது. அவர்களால் நன்மையே விளையும்.

வள்ளலார் சொன்ன செத்தாரை எழுப்பலாம் என்ற உண்மையை அறியாதவர்கள் ஏதேதோ தங்களுக்குத் தோன் றுவதைச் சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள்.

சுத்த சன்மார்க்க ஜோதி உதயமாகி எங்கும் தன் அருள் ஒளியைப் பரப்ப ஆரம்பித்துவிட்டது.

இறைவனின் அருள் ஒளியில் உலகம் உண்மையைத் தெரிந்துகொள்ளும். சென்ற கால மருள் மயக்க நெறிகள் எல்லாம் கனவாய், பொய்யாய், பழங்கதையாய்ப் போய் விடும். அனக சுத்தநெறி ஒன்றே நிலைத்து வாழும் நெறி என்பதை எல்லோரும் உணர்வார்கள். அந்த நெறியில் வாழ்ந்து ஆனந்தம் அடைவார்கள்.

அனக வாழ்வு நித்திய நிறை புது வாழ்வாக, அகம் இருந்து மலர்கிறது. இதனால் உள்ளமும், உயிரும், உடம்பும் அழிவில்லாமல் இருக்கும்.

அனக வாழ்வுதான் இறவாத, பிறவாத வாழ்வாகும். ய' என்ற எழுத்து ஆன்மாவைக் குறிக்கும். 'ய' என்ற எழுத்து தமிழில் பத்து என்ற எண்ணைக்காட்டும். கருநிலையில் ஆன்மா பத்துமாதங்கள் தாய் வயிற்றில் இருந்தபின்தான் குழந்தையாக வெளியாகிறது.

உடல் ஆன்மக்கரு மனித உருவம் பெற்று வெளிவரு வதற்கு பத்து மாதங்களே போதும். உடல் ஆன்மக்கரு

மனித வடிவம் பெறும் அற்புதம் பத்து மாதங்களில் நடை பெற்றுவிடுகிறது.

ஆனால் கடவுள் ஆன்மக்கரு, நிறை நிலையிலேயேதான் மனிதனில் இருக்கிறது. அப்படி இருந்தும் அதன் உண்மைப் பிறப்பு அவனிடம் தோன்றுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வேண்டி இருக்கின்றன.

கடவுள் ஆன்மக்கரு, மனிதனில் தோன்றி வளர்ந்து செயல்பட ஆரம்பித்துவிட்டால், அது மனிதனை மரணமடை யாமல் இருக்கச் செய்துவிடும். அவன் மரணமிலாப் பெரு வாழ்வில் நிலைத்த இன்பத்துடன் வாழ்வான்.

பிறந்து இறந்துபோகும் மருள்ஞானப் பிறவியைத் தாய் வயிற்றில் இருந்து பெற்ற மனிதன், அனக உருவத்துடன் அழியாது இருக்கும் அருள்ஞானப் பிறவியை தன் அகத்தில் இறைவனுடன் இணைந்து இருந்து பெற்றுவிடுகிறான்.

அருள்ஞானப் பிறவியில் மனிதன் பிறக்கும்போதே மாற்றம் இல்லாமல் முழு நிறைவுடன் முத்தேக சித்தியுடன் பிறந்துவிடுகிறான். அதிலே நிலைத்தும் வாழ்கிறான்.

சாதாரண மனிதன் உயிரோடு இருந்தாலும் செத்த பிணமாகவே வாழ்ந்து கொண்டிருந்தான். அவன் பிறந்து கொண்டும், மறைந்துகொண்டும் இருந்தான். இவ்வாறு அநித்தியமாக இருந்த மனிதன் அனக வாழ்வைப் பெற்று நித்தியமாகிவிட்டான், அவன் இனிமேல் சாகமாட்டான், பிறக்கமாட்டான். அனக கனக தோற்றத்துடன் ஆனந்த மாக நிலைத்து வாழ்வான்,

வடலூர் சத்திய ஞானசபை இந்த இறவா இன்ப வாழ்வை மக்களுக்கு அளிப்பதற்காகவே எழுந்திருக்கிறது. அதைக்கண்டு வணங்கிட வாரீர்! அனக வாழ்வு பெற்று ஆனந்தம் அடைய வாரீர்!

# 9. அருட்பெருஞ் ஜோதியின் வடிவம்

இந்த நூலின் முதல் அத்தியாயத்தில் அருட்பெருஞ் ஜோதிக் கடவுளைப் பற்றிப் பொதுவாக விளக்கி இருந்தோம். இங்கு அருட்பெருஞ் ஜோதியின் தோற்றத்தையும், அதன் வடிவத்தையும் விரிவாக ஆராய்வோம்.

கடவுளை உணர்த்த வந்த சொற்களிலே அருட் பெருஞ் ஜோதி என்ற சொல் ஆழ்ந்த பொருளுடையது. வள்ளல் பெருமான் தாம் பெற்ற பேரின்ப அனுபவத்தின் மூலமாக நமக்கு வழங்கி இருக்கும் ஒப்பற்ற மந்திர வாசகம் இது.

அருளின் பேராற்றலையும், ஜோதி வடிவத்தின் பெருநிலையையும் உணர்த்தவே, அவருக்கும் ஜோதிக்கும் இடையில் பெரும் என்ற சொல்லை வைத்திருக்கிறார் வள்ளலார். பெரும் என்ற சொல் அருள், ஜோதி என்ற இரண்டையும் இணைக்கும் பொதுப் பண்புச் சொல்லாக அவைகளுக்கு இடையில் நின்று இணைந்து விளங்குகிறது.

அருள் எல்லா ஆற்றல்களையும் உடையது. அது ஐம் பெரும் சக்திகளாக உலகில் விரிந்து செயல்படுகிறது.

பொருட் சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, யோக சக்தி, அருட் சக்தி என்ற ஐம்பெரும் சக்திகள்தான் உலக இயக்கங்களை இடைவிடாது நடத்தி வருகின்றன.

இவைகளைத் தவிர அறிவனுபவத்தினால் அக உணர்வில் விரிந்து ஒடுங்கும் மாயா சக்திகள் ஆறு கோடி இருக்கும் என்

பார்கள் ஞானிகள். இந்தச் சக்திகளும், இனிமேல் உலகம் அறிந்து கொள்ளப் போகிற சக்திகளும், வள்ளல் பெருமான் காட்டி இருக்கும் அருட்பெருஞ் சக்திக்குள் அடங்கிப்போகும்.

இந்தச் சக்திகள் எல்லாம் நிலைத்துச் செயல்படவும், அதன் மூலமாக ஏற்படும் விளைவுகள் விளங்கவும், களமாக இருப்பது பெருஞ்ஜோதி. அந்தச் சக்திகளுக்குக் கருப்பொருளாக இருப்பதும் பெருஞ் ஜோதி.

பெருஞ்ஜோதி உலகம் காணாத ஒன்று. இதுவரையில் உலகம் கண்ட எத்தனையோ ஜோதிகளைப் பற்றி அறிவியல் உலகம் ஆய்ந்து சொல்லி இருக்கிறது. அவற்றுள் எந்த ஜோதியும் வள்ளல் பெருமான் உலகுக்கு வழங்கி இருக்கும் அருட் பெருஞ்ஜோதிக்கு இணையாகாது.

அனாதியாய், நித்தியமாய், இதுவென்று சுட்டிக் காட்டப் படாததாய், எல்லாம் வல்லதாய், யாவுமாய், தோன்றவும், விளங்கவும், மறையவும் காரணமாய் இருப்பது அருட்பெருஞ் ஜோதி. அவைகளில் எதுவும் அல்லாததாய், எங்கும் என்றும் நிறைந்ததாய் இருப்பது அருட்பெருஞ்ஜோதி. அருட் பெருஞ்ஜோதி இவ்வளவு சக்திகளையும் உடையது என்பதை எப்படி அறிந்து கொண்டீர்கள் என்று கேட்கலாம்.

அருட் பெருஞ்ஜோதி எல்லாம் வல்லதாய், யாவுமாய்த் திகழ்ந்து கொண்டிருக்கும் உண்மையை, அதுவே நாமாகி இருந்து உணர்த்த, உணர்கிறோம்.

அருட்பெருஞ் ஜோதியை முகத்துக்கு முகமாகப் பார்க்க முடியாது. காரணம் அது வேறு நாம் வேறு அல்ல. அதுவும் நாமும் ஒருவரை ஒருவர் உணர்ந்து ஒன்றி இருக்கும் போது, அது தம்மைப் உணர்த்த நாம் அதைப் பற்றி உணர்ந்த உண்மையைத்தான் சொல்கிறோம்.

### அருட்பெருஞ் ஜோதியின் பொது உண்மைகள்

எங்குமாய் எல்லாமாய் இருக்கும் அருட்பெருஞ் ஜோதியை நாம்உணர்ந்து அனுபவிப்பதற்காக, அருட்பெருஞ்

ஜோதியே நம் உள் ஆன்மச் சிற்றுருவாய் இருக்கிறது. நம்முள் நாமாக நம்முடனேயே இருக்கிறது.

நம் உள் இருக்கும் கடவுள் ஆன்மச் சிற்றுருவே கடவுளும் நாமும் ஒன்றி இருக்கும் பொது நிலை. எங்கும் நிரம்பி இருக்கும் ஆண்டவர் நம் சிரநடுவில் இருக்கும் மெய்ஞ்ஞான பீடத்தின் ஆன்மச் சிற்றுருவில் தம் முழுத் தன்மையுடன் இருக்கிறார். அவரை நமது சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்தில் தான் காண முடியும்; அவரை நம்உள் கண்டு அவருடன் ஒன்றித்தான் அவரை அனுபவிக்க முடியும்.

இந்த அக அனுபவ நிலையைப் பெற்றவர்கள் தங்கள் அருள்ஞான உணர்வால் உலகம் எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருளைக் காண்பார்கள்.

வள்ளல் பெருமான் தாம் பெற்ற அகஅருள் அனுபவ நிலையை அனுபவித்து அனுபவித்துப் பாடுகிறார்.

கள்ளுண்டாள் எனப்புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையில் உண்டதும் உண்டடி நான்
எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் அன்றே
என்றும் இற வாநிலையில் இருத்துங்கள் உலகர்
உள்ளுண்ட போதுமயக்(கு) உற்றிடுங்கள் அலவே
உள்ளமயக்(கு) அனைத்தினையும் ஒழித்திடுங்கள்மடவாய்
அள்ளுண்ட பிறரும் எனை அடுத்தடுத்துக் கண்டால்
அறிவுதரும் அவர்க்கும் இங்கே யானுண்ட கள்ளே

என்றுதாம் பெற்ற அருள்ஞான உணர்வை, 'அனுபவமாலை'ப் பதிகத்தில் இவ்வாறு வள்ளலார் பாடி இருக்கிறார். தம் அக அனுபவ நிலையில் இருந்து அருட் பெருஞ்ஜோதியை உலகுக்குத் தெளிவாகக் காட்டுகிறார்.

இந்தப் பாடலில் வரும் கள் என்ற சொல்லுக்கு அருள் மதி, அருள்மது, அருட்பெருஞ்ஜோதி என்று பொருள்.

அருட்பெருஞ்ஜோதி நிரம்பி இருக்கும் அகன்ற வான வெளியே, கனகசபை. நம் அக வெளியில் அதை அருள் அறிவால் முயன்றுகாணலாம்.

நம் அகவெளியில் நமக்குள் இருப்பது சிற்சபை. சிரநடுவில் இருப்பது ஆன்ம ஆலயம். இந்த மெய்ஞ்ஞான பீடத்தில் தான் அருட்பெரும் ஜோதி இருக்கிறார். இங்குதான் ஜோதியைக் காணவும், துய்க்கவும் முடியும்.

'' அருட்பெருஞ்ஜோதி என்னும் அமுதக்கள் உண்டவன் கீழான உடல் இன்ப இச்சையில் உழன்று ஆடமாட்டான். மரணமிலாப் பெருவாழ்வு நிலையில் நிலைபெற்றுப் பேரின்பத் தெளிவில் மிதப்பான் '' என்கிறார் வள்ளலார்.

'' அருட்பெரும் ஜோதிக்கள் அறிவு மயக்கத்தைக் கொடுக்காது. அவனிடம் இருந்த அறியாமை என்னும் மயக்கம் முழுவதையும் அது நீக்கி விடும். என்னிடம் பற்றும் பழக்கமும் உடையவர்கள் அடிக்கடி என்னை வந்து பார்த்தால் நான் உண்ட கள் அவர்களுக்கு மெய்யறிவு விளக்கத்தைத் தரும் '' என்கிறார் வள்ளலார்.

அது போல சத்திய ஞானசபைக்கு அடிக்கடிவந்து அருட்பெருஞ்ஜோதியைத் தரிசித்தாலும் அதுஅவர்களுக்கு உண்மை ஞானத்தை வழங்கும் என்பது கருத்து.

ஞானசபையின் உண்மையை அறியாதவர்கள் கூட ஆண்டு தோறும் தவறாமல் தைப்பூசத்திற்கு வடலூர் செல்கிறார்கள். பெருங் கூட்டத்தில் இடிபட்டும், எவ்வளவோ பாடுபட்டும் சத்திய ஞானசபையில் ஏழு திரைகளை விலக்கிக் காட்டும் அருட்பெருஞ்ஜோதியைத் தரிசித்து வருகிறார்கள்.

இவர்கள் எந்த அளவுக்குக் கடவுள் உண்மையை அறிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை நாம் அறியோம்.

அருட்பெருஞ் ஜோதியை ஒவ்வொருவரும் தங்கள் அகஞான சபையில் காண்பது முக்கியம். அதற்கு அமைதியும், தயா ஒருமையும் அவசியம். இந்த முறையில் மக்கள் சத்திய ஞானசபையில் வழிபாடு நடத்த வடலூர் தெய்வ நிலையங்களுக்கும், சன்மார்க்க சங்கங்களுக்கும், அதன் தொண்டர்களுக்கும் பயிற்சி அளிக்க வேண்டும்.

ஒவ்வொருவரும் புறத்தே ஞானசபையில் அமைதியோடு இருந்து அருட்பெருஞ்ஜோதியைத் தரிசித்து, தனிமையில் தியானித்து, அக அனுபவத்தில் அருட்பெருஞ்ஜோதியைக் காணவேண்டும். ஒருமைத் தியானத்தில் இருக்கும்போது அருள்ஞானக் கண்ணுக்கு அருட்பெருஞ்ஜோதி மூன்று விதமாகத் தோன்றும். அருட்பெருஞ்ஜோதி மூன்று இடங்களில் மூன்று விதமாகக் காட்சி தரும் அனுபவத்தை வள்ளலார் மிக அழகாகச் சொல்கிறுர்.

ஈற்றறியேன் இருந்திருந்திங் (கு) அதிசயிப்ப (து)என் நீ
என்கின்ருய் நீ எனவிட்(டு)ஏகுதொறும் நான் தான்
காற்றறியாத் தீபம்போல் இருந்திடும் அத் தருணம்
கண்டபரி(சு) என்புகல்வேன் அண்டபகிர் அண்டம்
தோற்றறியாப் பெருஞ்சோதி மலைபரநாதத்தே
தோன்றியதாங்(கு) அதனடுவே தோன்றிய
தொன்றதுதான்
மாற்றறியாப் பொன் ஒளியோ அவ்வொளிக்கும் ஆடும்
வள்ளல்அருள் ஒளியோ ஈ(து)அதிசயிக்கும் வகையே

என்று அனுபவ மாலையில் தாம் அருட்பெருஞ்ஜோதியைப் பார்த்த காட்சி அனுபவத்தை வியந்து வியந்து பாடுகிறுர்.

அருட்பெருஞ்ஜோதி அகண்ட தீபத்தின் முன்ஞல்ஒருமை தியானத்தில் வள்ளலார் இருக்கிறுர். அவர் உள் இருக்கும் அருட்பெருஞ்ஜோதியின் அற்புதக் காட்சி அவருக்குத் தெளிவாகத் தோன்றுகிறது.

அலைந்து கொண்டிருந்த அவருடைய மனம் அடங்கியது. அருள் உணர்வாக இருக்கிறுள் ஆன்மத் தலைவி. இந்தச் சமயத்தில் ஆன்மத் தலைவியைத் தனியே விட்டுவிட்டு மனம் என்ற தோழி சென்றுவிடுகிறுள். இந்தப் பேரின்ப அருள் அனுபவத்தைத்தான் வள்ளலார் அனுபவித்துச் சொல்கிறுர்.

சுத்த நிலையில் ஆன்மா அருள் உணர்வு மயமாய் ஒளி விட்டு நிற்கும் இனிய அனுபவத்தைக் காற்றறியாது அசையாமல் இருக்கும் தீபத்துடன் ஒப்பிடுகிறுர்.

அவருக்கு அருள் உணர்வு அனுபவம் விரிகிறது. அகண்ட வெளி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அருட்பெருஞ்ஜோதி யின் ஆனந்தத் தோற்றம், அவர் அருள்ஞானக்கண்ணுக்குத் தெளிவாகத் தெரிகிறது.

அருட்பெருஞ்ஜோதி அனாதியானது; நித்தியமானது; அது தோன்றாமல் தோன்றி இருப்பது. ஆகாயம் அளாவிய மலைபோல நிலைத்து நிற்பது இந்தப் பெரும்ஜோதி. இது எந்தக் காலத்திலும், எதனாலும், அசைக்கவும், அழிக்கவும் முடியாத அருள்ஜோதி. நாம் காணும் பொருள்களில்எல்லாம் பொதுவாக மலைதானே பெரும் தோற்றத்துடன் இருக்கிறது. அதனால் அருட்பெருஞ்ஜோதியை மலைக்கு ஒப்பிடுகிறார்.

பிரபஞ்ச வெளியில் நிறைந்திருக்கும் அருட்பெருஞ்ஜோதி யின் அணுத்துகளே, அதன் பூரண ஞான உணர்வுடன் மனி தனில் ஆன்மாவாக விளங்குகிறது. அவன் மெய்ஞ்ஞான பீடத்தில் நடம் ஆடிக்கொண்டிருக்கும் அதன் ஒளியைத்தான் பொன்னொளி என்கிறார்.

உலகத்தில் இருக்கும் பொன்னுக்கு மாற்று உண்டு;அழிவு உண்டு. அருட்பெருஞ்ஜோதிக் கடவுளாகிய பொன்னுக்கு மாற்றும் இல்லை; அழிவும் இல்லை.

நம்உள் இருக்கும் சிற்சபையில் நடனமிடும் ஆன்ம சிற்ஜோதிதான் மாற்றறியாத பொன் ஒளி.

மனிதனுக்கு அருள் அனுபவம் சேராதபோது அவன் மெய்ஞ்ஞான பீடத்தில் ஆன்ம ஒளி செயலற்றதாய்க் கிடக் கிறது. பின்னர் அவன் அருள் வாழ்வைப் பெறும் போது அனக நிறை அனுபவத்தோடு அவனுள் ஆன்ம ஒளி ஓங்கிப் படர்கிறது. மனிதனின் ஆன்மாவில் அகமிருந்து ஆள்வது எல்லாம் வல்ல திருஅருளே.

மனிதன் பக்குவநிலையைப் புறத்திலிருந்தும், அக உணர் விலிருந்தும் தக்க காலத்தில் பெறுவதற்கு ஆன்மஜோதி அவனுக்குத் துணைச் செய்கிறது. இந்த அகஜோதியைத்தான் 'வள்ளல் அருள் ஒளி' என்று போற்றுகிறார் வள்ளலார்.

அருட்பெரும்ஜோதி பரநாத வெளியில் ஜோதிமலையாய்த் தோன்றுவது முதல் காட்சி. ஜோதிமலையின் நடுவில் மாற்ற றியாப் பொன்ஒளியாய்த் தோன்றுவது இரண்டாவதுகாட்சி. பொன் ஒளிக்குள் வள்ளல் அருள் ஒளி ஆடிய வண்ணமாகத் தோன்றுவது மூன்ருவது காட்சி.

இந்த மூன்று காட்சிகளை யும்,அந்தக் காட்சிகள் தோன்றிய இடங்களையும், அனுபவித்து வள்ளலார் பாடி இருக்கும் அழகை அந்தப் பாடலைப் பாடி நாமும் அனு பவிக்கலாம்.

அகத்திலிருந்துதான், அருட்பெருஞ்சக்தி தோன்றி, பக் குவ காலத்தில் அவன் உடம்பை அழியாமல் செய்கிறது.

அக அனுபவத்தில் அவனுல் உணரப்பட்ட அருட்பெரும் ஜோதியே ஆன்ம நிலையிலும், அதைச் சூழ்ந்த அண்ட வெளி யிலும் இருக்கிறது.

அதுவே மனிதனுக்கு அனுபவம் தருவதற்காக மூன்று இடங்களிலும், மூன்று தன்மையுடன் தோன்றியது. முடிவில் அதுவே அனுபவத்திலும் அனுபவமாக இருந்தது.

அருட்பெருஞ்ஜோதி எங்கும் எந்த மாற்றமும் இல்லா மல் ஒரே விதமாகவே இருக்கிறது.

இருப்பினும், அதனுடைய அருட்பேராற்றல் ஐம்பெரும் சக்தியாக புறத்தில் சூழ்கிறது. அப்போதும் அருட்பெருஞ் ஜோதியின் அகநிலை மாறுவதில்லை. அது புறத்தே எண்ணற்ற பொருளாகத் தோன்றுகிறது. அதனுல் அதன்அகமே பொரு ளாக மாறிவிட்டதாகவும்,அது மறைந்து புதியசேர்க்கையால் வேறு ஏதோ ஒரு புதிய பொருள் தோன்றிவிட்டதாகவும் நினைக்கவும் தோன்றும்.

உண்மை அப்படியில்லை. ஒவ்வொரு பொருளின் அகத் திலும் இருப்பது ஒரே அருட்பெருஞ்ஜோதிதான். அது என்றும் நிலையாக இருப்பது. அதைச்சுற்றித் தோன்றிய மாற்றங்கள் எல்லாம் காலத்தால் மறைந்து போகக் கூடியவை.

மனிதனில் அவன் ஆன்ம அகத்தில்தான் அருட்பெருஞ் ஜோதி தன் முழுத் தன்மையுடன் நிலைகொண்டிருக்கிறது. அவன் ஆன்ம அகத்தில் இருக்கும். அருட்பெரும் ஜோதியும், வெளியில் அதன் அருளால் சூழ்ந்திருக்கும் ஐம்பெரும் சக்தி களும் அவன் அருள் அனுபவத்தில் அனகமாய்த்திகழ்கிறது.

அவன் அகம் இருந்து அருட்பெருஞ்ஜோதியே அனகமாய்த் தோன்றி, அவனிடம் நிறை அனுபவத்துடன் விளங்குகிறது. இந்த அருள் அனக அனுபவத்தைப் பெற்றவரே அருட்பெரும் ஜோதியின் முழுத் தன்மையுடன், அதன் ஆற்றலையும் பெற்ற அருட்பிரகாசத் தோற்றத்தோடு விளங்குகிறார்.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுளின் முழு உருவம்

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை

அருட்பெருஞ் ஜோதி!''

என்று இருபத்தைந்து தனி எழுத்துக்களுடன் தோன்றுகிறது.

கடவுளின் நிறை வடிவம், என்றும் எங்கும் இருப்பது தான். ஆனால் அகண்ட வெளியில் ஒரு குறிப்பிட்ட ஆன்மா வில், அது தன் முழு இயல்போடும், ஆற்றலோடும் வெளியா கிப் பயன் தருகிறது.

அப்போது அந்த ஆன்மா ஏற்றுள்ள மனித வடிவில் அருட்பெரும்ஜோதி ஆண்டவரின் அமுத ஒளி நிரம்புகிறது.

அருட்பெரும்ஜோதியின் அமுத ஒளி நிரம்பிய மனிதன் அந்த மகா மந்திரத்தின் பூரண உருவைத் தன்னுள்கொண்டு ஜொலிக்கிறான்.

அருட்பெருஞ்ஜோதியின் அடியும், முடியும், நடுவும் ஒன்றாகி அவனே அருட்பெருஞ் ஜோதியாய் அனுபவம் பெற்று வாழ்கிறான்,

நிறைவான இந்தக் கடவுள் மனிதனே, அருட்பெருஞ் ஜோதி மகா மந்திரத்தின் முதல் எழுத்தும் முடிவெழுத்தும் சேர்ந்த அதி மனிதனுகிருன். அதி என்ற இரண்டு எழுத்துக் களும் அருட்பெருஞ்ஜோதி மகா மந்திரத்தின் முதலும் ஈறு மாக இருப்பது. ஆதலால் இந்த அதிமனிதன் அருட்பெருஞ் ஜோதி மந்திர வடிவினனுகவே இருக்கிருன்.

### அருட்பெருஞ் ஜோதியின் விளைவு

இயற்கையில் முழு நிறைவுடையது அருட்பெருஞ்ஜோதி. ஆனுல், அது சூனிய வெளியிலும், ஐம்பூதப் பொருள் உலகிலும், சாதரண உயிரின் ஜீவ உணர்விலும், மனித மனே அறிவிலும் தன் பூரண ஆற்றலுடன் தோன்றுவதில்லை.

சுத்த மோன நிலையில் அகஜோதி ஆன்ம ஞானக் காட்சி யாய் இருக்கிறது.

மனிதன் ஆன்ம ஞானத்தாலும், தன் முயற்சியாலும், யோக சாதனு பழக்கத்தாலும் ஓரளவு ஆன்ம சக்தியைப் பெறுகிருன். ஆன்ம சக்தி அவனுக்குச் சில சித்திகளையும் சக்திகளையும் கொடுக்கிறது,

மனிதன் பெறும் ஆன்ம சக்தியும், அருள் சக்தியும் ஒன்றல்ல. தனித்தனித் தன்மைகளையும் ஆற்றல்களையும் உடையவை.

அருள் சக்தி எத்தகைய யோக சாதனு பழக்கத்தினுலும், வேறு எதனுலும் அடைய முடியாதது. ஆண்டவர் திருவருள் ஒன்றின் மூலமாகத்தான் அருட்சக்தியை அடையலாம்.

மனிதனின் அறிவுச் செருக்கும் அகங்கார மமதையும் அடங்கி அவனிடம் தயா ஒழுக்கம் ஏற்படும் போது, திருஅரு ளால் அருள் சக்தி அவனிடம் தோன்றும். அருட்சக்தியால் மனிதன் பெறுவதற்கு அரிய பேறுகள் எல்லாம் பெற்று நிலை யான பெருவாழ்வு வாழ்வான்.

விருப்பு வெறுப்போடு கூடிய புலன் இன்பதுன்ப வாழ்வில் இருக்கும் மனிதனுக்குத் திருவருளைப் பற்றிய அறிவு குறை

வாகவே இருக்கிறது. அவன் வேண்டிப்பெறும் திருவருளும் அவனுக்கு ஓரளவு நன்மையைச் செய்கிறது.

ஆன்ம சக்தியால் ஓரளவு அறிவாற்றலும் சக்தி சித்திகளும் பெற்ற சிலரை, அருளாளர் என்றும், அவர்கள் வாக்கை அருள் வாக்கு என்றும், அவர்கள் செயல்களை அருள் அற்புதங்கள் என்றும் போற்றி கொண்டு இருக்கிறார்கள்.

இவையெல்லாம் பேரருட் பெருங்கடவுளின் அணுஅளவு ஆற்றலின் விளைவுகூட இல்லை. ஆண்டவனின் நிறையருள், சகல சக்தி சித்திகளையும் கொண்டது. அதனைப் பெற்றவர்களை பயம், கவலை, அவா, ஐயம் முதலியவை நெருங்க மாட்டா. அவர்களை மரணமும் நெருங்காது.

இறைவனின் நிறையருள் ஒன்றினால்தான் மனிதன் இறவாமை பெற்று நிலைத்த இன்பத்துடன் வாழ முடியும். இது வள்ளலாரின் அருள் அனுபவம்.

மனிதனை இந்த உலகில் உண்டாக்கி அவனுக்குச் சுகதுக்கங்களைக் கொடுப்பதன் மூலம் இறைவன் அவனைப் பக்குவப் படுத்தி வருகிறார்.

எதற்காக அவனைப் பக்குவப்படுத்தி வருகிறார்? இறைவனுடைய நிறை அருளை அறிந்து அதை அவன் அடைந்து உய்வதற்காகத்தான்.

மெய்யருள் ஞானம் சாதாரண மக்களும் உணர்ந்து கொள்ளும் அளவுக்கு வளர்ந்திருக்கிறது. இப்போது பலரும் அதை அறியத் தொடங்கி இருக்கிறார்கள்.

இறைவனே தம் அருள் ஞானம் தோன்றுவதற்கு உரியவராக வள்ளலாரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

வள்ளலார் தம் உள் அனுபவித்த அனுபவக் காட்சியைத் தான் ''அருட்பெருஞ் ஜோதி'' என்று சொன்னார். அருட்பெருஞ்ஜோதி அவரைத் தம் அருட்பிரகாச வடிவத்துடன் நிலையாக வாழும்படிச் செய்திருக்கிறது.

சன்மார்க்கத்தில் சென்ற வள்ளல் பெருமானிடம்தான் முதல் முதலில் அருட்பெருஞ்ஜோதி தோன்றி, அவரை

நித்திய வாழ்வு நிலைக்கு உயர்த்தி இருக்கிறது. சமயநெறிகளில் சென்ற முன்னோர்கள் யாரிடமும் அருட்பெருஞ்ஜோதி முழுமையாகத் தோன்றியதில்லை. அதன் ஆற்றலில் ஒரு சிறு பகுதி அவர்களிடம் வெளியானது என்னவோ உண்மைதான்.

அருட்பெரும் ஜோதி முன்னோர்களிடம் அருட்ஜோதி என்றும், பெருஞ்ஜோதி என்றும், அரும்பெரும் ஜோதி என்றும்' பரஞ்ஜோதி என்றும், தோன்றி இருக்கிறதே ஒழிய அருட்பெருஞ்ஜோதியாக வெளியானதே இல்லை.

ஒருவேளை நமக்குத் தெரியாத, நாம் அறியாத யார் மூலமாவது அருட்பெருஞ்ஜோதி என்ற சொல் வெளியாகி இருந்தாலும், அது சுத்த சன்மார்க்க முத்தேக சித்தியை வழங்கிய அருட்பெருஞ்ஜோதியாகத் தோன்றவில்லை. தோன்றிச் செயல்படவில்லை. இது சத்தியம்.

வள்ளலாரின் ஆன்மச் சிற்றுரு, திருவருளால் நிறைவு பெற்று, ஆண்டவர் உண்மை முழுவதையும், ''அருட்பெருஞ் ஜோதி''யாகத் தெரிந்துகொள்ள அவருக்கு உதவியிருக்கிறது.

வள்ளலார் பெற்ற அருட் பேராற்றலின் உணர்வுதான் அகத்தே நிறையருட் சக்தியாகவும், புறத்தே நித்திய ஒளியால் ஆக்கப்பட்ட உலகமாகவும் இருக்கிறது.

ஒரே முழுமுதற் பொருளான அருட்பெருஞ்ஜோதிதான் எங்கும் நிறைந்திருக்கிறது. மெய்ஞ்ஞான உணர்வாக ஆன்ம நிலையில் வள்ளலாரால் உணரப்பெற்றதும், முழுமுதற் பொருளான அருட்பெரும் ஜோதிதான். அது தன் அருள் ஆற்றல் முழுவதையும் அவருக்கு அளித்திருக்கிறது. அவர் உடம்பை சுத்த பிரணவ ஞானம் ஆகிய முத்தேக சித்திகளுடன் நிலை பெறச் செய்திருக்கிறது.

தாம்பெற்ற அருட்பெருஞ்ஜோதியின் அனுபவத்தை ''உலகமெலாம் உதிக்கின்ற ஒளிநிலை, மெய் இன்பம் உறுகின்ற வெளிநிலை, என்று உபயநிலையாகி இலகிய நின் சேவடிகள்,'' என்று அருட்பெருஞ்ஜோதி ஆண்டவனின்

புறத்தோற்றத்தை ஒரு திருவடி நிலையாகவும், அக அனுப வத்தை மற்றொரு திருவடிநிலையாகவும் வள்ளலார் கூறுகிறார்.

சுத்த சத்விசாரத்தால் ஆன்ம நிலையத்தில் இருந்து அருட்பெருஞ் ஜோதியின் புறநிலை ஜோதியாகிய திருவடியை யும், அகநிலை அருள் அனுபவமாகிய திருவடி நிலையையும் வள்ளலார் விளக்குகிறார்.

அருட்பெருஞ்ஜோதி ஒன்றுதான் கடவுள். அது, எந்தக் காரணத்தாலும் யாராலும் பிரிக்க முடியாதது. முழு நிறை வோடு எங்கும் நிரம்பி இருப்பது.

அருட்பெருஞ்ஜோதியின் மெய் அருள் அனுபவம் ஒரு குறிப்பிட்ட ஆன்மச் சிற்றுருவிலிருந்து தோன்றும்போது, அருட்பெருஞ்ஜோதியை முழுமையாகவே அந்த ஆன்மா அனுபவிக்கிறது.

ஆன்மாவின் அருள் அனுபவம்தான் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் ஜோதியைப் புறத் தோற்றமாகவும், அருளை அதன் அகத் தன்மையாகவும் அறிந்து கொள்கிறது.

அகமும், புறமுமாக அருளும் ஜோதியும் காட்சி அளித் தாலும், அருட்பெருஞ்ஜோதி இருகூறாக இல்லை; சர்க்கரையும் அதன் இனிப்பும் போல் ஒன்றியே இருக்கிறது.

ஜோதித் தோற்றத்தை யாரும் எளிதில் காணலாம்; ஆனால் அதன் அருள் தன்மையை அவ்வாறு லேசில் காண முடியாது மனிதனுக்கு நிறை பக்குவம் ஏற்படும்போதுதான் அதனால் அருட்பெருஞ்ஜோதியின் அருள் தன்மையை உணரவும் அனுபவிக்கவும் முடியும்.

அருள் அனுபவ நிலையில் அகம்புறம் எங்கும் மாற்றமில் லாது அருட்பெருஞ்ஜோதி இருந்த போதிலும், அது அகத்தில் அருள் அனுபவமாகவும், புறத்தில் ஜோதியின் தோற்றமாக வும் செயல்படுகிறது.

அருள் அனுபவத்தை மனிதன் அவன் உள் இருக்கும் ஆன்மச் சிற்றுருவின் மூலமாகத்தான் அடைய முடியும். ஆன்மச் சிற்றுரு கடவுளிடமிருந்து பிரிவுபடாதது.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுளே தன் முழு இயல்போடு, எந்த ஒரு சிறு பொருளிலும். உயிரிலும், மனிதனிலும் இருக்கிறார். ஆங்காங்கு தன் புறக் கூறுகளையே வேறு வேறு தோற்றங்களாகவும், இயல்பாகவும், செயல்களாகவும் காட்டி வருகிறார். இந்தத் தன்மை முழுவதும் முழுமுதற் பொருளான அருட்பெருஞ்ஜோதிக்கு உண்டு.

எல்லாம் அருட்பெருஞ்ஜோதியாய் இருந்தபோதிலும், அதன் நிறை இன்ப அனுபவம் மனிதனின் உள் இருக்கும் ஆன்ம சிற்சபையில் இருந்துதான் கிடைக்கும்.

அகக்கூறாய் இருந்து அனுபவிக்கப்படுவது அருள்நிலை. புறக்கூறாக இருந்து ஜீவதேக உலகப் பொருள்கள் அனைத்துமாய்க் காட்சி தருவது ஜோதிநிலை.

அருட்பெருஞ்ஜோதியோ பிரிக்கமுடியாத ஒரே கடவுள், அவரை அவருடைய ஐம்பெரும் சக்திகளின் மூலமாகத்தான் அனுபவிக்க முடியும். ஆன்மாவைப் பற்றிய அருள் அனுபவம் பெற்ற மனிதனால்தான் அனுபவிக்கமுடியும்.

### அருட்பெருஞ் ஜோதியும், தயவும்

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள்உண்மை, அருளாய் அகத்திலும், பெருஞ்ஜோதியாய்ப் புறத்திலும் இருக்கிறது. அது ஆன்ம சிற்சபையிலிருந்து அனுபவிக்கப்படுவதாய் இருக்கிறது. அனுபவத்தில் அருளும் ஜோதியும் இரண்டுபடாத ஒரே அருட்பெருஞ்ஜோதியாக இருக்கிறது.

அருட்பெருஞ்ஜோதி சொல்லளவில் அருளும் ஜோதியுமாய்ப் பிரிந்தும், தனித்தும் இருக்கிறது. ஆனால் பொருள் அளவில் அதைப் பிரிக்கமுடியாது.

முன்னோர்களோ ஆன்மாவும் உடம்பும் தனித்தனி இரண்டு பொருள்கள் என்று சொல்லி வந்தார்கள். நித்தியானந்த வாழ்வு பெற நித்தியமான ஆன்மாவைப் பற்றிக் கொண்டு, அநித்தியமான உடம்பு முதலியவற்றை உதறித்

தள்ளவேண்டும் என்று கருதி வந்தார்கள்: தாங்கள் சொன்னபடி செய்தும் வந்தார்கள். முடிவில் வாழ்வற்று சூனியத்தில் மறைந்தே போனுர்கள்.

வள்ளல் பெருமான் வாழ்வுக்கு உடல் இன்றியமையாதது என்கிருர். நம் ஆன்மாவில் இருக்கும் திருஅருள் சிற்றுருவே திருவருளாக வெளிப்படுகிறது. திருவருளே நாம் அனுபவிப்பதற்காகவே திருவருளே மனத்துடன் கூடிய உடம்பாகவும், உலகப் பொருள்களாகவும் விரிவதும், சுருங்குவதுமாக இருக்கிறது என்கிருர் வள்ளலார்.

கடவுள் அம்சமாகிய ஆன்மாவுக்குத் திருவருளும், அதனுல் உண்டான தேகம் முதலியவைகளும் தவிர்க்க முடியாதனவாக இருக்கின்றன. பக்குவம் ஏற்படாதவரை, சுருங்குவதும், விரிவதும், மாற்றம் பெறுவதுமாக இருக்கின் கின்றன. மனிதன் பக்குவம் பெறும் காலத்தில் அவன் அக வாழ்வும் அனக வாழ்வும் சேர்ந்து அவன் உடல் சுத்த வடிவாகிறது. அவன் மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுகிருன். இந்நிலேயில் அருட்பெருஞ்ஜோதியும் ஆன்மாவும் இரண்டுபடாத ஒன்ருகி ஒன்றினுள் ஒன்ருகி, அனக வடிவம் பெற்ற அதி மனிதனுக இருக்கிறது.

அருட்பெருஞ்ஜோதியுடன் ஆன்மா ஒன்றி இருக்கும் அனக வாழ்வின் அனுபவத்தைச் சுலபமாக ஒரு சொல்லில் விளக்கிச் சொல்லவேண்டுமானுல், தயவு என்று சொன்னுலே போதும். அனக வாழ்வின் அனுபவம்தான் தயவு.

அருளும், தயவும் ஒரே பொருளே உடையன. அருளோடு பெருஞ்ஜோதியைக் கூட்டி 'அருட்பெருஞ்ஜோதி' என்பது போல், தயவுடன் பெருஞ்ஜோதியைச் சேர்த்து 'தயா பெருஞ்ஜோதி' என்றும் சொல்லலாம்.

உலகம் முழுவதும், திருஅருளின் ஐம்பெரும்சக்தியால் செயல்படுகிறது. இந்த ஐம்பெரும் சக்தியின் செயல்களே உடைய உலகை 'வு' என்னும் உகர வகரங்களால் ஆன உயிர் மெய்யால் சுட்டிக் காட்டலாம்.

தயா பெருஞ்ஜோதியில் இருக்கும் தயவுடன் 'வு'வையும் சேர்த்து 'தயவு' என சுருக்கிச் சொல்லிவிடலாம். ஆனால் அருட்பெருஞ்ஜோதியை இதுபோல் சுருக்க முடியாது.

தயவு என்று சொன்னால் அது முழுமுதற் கடவுளான அருட்பெருஞ்ஜோதியையே குறிக்கும்.

இதில் 'தய' கடவுள் ஆன்ம அகநிலையைக் குறிக்கிறது. கடவுளின் தன்மையாக விளங்கும் 'வு' உயிர், உடம்பு முதலியவற்றை உணர்த்துகிறது.

அருள் என்பது நம்மில் கடவுள் எழுந்தருளி விளங்கும் நிலையை உணர்த்துகிறது. இதைவிட தய என்பதில் கடவுளும் ஆன்மாவும் ஒன்றியுள்ள நிலை மிகத் தெளிவாக இருக்கிறது. த என்பது உயிர்மெய் எழுத்து வரிசையில் ஏழாவது எழுத்து. இது தச காரியத்தில் ஏழாவது நிலையாகிய சிவரூபத்தைக் குறிப்பது. இந்த இறை உருவத்துடன் 'ய' என்ற ஆன்மா சேரும்போது தய என்ற சொல்லில் இறைவனும் ஆன்மாவும் ஒன்றினுள் ஒன்றாக ஒன்றி இருக்கும் நிலை விளக்கமாக இருக்கிறது.

அருளோடு ஜோதியைச் சேர்க்கும்போது, அருளும் ஜோதியும் சேர்ந்தும் சேராமலும் இருக்கும் இரண்டுபட்ட தோற்றத்தைக் காண்கிறோம்.

ஆனால், 'தய'வோடு பெருஞ்ஜோதியைக் குறிக்கும் அதன் சுருங்கிய உருவமான 'வு'வையும் சேர்த்துத் தயவு என்று சொல்லும்போது, அருட்பெருஞ்ஜோதியின் முழு தோற்றத்தையும் 'தயவு' என்ற சொல்லில் காண்கிறோம்.

மனிதனுக்கும், கடவுளுக்கும் தயவு ஏற்புடையதாய் இருக்கிறது. மனிதன் தயவுடன் வளர்ந்து அதன் நிறைவில் கடவுளாகிறான். அருள் கடவுளுக்கே அமைந்தது. 'மனித அருள்' 'ஜீவ அருள்' என்று வழக்கத்தில் இல்லை. 'ஜீவ தயவு' என்றுதான் வழக்கத்தில் இருக்கிறது. இதனால் தயவின் சிறப்பு மேலும் உயர்கிறது,

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் அனுபவத்தைப் பெற நாம், நம் சிரநடுத் தகர ஆலயத்தில் 'யகர' ஆன்மாவாகப் பொருந்தி இருக்க வேண்டும். அவ்வாறு இருந்து உயிர்க் குலத்துக்கு தயவுப்பணி புரியவேண்டும். இப்படி வாழும் மனிதனிடம் கடவுள் தயவு பெருகுகிறது. அது அவன் உயிர் உடம்பில் நிறைகிறது; பேரின்ப அனுபவத்துடன் அது அவனை ஆனந்த வாழ்வில் நிலைபெறச் செய்கிறது. இதையெல்லாம் செய்யும் பரம்பொருள் அருட்பெருஞ்ஜோதி. அதாவது தயவு.

**தயவு: DAEIOU**

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் தம் சிற்றுருவில் சிரநடு ஆன்ம பீடத்தில் சுடர்விளக்காக இருக்கிறது. இதைத் தயா விளக்கு என்று சொல்லலாம்.

சூரிய ஜோதிக்கு மேல் ஆகாயம் கவிந்திருப்பதுபோல், நம் உள் இருக்கும் ஆன்மக் கடவுள் சிற்றுருவுக்கு மேலே சிதாகாசம் கவிந்திருக்கிறது.

வடலூர் சத்திய ஞானசபையில் இருக்கும் அருட்பெருஞ் ஜோதியும் நம் அக உண்மையின் புறவடிவம்தான்.

தகர ஆகாச வெளியில் யகர ஆன்ம அணுவாக உருவாகி இருக்கும் நாம், வுகர ஐந்தாற்றலால் ஆன பிரபஞ்சத்தில் தயவுடன் வாழவேண்டும்.

தயவு என்பதை ஆங்கில எழுத்தில் எழுதினால்'DAEIOU' என்றே எழுத வேண்டும்.

தயவு என்பதில் இருக்கும் ஆங்கில எழுத்துக்கூட்டை அக அனுபவத்தால் பார்க்கும்போது ஒரு அதிசயமான இயற்கை ஒற்றுமையைக் காண்கிறோம். நம் ஆன்மச் சுடர்த் தீபத்தின்மேல் கவிந்த ஆகாய நிலை 'D' என்ற எழுத்தைத் திருப்பி வைத்ததுபோல் இருக்கிறது.

அதன் அகத்தில் இருக்கும் ஜோதியில் இருந்து எழும் ஐம் பெரும் சக்திகளே அவற்றின் ஆங்கிலப் பெயர்களின் முதல் எழுத்துக்களாக இருக்கின்றன.




ஐம்பெரும் சக்திகளை, பொருள், கிரியை, ஞானம், யோகம், அருள் என்று அறிவோம். இதன் ஆங்கிலப் பெயர்கள் Atoms, Energies, Intelligence, Omnisoul powers, Universal Blissful Life என்பன.

இந்த ஆங்கிலச் சொற்களின் முதல் எழுத்துக்களை D யுடன் சேர்த்துப் படித்தால் 'DAEIOU' தயவு என்று ஆகும். தயவு என்ற ஆங்கில எழுத்துக்களின் அமைப்பே தயவு என்பதையும் ஐம்பெரும் சக்திகளை உடைய கடவுளைக் குறிக்கும் சொல்தான் என்பதையும் நமக்குக் காட்டுகிறது.

சத்திய ஞானசபையிலே அருட்பெரும் ஜோதி எழுந்து பிரபஞ்ச வெளி முழுவதும் ஒளியையும் ஒலியையும் பரப்பத் தொடங்கி இருக்கிறது.

திருஅருளே ஒளியாகவும் ஒலியாகவும் ஜொலித்தும் ஒலித்தும் கொண்டிருக்கிறது. உலகம் திருஅருள் உண்மையை உணர்ந்துகொள்ளத் தொடங்கிவிட்டது. இதன் மூலம் ஒவ் வொருவரின் உள்ளத்திலும் தயவுச் சுடர் ஏற்றப்படுகிறது.

தயவின் கருணையால் உலகம் அருட்பெருஞ் ஜோதியை எளிதில் புரிந்துகொள்ளவும், வாழ்வில் இன்ப அனுபவம் பெறவும் போகிறது.

தயவுதான் மக்களுக்கு உண்மை வாழ்வைத் தருவது.

தயவே அருட்பெருஞ் ஜோதியாய் இருப்பது.

தயவுதான் அருட்பிரகாசரின் அனக அனுபவம்.

# 10. எல்லோர்க்கும் இன்ப வாழ்வு

நாம் எல்லோரும் விரும்புவது இன்ப வாழ்வுதான்: ஆனால் ஒவ்வொருவரின் விருப்பச் சுவையும் வேறு வேருகவும், மாறுபாடாகவும் இருக்கின்றன. இவற்றில் நல்லவையும் இருக்கின்றன; கெட்டவையும் இருக்கின்றன.

உலகில் மக்கள் கூட்டம் மிக வேகமாகப் பெருகி வருகிறது. அவர்கள் புலன் இன்ப வேட்கையிலும், அதற்குத் துணைசெய்யும் அறிவியல் வளர்ச்சியிலும் வேகங்கொண்டு இருக்கிருர்கள். சிறுமதி படைத்தவர்களாகவும், சிற்றின்பத்தை விரும்பிக் காலத்தைக் கழிப்பவர்களாகவும் இருக்கிருர்கள். இவர்கள் பெறும் இன்பமெல்லாம் இன்பம்தாஞ?

இன்றைய மக்கள் வாழ்க்கையில் கிடைக்கும் இன்பமெல்லாம் உண்மையான இன்பமல்ல. இதைச் சொன்னுல் பலர் சந்தேகப்படுவார்கள். மறுக்கவும் செய்வார்கள்.

கடவுள் உண்மையை மக்கள் உள்ளபடிப் புரிந்துகொண்டால்தான் மெய் இன்பத்தை அடைய முயலலாம். மெய் இன்பத்தை அடைய புதிய முயற்சியில் ஈடுபடும்போது பழைமையின் பற்று அவர்களைப் பேய்போல் பிடித்துக் கொண்டு ஆட்டும். அதனுல் அவர்களின் புதிய முயற்சியில் தடைகள் ஏற்படும்.

ஆனுல் பழையனவற்றில் உள்ள குறைபாடுகளையும், அவற்றின் விளைவுகளையும், அவர்கள் உணரும்போது அவற்றில் வெறுப்பு உண்டாகும். அதனுல் புது முயற்சி வேகங்கொள்ளும்

அதற்குத் திருவருளும் துணை செய்யும். ஆன்மானந்தம் உண் டாகும். இதுதான் சுத்த சன்மார்க்க வாழ்வு.

ஐம்புலன்களும் களிக்க, ஆறுவதாகிய மனம் மகிழ, மக்கள் இனம் எவ்வளவோ கலைச் செல்வங்களையும், போகப் பொருள்களையும், ஆடம்பர வாழ்க்கை முறைகளையும் படைத்துக் குவிக்கிறது.

இவற்றால் உடல் இன்பங்கள் மேலும் மேலும் பெருகிக் கொண்டே போகின்றன. உடல் இன்பங்களை அனுபவிக்கும் தேவைகள் அதிகரிக்கின்றன. இதற்காக இயற்கை தரும் பொருள்களும், ஆற்றல்களும் பெருவாரியாக ஆக்கவும் அழிக்கவும் படுகின்றன.

எவ்வளவு இருந்தும், எவ்வளவு பெற்றும், மனத்திலும் வாழ்விலும் எப்போதும் குறைதான். நிறைவே ஏற்படுவ தில்லை. மனத்தில் சதா சலனம்தான்; அமைதியே இருப்பது இல்லை. சதா துன்பம்தான்; இன்பமே உண்டாவதில்லை.

இவைகளெல்லாம் மாறவேண்டுமானால், மக்களுக்கு உண்மையான அமைதியும் ஆனந்தமும் ஏற்பட வேண்டு மானால், அவர்கள் அருட்பெருஞ்ஜோதி நெறியை நன்கு உணர்ந்துகொள்ளவேண்டும். அந்த நெறியை மேற்கொண்டு அவர்கள் புதுவாழ்வு தொடங்கவேண்டும். அப்போதுதான் அவர்கள் வாழ்வில் மெய்யான இன்பம் உண்டாகும்.

மக்கள் ஒளி நெறியை ஏற்றுக்கொண்டு, தயவு அடிப் படையில் தங்கள் வாழ்க்கை முறைகளை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும்.

இதுவரையில் பொருளை ஈட்டுவதற்காகவே கலையைப் பயின்றோம். அதன் மூலமாக ஏராளமான பொருள்களை ஈட்டினோம். அதனால் பெற்ற இன்பம் நிலைக்கவில்லை! கலையைக் கலைக்காகவே பயின்று காலத்தை இன்பமாகக் கழித்தோம். அதுவும் நிலைக்கவில்லை! ஒரு குறிக்கோளும் இல்லாமல், கலையைப் பொழுதுபோக்குக்காக மேற்கொண்டு

அதிலேயும் இன்பம் கண்டோம். அந்த இன்பமாவது நிலைத்ததா? அந்த இன்பமும் நிலைக்கவில்லை.

பின் எதற்காகக் கலையைப் பயிலவேண்டும்? அருளுக்காகவே கலையைப் பயிலவேண்டும், திருவருளின் சக்தியே கடவுள் உண்மை. அதை அடைவதற்கு அகத்தில் ஒன்றி இருக்கும் ஆன்மக் கலையைப் பயிலவேண்டும். ஆன்மக் கலைப் பயிற்சி மூலமாக இறைவனுடன் ஒன்றி இருக்கும் நிலையைப் பெற்று வாழலாம். இந்த வாழ்க்கை என்றும் அழியாத அருள் இன்பத்தை அளிக்கும்.

மக்களுக்கு முன்பு உடல் இன்பத்தில் இவ்வளவு வேகம் இல்லை. அதனால் உடல் இன்பத்தைப் பெறும் அசுர வேட்கையும் அவர்களுக்கு அப்போது இல்லை.

உடல் இன்பம் அற்பமானது, பொய்யானது, நல்லோர் வெறுத்து ஒதுக்குவது என்ற எண்ணம் அந்த நாள் மக்களிடம் வலுத்திருந்தது. அதனால் அவர்கள் தங்கள் புலன்நெறி வாழ்வில் ஆர்வம் காட்டவில்லை. மாறாகத் துறவு நெறிக்கும், துறவிகளுக்கும் அதிகம் மதிப்பும் மரியாதையும் கொடுத்துப் போற்றி வந்தார்கள்.

புலன் இன்பத்தை வெறுத்த துறவிகளோ தனிமையிலே இனிமை காணத் தவங்கிடந்தார்கள். தங்கள் அக அமைதியிலே ஆனந்தம் கண்டார்கள். அந்த ஆனந்தம் அவர்கள் அகத்திலேயே அடங்கிப்போக, அவர்கள் வாழ்வும் வெறும் சூனியமாகிவிட்டது.

பெருந்தவ முயற்சியால், ஞானயோக சித்தர்கள் அற்புத சக்தி சித்திகளைப் பெற்று உலகில் சில காலம் பலர் மகிழ ஆனந்தக் கூத்தாடினார்கள். முடிவில் சமாதியில் அடங்கி மறைந்துபோனார்கள்!

இந்த ஞானிகள் தந்த மூலதனம்தான் இப்போது நம்மிடம் இருக்கும் கலைச்செல்வங்கள். அந்தக் கலைச் செல்வங்களைக்கொண்டு இன்றைய உலகு எவ்வளவு களிக்கூத்தில் காலத்தைக் கழித்துக்கொண்டு இருக்கிறது!

மக்கள் சமுதாயத்தில் பெரும்பகுதிக்குக் களிக்கூத்து இல்லாமல் வாழவே முடியாதுபோலத் தோன்றுகின்றது. இவை இல்லையேல் தங்கள் வாழ்க்கை சூனியமாகிவிடுமோ என்னும் அச்சமும் அவர்களுக்கு இருக்கிறது.

களிக்கூத்துகளில் இருந்து இந்த உலகைத் திசைதிருப்புவது மிகக் கடினம். ஆண்டவர் திருவுள்ளம் என்னவோ!

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் தனது தனிப்பெருங் கருணையாலே தன் இயல்பாகிய சச்சிதானந்தத்தை உலகில் தோன்றச் செய்திருக்கிறார். மனித வாழ்விலே நித்தியமாய் அதை விளங்கச் செய்வதற்காகவே இந்த அகண்ட பிரபஞ்சத்தை நடத்தி வருகிறார்.

கடவுளின் உண்மையைக்கூட இப்போதுதான் உணருகிறோம். இதுவும் அவன் திருஅருட்செயலே.

வடலூர்ப் பெருவெளியில் அருள்ஞான ஜோதி உதயமாகி இருக்கிறது. சத்திய ஞானசபையில் தோன்றி இருக்கும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் சத்திய ஞான விளக்கத்துடன் ஒவ்வொருவரின் அக வானத்திலும் உதிக்கத் தொடங்கி இருக்கிறார்.

இந்த உண்மையை நன்றாகத் தெரிந்துகொண்டு திருவருள் விருப்பப்படி புது வாழ்வை அமைத்துக்கொள்வதும் ஒவ்வொருவரின் கடமையாகும்.

நம் வாழ்வைப் புதுநெறியில் அமைத்துக்கொண்டால் மெய்யான கடவுள் இன்பம் தோன்றும்.

கடவுள் ஆணையும், மனிதப் பிறவியின் குறிக்கோளும் நித்தியானந்த வாழ்வை அடைவதேயாகும். நிலையான இன்பத்தை அடையும் முறையில் நம் தினசரி வாழ்வை அமைத்துக்கொள்ளவேண்டும்.

எத்துறையில், எவ்வகை வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்களும் மெய்யான இன்பத்தை அடையலாம். அதற்கு மெய்யன்பும், மெய்யறிவும், மெய் இன்பமும் பெருகும்படியான செயலிலே அவர்கள் ஈடுபடவேண்டும்,

உயிர் விளக்கமும், அறிவு விளக்கமும் தராத எந்தச் செயலிலும் பொருளேயும், ஆற்றலேயும், காலத்தையும் வீணுக்கவேகூடாது.

உடல் இன்பம் பெறுவது மட்டும் நம்முடைய வாழ்க்கை லட்சியம் அல்ல. மெய்ஞ்ஞான ஆனந்தத்தைப் பெறுவது தான் நமது குறிக்கோள்.

அதற்கு ஏற்ற மார்க்கம் சுத்த சன்மார்க்கம்தான். இந்த நெறி மற்ற மார்க்கங்களேப்போல் மக்கள் இனத்தைக் கடவுளிடமிருந்து பிரித்து அழைத்துச் செல்லும் நெறி அல்ல. எங்கோ திசை தெரியாத இடத்தில் அவர்களே நிறுத்திவிட்டுச் செல்லும் மார்க்கமும் அல்ல.

சுத்த சன்மார்க்கம் மக்களேப் புறத்திற் சென்று அலேந்து நிலேயற்றுப்போகச் செய்யாது. அகத்தே அருள் ஒளியோடு ஒன்றி இருக்கச்செய்து அதன் அருளாலேயே அவர்களே வாழ வைக்கும்; அவர்களுக்கு அருள் இன்பத்தைக் கொடுக்கும். இந்த நெறி விளக்கமே சத்திய ஞானசபைக் காட்சி.

சத்திய ஞானம், அருட்பெருஞ்ஜோதியே. சத்திய ஞானம் விளங்கும் சிரநடுச் சிற்சபைத் தலமே, புறத்தில் தோன்றும் வடலூர் சத்திய ஞானசபை.

தயவுடன் கூடிய சுத்த சத் விசாரத்தோடு வடலூர் சத்திய ஞான சபைக்குச் சென்று வழிபடவேண்டும். அவ்வாறு வழிபடுவதால் மக்களுக்கு ஏற்படக்கூடிய புறவிளக்கங்களும், அக விளக்கங்களும் அவர்களேச் சன்மார்க்கத்துக்கு அழைத்துச்சென்று வாழ்விக்கும்.

1. ஞானசபையின் வாசலின் தென்கிழக்குப் பகுதியில் சன்மார்க்கக்கொடி காணப்படுகிறது. இந்தக்கொடி அருட்பெருஞ்ஜோதியையே காட்டுகிறது.

இறைவன் அகத்தில் அருளாகவும், புறத்தில் ஜோதியாகவும் இருக்கிருர். இதை மஞ்சளும், வெள்ளேயுமான சன்மார்க்கக்கொடி நமக்கு விளக்குகிறது.

கடவுளும் அவர் திருவருளும் ஒன்ருக இருக்கின்றன: இவை இரண்டும் சமமாக இருக்கும் என்று பலர் கருதுகின்றனர். உண்மையில் கடவுள் முக்கால் பாகமும், அவர்திரு அருள் கால்பாகமுமாகவே இருக்கின்றன.

அருளின் தன்மையால் தோன்றியது சத்திய ஞானம். சத்திய ஞானத்தில் தோன்றியது அருட்பெருஞ்ஜோதி. அவர் முக்காற் பங்கு ஜோதியைக் காட்டும் வெள்ளை நிறத்துடனும், கால் பங்கு அருளைக்காட்டும் மஞ்சள் நிறத்துடனும் காட்சி தருகிருர். இதை வள்ளலார் அருட்பெருஞ்ஜோதி மகா மந்திரத்தின் மூலமாகவும் விளக்கி இருக்கிருர்.

அருட்பெருஞ்ஜோதிக் கொடியின் கீழ்ப்பகுதி வெள்ளையாகவும்,மேல் பகுதி மஞ்சளாகவும் இருக்கவேண்டும். இது தான் சன்மார்க்கக்கொடியின் சரியான நிலை. அருட்பெருஞ்ஜோதியின் தோற்றமும் இதுதான்.

இந்தக் கொடிக்கு அருகில் எழுவார் மேடை இருக்கிறது. இதில் ஏறி நின்று தியானம் செய்ய வேண்டும். மனம் ஒருமையுடன் புருவநடுவே இருப்பதை இந்த மேடை குறிக்கும்.

ஞானசபையைச் சுற்றி இரட்டையாக மடித்துப் போட்டிருக்கும் 21,600 கண் உள்ள இரும்புச்சங்கிலி நம் சுவாசத்தைக் குறிக்கும்.இப்போது தயவும், ஒருமையும் கொண்டு ஞான சபைக்குள் புகுவோம்.

2. ஞானசபையைச் சுற்றி இருக்கும் இரும்புக் கூர்வேல் கம்பிகள் பதித்த எண்கோணச் சுற்றுமதில் இந்திரிய ஒழுக்கத்தைக் குறிக்கும். கண்முதலான இந்திரியக் கருவிகளைத் தயவோடு இயங்கும்படிப் பழக்குவது இந்திரிய ஒழுக்கம்.

3. ஞானசபையின், தாய்ச்சுவரின் புறப்பகுதி புருவ நடுவை அடைந்து தயா உணர்வு கெடாமல் உலகியலை நடத்துவதைக் குறிக்கும். இது கரண ஒழுக்கம்.

4. ஜீவவொழுக்கத்தைக் குறிக்கவே எட்டு யானைகள் சுமந்து கொண்டிருக்கும் பஞ்சாட்சர ஜோதி பீடம் இருக்கிறது. எல்லார் இடத்திலும் பொதுவாக உயிர் விளக்கம்

இருக்கிறது. புறத்தே விளங்கும் வேறுபாடுகளோ அந்த உயிர் விளக்கத்துக்குத் தடையாக இருக்கின்றன. அவைகளைப் பொருட்படுத்தாமல் எல்லா உயிர்களிடத்திலும் தயவுடன் நடந்து கொள்வதுதான் ஜீவ ஒழுக்கம்.

5. உயிருக்குள் உயிராய் இருப்பது ஆன்மஜோதி. இது ஆண்டவர் வடிவம். இதுவே, அருட்பெருஞ்ஜோதி தீபமாய் விளங்குவது. இது ஆன்ம ஒழுக்கத்தைக் குறிக்கும். எல்லா உயிர்கள் இடத்திலும் விளங்குவது அருட்பெருஞ்ஜோதி. எங்கும், எல்லா உயிர்கள் இடத்திலும் அருட்பெருஞ்ஜோதி இருப்பதை உணர்ந்து அவைகளிடம் ஆன்மநேய ஒருமைப் பாட்டு உரிமையுடன் ஒழுகுதல் ஆன்ம ஒழுக்கம்.

6. இந்த நால்வகை ஒழுக்கத்துடன் சத்விசாரம் செய்து வந்தால் மாயைத் திரைகளாகிய அறியாமை மறைப்புகள் விலகிவிடும். நம் உள் இருக்கும் உள்ளொளியை நேருக்கு நேர் காணும் வாய்ப்பு ஏற்படும்.

7. நாம் இதுவரை செய்து வந்த சத்விசாரத்தின் பயனாலும், அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங்கருணை யாலும், திருஅருட்பெருஞ்ஜோதியை மறைத்திருந்ததிரைகள் எல்லாம் நீக்கப்பெற்று அவரைத் தரிசித்து மகிழ்கிறோம்.

ஞானசபையில் காட்சி அளித்து உலக மக்களுக்கெல்லாம் இன்ப வாழ்வு அளித்து வருகிறார் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர். மக்கள் சமுதாயத்துக்கு ஞானசபையில் இறைவன் இருக்கும் உண்மையைக் கூறி அவர்களை ஞான சபையின் சந்நிதிக்கு அழைத்து வரவேண்டும். அவர்கள் ஞானசபையில் அருட்பெருஞ்ஜோதியைத் தரிசிப்பது போல அவர்கள் அகத்திலும் அருட்பெருஞ்ஜோதியைத் தரிசிக்க அவர்களைப் பழக்குவது நம்முடைய கடமை.

ஞானசபையில் அருட்பெருஞ்ஜோதியை நாள்தோறும் தரிசனம் செய்வதற்கு இடையூறு செய்பவர்கள் இறைவனின் உண்மையை முழுவதும் அறியாதவர்கள். அவர்களுக்கும் திருவருள், அறிவு புகட்டி அவர்களையும் மாற்றிவிடும்.

விரைவில் சத்தியஞானசபையில் நித்திய ஜோதி வழிபாடு ஆரம்பமாகித் தொடரப் போவது நிச்சயம்.

அருட்பெருஞ் ஜோதியை ஒவ்வொருவரும் தங்கள் அகத்தில் பார்த்து அதனுடன் கலந்து, அதுவே நாமாக ஒன்றி நிற்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். இது தான் சுத்த சன்மார்க்க நெறியின் முதல் படி.

அகத்தில் ஆண்டவனைத் தரிசிக்கும் தியானப் பயிற்சியை மேற்கொண்டு வாழ்க்கையை நடத்தி இன்பம் அடைய வேண்டும். இதுதான் சுத்த சன்மார்க்கத்தின் அனுபவ வாழ்வு முறையாகிய அடுத்தபடி.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் ஒருவரே. அவர் இயற்கை உண்மை வடிவில் நம் உயிருக்கு உயிராய், உள்ஒளி யாய் இருக்கிறார். அவர் தம் சித்து விளக்கத்தால் அவரே நாமாய், நாமே அவராய் ஒன்றி நிற்கும் நிலையைச் சுத்த சன்மார்க்க வாழ்வு நமக்கு அளிக்கும்.

அவரே நாமாய் இருக்கும் அனுபவ நிலையைப் பெற்ற வர்கள் எல்லா உயிர்களுக்கும் இன்பம் செய்துகொண்டிருப் பார்கள். தம்மைப்போன்றே திருவருளால் படைக்கப்பட்டி ருக்கும் மக்களுக்கும், மற்ற உயிர்க் குலத்துக்கும் தம்மால் இயன்ற அளவு தயவோடு இன்பம் செய்துகொண்டு இருப் பார்கள். இதுதான் இயற்கை இன்ப வாழ்வு.

அவரே நாமாய் இருக்கும் அனுபவ நிலையில் நாம் அடையும் இயற்கை இன்பத்தை எல்லா உயிர்களும் அடை யும்படிச் செய்வது திருவருள் செயல்.

கடவுள்உண்மை அருட்பெருஞ்ஜோதி ஞான தீபமாய் நம் தலைநடுவில் இருந்து சதா பிரகாசித்துக்கொண்டிருக் கிறது. இதை நாம் ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளச் செய்வதுதான் வடலூர் சத்திய ஞானசபை வழிபாட்டு முறையின் முக்கிய நோக்கம்.

இவ்வாறு கடவுள் உண்மை இருக்க, அதை மக்களுக்கு எடுத்துக் கூறாமல் நாம் வேறு கடவுள் வேறு என்று நினைக்

கும்படிச் செய்து, அதற்கு ஏற்ப வழிபாடுகளை அமைத்து விட்டன நம்முடைய பழைய சமய நெறிகள்.

பழைய முறையிலே தெய்வ வழிபாட்டில் ஈடுபட்டிருக்கும்போது, உலக வாழ்வு தடைபடுகிறது. உலக வாழ்விலே புகும்போது தெய்வ வழிபாடு தடைபட்டுப் போகிறது. முடிவில் நமது உயிர் ஒடுங்கும் காலத்தில் தெய்வ வழிபாட்டோடு உலகவாழ்வும் முடிந்துவிடுகிறது.

ஆகையால் எவ்வளவு சிறப்பான பக்தி வழிபாட்டு முறையாலும், மந்திர, தந்திர, இயந்திரத் துணையாலும், பரவச இன்னிசைக் கீதங்களாலும், வேறுவகையாலும் தெய்வ வழிபாடுகளை நடத்தினாலும், அவைகளில் எதுவும் மனிதனை இன்ப வாழ்வில் நிலைகொள்ளச் செய்யாது.

தெய்வ நம்பிக்கையே இல்லாமல், இன்ப வாழ்வையே லட்சியமாகக் கொண்டு ஓரளவு நல்ல பழக்க வழக்கங்களோடு வாழ்வில் முன்னேறுகிறவர்களும் நிலையான இன்பம் பெற்று வாழ்வதில்லை.

ஆகையால் நிலையான இன்பத்தைப் பெற சன்மார்க்க வாழ்வை மேற்கொள்வதுதான் ஒரே வழி.

சன்மார்க்கத்தில் நம்பிக்கை கொள்ளாமலும், அந்த அனுபவத்தைப் பெற முயன்று பார்க்காமலும், அலட்சியமாய் இருப்பதுடன், அதைப்பற்றி வீண்வாதம் செய்து கொண்டிருப்பது கண் இருந்தும் குருடராக வாழ்வதுபோல்தான். சன்மார்க்க வாழ்க்கை முறையில் கடவுள் உரிமையை உணரலாம். அதனால் நமது வாழ்க்கையில் நல்ல பயன் விளைவது நிச்சயம்.

நம்பிக்கையோடு சன்மார்க்க வாழ்க்கை முறையைப் பயின்று நலங்காண வாருங்கள் என்று நம் ஒவ்வொருவர் அகத்திலிருந்தும் அழைப்பு விடுத்துக்கொண்டே இருக்கிறார் திருஅருட்பிரகாசர்.

உலகம் இன்பம் அடையவே விரும்பும் பரம்பொருள் நம் உள் நாமாகவும் இருக்கிறார் என்ற உண்மையைச் சொல்லி நம்மை அழைக்கிறார் வள்ளல் பெருமான்.

கடவுளை நம்பும் ஆத்திகன் எனச் சொல்லிக் கொண்டு கடவுள் உண்மையை அறியாமலும் திருவருளை அடையா மலும் ஏமாந்து போய்விடக்கூடாது.

கடவுளே இல்லை, எல்லாம் பொய், எல்லாம் மனிதன் செய்த கற்பனை, யாவும் இயற்கையாய் நடக்கின்றன என்று பலர் கூறிக்கொண்டு இருக்கின்றனர். அவர்கள் நீண்ட நெடுங்காலமாக இந்தப் பேருலகத்தை விளங்கச் செய்து வருகிற ஓர் அருட் பேருண்மையை அறியாது வாழ்க்கையை வீணடித்துக் கொண்டு வருகிறார்கள். இப்படி வாழ்வது வாழ்க்கையே அல்ல.

ஏதோ ஒரு சக்தி, அது எதுவாய் இருந்தாலும் சரி, என்றும் எங்கும் நிலைத்து இருந்து செயல்படுகிறது என்பதை அறிவு நிரம்பிய யாரும் ஏற்றுக்கொள்வார்கள்.

ஏதோ ஒரு சக்தி இருந்து இந்த உலகைச் செயல்படுத்து கிறது. இதை நம் முன்னோர்கள் உணர்ந்தார்கள். அந்தச் சக்தியைத்தான் கடவுள் என்று சொன்னார்கள். இன்னும் பல தெய்வங்களாகவும் அதைக் காட்டினார்கள். இறைவன் நமது சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்தில் இருக்கிறான். அவனைக் காண்பதற்கு ஓர் உபாயமாகவே தெய்வங்களை மனித வடிவில் விக்கிரகங்களாக வைத்தார்கள். அதற்குச் சிற்ப அற்புதங்களுடன் கூடிய ஆலயங்களைக் கட்டினார்கள்.

நம் முன்னோர்கள் நம்உள் இருக்கும் இறைவனை நாம் உணருவதற்காகவே இந்தஉபாயங்களைச் செய்திருக்கிறார்கள். இதைப் புரிந்துகொள்ளாமலும், இதற்கு ஆதாரமாக இருக்கும் பரம்பொருளை உணர்ந்துகொள்ளாமலும், மக்கள் வீண்போய்க்கொண்டிருக்கிறார்கள்.

அருட்பெருஞ் ஜோதி ஆண்டவர் திருஅருட்பிரகாச வள்ளலார் வடிவில் இப்போது எல்லோரையும் பக்குவப் படுத்தி வருகிறார். கடவுள் உண்மையை அவர்கள் அறிந்து கொள்ளச் செய்து வருகிறார். வாழ்வில் அழியாத இன்ப நிலையை நாம் பெறுவதற்காக வள்ளலார் பாடுபட்டு

வருகிறார். அருட்பேரின்ப வாழ்வை எல்லா உலகத்து மக்களும் பெற்று உயர்வதற்காகவே வள்ளல் பெருமான் தனிப்பெருந் தயவுசெய்து வருகிறார்.

வள்ளலார் கண்ட கடவுள் உண்மையை, அருட்பெருஞ் ஜோதிக் கடவுளை சத்திய ஞானசபையாக நம் சிரநடுவில் இருக்கும் சிற்றம்பலத்தில் ஒவ்வொருவரும் காணலாம்;

சிரநடுவில் தாம் கண்ட உண்மை அனுபவத்தை வள்ளல் பெருமான் மிக அற்புதமாக விளக்கிக் காட்டுகிறார்.

''கையறவு இலாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந்(து) உண்டுநடு நாட்டு
ஐயர்மிக உய்யும்வகை அப்பர்விளை யாட்டு
ஆடுவதென் றேமறைகள் பாடுவது பாட்டு''

என்று இந்தப் பாட்டின் மூலம் கடவுளை நாம், நம் உள்ளே எப்படிக் கண்டு மகிழலாம் என்பதைத் சொல்கிறார்.

ஒள்வொருவரும் அவர்கள் சிரநடுவில் இருக்கும் சிற்றம் பலத்தில் சிற்ஜோதிப் பரம்பொருளைக் கண்டுகொள்ளலாம். சோம்பல் இல்லாது, சுறுசுறுப்போடு, மனத்தைப் புருவ நடுவே நிறுத்தி உள்நோக்கினால், அமுத ஜோதியாக இறைவன் இருப்பதைக் காணலாம்.

அருட்பெருஞ் ஜோதியுடன் ஒன்றிக் கலந்து வாழ்க் கையை நடத்தினால் நித்திய இன்பத்துடன் நிலைத்து வாழலாம்.

இந்த இன்பத்தை அருளும் ஒரே மெய்ப்பொருளையே, மெய் இன்பத்தை விளைவிப்பதற்காக வந்த ஆடுங் கடவுளா கவும்,அருள்செயல் புரிய வந்த ஆண்டவனாகவும், அருமறைக ளெல்லாம் அளந்து அளந்து பாடுகின்றன.

மக்கள் போற்றி வணங்கும் எந்தத் தெய்வம் ஆனாலும், கடவுள் ஆனாலும், மகான் ஆனாலும், மனிதன் ஆனாலும், பொருள் ஆனாலும், ஆற்றல் ஆனாலும், மற்ற எதுவானாலும் அவை ஒவ்வொருவர் சிரநடுவில் இருக்கும் எங்கும் நிறைந்

துள்ள அருட்பெருஞ்ஜோதியே அது அதுவாகத் தோன்றி, ஓரளவு அவர்களுக்குச் சக்தி சித்திகளை அளித்திருக்கிறது. இவைகளை வணங்கி வழிபடுவதன் மூலமாகவும் நிலைத்த இன்பத்தைப் பெறமுடியாது. வாழ்க்கையில் ஏதோ ஓரளவு இன்பத்தைப் பெற்று எந்த நிலையான பலனும் பெறுமல் இறந்துபோக வேண்டியதுதான்.

புறநிலைத் தோற்றங்களில் எல்லாம் பற்றுவைக்காமல், கடவுள் உண்மையை உணர்ந்து, அதுவே எல்லாமாய் இருப்பதை அறிந்து, உயிர்களுக்கு இன்பம் செய்து வரவேண்டும். இவ்வாறு சன்மார்க்க நெறியில் வாழ்ந்து வந்தால் எங்கும் நிறைந்திருக்கும் இறைவனின் அருளால் அழியாத இன்பம் பெற்று நிலைத்து வாழலாம்.

எல்லோர்க்கும் நல்ல இன்ப வாழ்வு அளிப்பதே ஆண்டவர் திருவுள்ளம். அவர் ஒருவரே எல்லாமாய், எவருமாய் இருப்பதால், மக்களை எல்லாம் இறைவனின் உருவங்களாகவே உணர்ந்து அவர்களுக்கு அன்புப்பணி செய்துவர வேண்டும்.

அறியாமையாலும், பிற குறைபாட்டாலும், குற்றம் புரிந்துகொண்டு இருப்பவனும், துன்பம் விளைவித்துக் கொண்டு இருப்பவனும்கூட ஒருகணம் தன் உள் நோக்கி ஆண்டவனை உணருவானுனல் எல்லோரிடத்திலும் ஆண்டவன் இருப்பதைத் தெரிந்துக்கொள்வான். ஆண்டவன் தான் எல்லோரையும் பக்குவப்படுத்தி மேல் நிலைக்கு உயர்த்துவான் என்பதையும் உணர்வான்.

ஆகையால், யாராக இருந்தாலும், எவ்வளவு தாழ்ந்தவராக இருந்தாலும் அவருக்கு நம் தயவு முயற்சியால், செயலால், சொல்லால், எண்ணத்தால், உணர்வால், இயன்றமட்டும் உதவி செய்துகொண்டே இருக்க வேண்டும். இதுதான் சுத்த சன்மார்க்கம்.

நம் உதவியைப் பெறவோ, நம் சொல்லைக் கேட்கவோ முடியாத நிலையில் இருப்பவர்களைப்பற்றியும், உலக மக்களைப்

பற்றியும், அவர்கள் திருந்தி மேல்நிலைக்கு வரவேண்டும் என்று ஆண்டவரிடத்தில் வேண்டிக்கொள்வது ஒவ்வொரு சன்மார்க்கியின் கடமையாகும்.

இப்படிப் பலரும் எண்ணவும்,செயல் புரியவும் தொடங்கி விட்டால் உலகில் இன்பம் பெருகக் கேட்கவேண்டுமா?

இது எப்படிச் சாத்தியப்படும்? கற்பனை உலகில்தான் இது நடைபெறும் என்று எண்ணிவிடவேண்டாம்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் இந்த உயர் லட்சியத்தை அடிப்படையாகக் கொண்டுதான் தன் தனிப்பெருங் கருணைச் செயலை ஆரம்பத்திலிருந்து செய்து வருகிறார். இதை அருள் ஞானத்தால் இப்போது அறிகிறோம்; இதில் சிறிதும் சந்தேகம் வேண்டியதில்லை. நாளடைவில் கடவுள் உண்மை எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும்.

இப்பொழுது ஏற்பட்டிருப்பதுபோன்ற அருள் வாய்ப்பு நிலை இதற்கு முன்பு எப்போதும் ஏற்பட்டது இல்லை. அப்படி ஏற்பட்டிருந்தால் அருட்பெருஞ்ஜோதி உண்மையும், அதனால் இறவாமை பெற்று இன்பத்துடன் நிலைத்து வாழலாம் என்ற அனுபவ வாசகமும் ஏற்பட்டிருக்கும்.

வேத காலத்தில் இருந்து திருவாசகம் காலம் வரை உடல் நிலையாமை பற்றித்தான் பேசப்பட்டிருக்கிறது. இதற்கு பின்னால் வந்த ஆன்மிக நூல்களும் நிலையாமையைப் பற்றியே பேசி வந்தன. திருஅருளால் பாடப்பட்ட திருஅருட்பாதான் மரணமில்லாப் பெருவாழ்வைப் பற்றிப் பேசுகிறது.

''மனிதன் மரணமில்லாமல் வாழலாம் என்பதை எப்படி நம்புவது?'' என்று கேட்கலாம். இதை நம்புவதற்கு வள்ளலார் வாழ்க்கையில் ஒரு வரலாறு இருக்கிறது.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மையும், அவரது சுத்த சன்மார்க்க உண்மையும், இதன் மூலமாக மனிதன் மரணமில்லாமல் இருக்கலாம் என்ற உண்மையும் வெளிப்படையாகத் தோன்றத் தொடங்கியதை வள்ளலார் திரு

அருளால் உணர்ந்தார். திருஅருள் வெளிப்படையாகத் தோன்றிவிட்டதை உலக மக்களும் உணர்ந்துகொள்வதற்காக வடலூரில் சத்திய தருமச்சாலையை தொடங்கினுர். ஜீவகாருண்ய ஒழுக்கம் என்ற நூலை வெளியிட்டார். அருட்பெரு நெறியான தருமச்சாலையை வடலூரில் வள்ளல் பெருமான் ஆரம்பித்த வேளைதான் திருஅருள் உலகில் வெளிப்படையாகத் தோன்றிய வேளையாகும்.

திருஅருள் வெளிப்படையாகத் தோன்றிய நாள் 1867 ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் பதினேராம் நாள். அன்று தம்மிடம் தோன்றிய அருட்பெருஞ்ஜோதியை வள்ளல் பெருமான் முழுமையாக அனுபவிக்க ஆரம்பித்து விட்டார்.

தாம் அனுபவிக்கும் இறை அனுபவத்தை, அருட்பெருஞ்ஜோதியின் உண்மை நிலையை எல்லா மக்களும் தெரிந்து பயன்அடைய வேண்டும் என்று விரும்பினுர். தான் பெற்ற இறை இன்பத்தை இந்த வையகமும் பெற்று மகிழ ஆசைப் பட்டார். அதற்காகவே வடலூரில் சத்திய ஞானசபையைத் தோற்றுவித்தார். அது ஒவ்வொரு பக்குவியின் உள்ளத்திலும் கொஞ்சம் கொஞ்சமாக இறைஅருள் தோன்றுவதற்கு உதவிக்கொண்டே இருக்கிறது.

இறை அருளைப் பெறுவதில் ஒரு விரைவும், முன்னேற்றமும் சமீபத்தில் ஏற்பட்டிருக்கின்றன. அந்த விரைவு தோன்றிய நாள் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஏழாம் ஆண்டு, ஜூன் மாதம், பத்தொன்பதாம் நாள் (19-6-1977). அன்று ஞாயிற்றுக்கிழமை, வடலூரில் சத்திய ஞானசபை திருப்பணி நிறைவு பெற்ற நாள். அந்த நிறைவு நாள் விழாவில் ஆயிரக்கணக்கான மக்களால் அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரம் கோடி முறை ஓதி உணரப்பட்டது.

அன்றைய தினம் அருட்பெருஞ்ஜோதி எல்லோருடைய அகத்திலும் புறத்திலும் தோன்றியதையும் உணரமுடிந்தது. அருட்பெருஞ்ஜோதியின் புறத்தோற்றமான ஜோதியை

விளக்குவதுபோல் அன்றைய தினம் ஞாயிற்றுக்கிழமையாக வும் இருந்தது. அதன் அகமாகிய அருளை விளக்குவதுபோல் அன்று பூச நட்சத்திரமாகவும் இருந்தது ஒரு அற்புதம். ஞாயிறு என்றால் சூரியன். சூரியன்தான் ஜோதியின் புறத் தோற்றம். அகத்தில் அருட்ஜோதி உண்மை விளங்கும் இடம் காற்குளம். அதாவது பூச நட்சத்திரம்.

ஞாயிற்றுக்கிழமை காலை ஆயிரக்கணக்கான மக்களால் கோடி முறை ஓதப்பட்ட அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரம் வானவெளியில் நாத ஜோதியாக ஜொலித்து ஒலித்தது. கீழ் வானத்தில் ஞாயிற்றின் உதய ஒளி தோன்றி தன்பொற்கதிர் களால் ஞானசபையின் தங்கக் கலசத்தைத் தழுவியது. அந்த சமயத்தில் ஞானசபை தங்கக் கலசத்துக்கு நீராட்டலும், கற்பூரஜோதி ஆராதனையும் நடைபெற்றன. வடலூர்ப் பெரு வெளியில் குழுமி இருந்த லட்சக்கணக்கான மக்கள் உள்ளிருந்து அருட்பெருஞ்ஜோதி என்ற மகா மந்திர ஒலி எழுந்து வானவெளியில் பரவியது.

இந்த அருள் நிகழ்ச்சிகள் புறத்தில் ஓரிரு நாழிகையில் தோன்றி முடிந்துவிட்டன.

வடலூர்ப் பெருவெளியில் அருட்பெருஞ்ஜோதியின் புறக் காட்சியைக் கண்ட ஒவ்வொருவரின் அகவெளியிலும், அந்த அருள் காட்சியும் அனுபவமும் தோன்றி அங்கேயே நிலைத்து விட்டன. இப்போது அந்தக் காட்சியும், அனுபவமும் அவர் களைச் சன்மார்க்கத்துக்கு அழைத்துச் சென்றுகொண்டிருக் கின்றன.

வடலூர்ப் பெருவெளியில் இருந்து உலக மக்களுக்கு தயவோடும், ஆர்வத்தோடும், உள்ளப் பரிவோடும் தன் உண்மையைத் தெரிவிக்க அருட்பெருஞ்ஜோதி தோன்றி இருக்கிறது.

இந்த அரிய வாய்ப்பினை உலக மக்களும், அரசுகளும் நன்கு பயன்படுத்திக்கொள்ளவேண்டும். இதனால் உலகுக்குப் பெரும் நன்மை உண்டாவது நிச்சயம்.

மக்கள் நினைத்துக்கூட பாராத இறை இன்பம் நிரம்பிய புதுவாழ்வு அவர்களிடம் தோன்றப் போகிறது. உலகில் புது யுகம் பிறக்கப்போகிறது.

நீண்ட நெடுங்காலமாக நமது முன்னோர்களும், மகான் களும் எதிர் பார்த்துக்கொண்டிருந்த தெய்வ மனிதர் வந்து விட்டார். யார் அந்த அதி மனிதர்? அவராலும் அவருடைய மார்க்கத்தாலும் ஏற்படக்கூடிய பயன் என்ன?

இதுபற்றித் தெரிந்துகொள்ள சத்தியஞான சபைக்கு வாருங்கள். சத்திய ஞானசபையிலும், உங்கள் ஒவ்வொரு வரின் உள்ளிருக்கும் ஞான பீடத்திலும், அருட்பெருஞ்ஜோதி யைத் தரிசியுங்கள். அப்போது அந்தத் தெய்வ மனிதன் யார், அந்த அதி மனிதன் யார் என்பதைத் தெரிந்துகொள் வீர்கள்!

உலகச் சமயத் தலைவர்களும், சித்தர்களும், நாயன்மார் களும், ஆழ்வார்களும், ஞானிகளும், தெய்வ மனிதன் வரப் போகிறான் என்று குறிப்பிட்டது யாரை? அப்பன் வருகிறான், ஐயன் வருகிறான், வானுலகத் தந்தை வருகிறார், கலியொழிக் கும் கலி புருஷன் வருகிறான், வானுலக இன்பத்தை மண்ணு லகுக்குக் கொண்டுவரும் ஒரு வல்லவன் வருகிறான், தீமை முற்றும் ஒழித்து நன்மையை எங்கும் விளங்கச் செய்யவல்ல சித்தன் வரப்போகிறான் என்றெல்லாம் சொல்லிக் கொண்டி ருந்தார்களே அவர் யார்?

உலக மகா புருஷர் என்று யாரோ ஒருவரை ஏற்றுக் கொண்டு சிலர் ஆனந்தக் கூத்தாடுவார்கள், அந்த மகா புருஷரால் அவரைப் போற்றுகிற சிலருக்காவது இன்ப வாழ்வு அளிக்க முடியுமா? முடியாது:

எவ்வளவு பெரிய மகா புருஷராக இருந்தாலும், அவர் தோன்றியது போலவே மறைந்து போவது நிச்சயம்.

நித்தியத்தைப் பெறாத மகா புருஷரால் அவரை அண்டிய வர்களை எப்படி நிலையான இன்ப வாழ்வில் நிலவச் செய்ய முடியும்?

ஆகவே உலகில் இப்படிப்பட்ட யாரையும் மகான்களால் எதிர் பார்க்கப்பட்ட மகாபுருஷராகக் கொள்ள முடியாது.

மகான்களும், சித்தர்களும், சமயத் தலைவர்களும் எதிர் பார்த்ததற்கு மேல் ஆற்றலுடைய மெய்ஞ்ஞான புருஷர் ஒருவர் வந்து விட்டார். அவர்தான் அருட்பெருஞ்ஜோதி யாகவே இருக்கும் வள்ளலார்.

வள்ளலாரை மட்டும் எல்லாம் வல்ல மகா புருஷர் என்று எப்படி ஏற்றுக் கொள்ளுவது?

எல்லாம் வல்ல நித்திய சத்திய அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் ஒருவரே. அவரே எல்லார் உள் இருந்தும், அவர்களி டம் சிறிதளவு ஆற்றலையும், விளக்கத்தையும், செயலையும் வெளிப்படுத்திக் கொண்டு இருக்கிறார். என்றாலும் முடிவில் அவர்களைத் தன்னில் கலந்து மறைந்துவிடவே செய்கிறார்.

மறைந்து போனவர்க்குள் இருந்த இறைவன் மட்டும் மறையாமல் எப்போதும் போல் இருக்கிறார். வழக்கம் போல இன்னும் பல மகான்களையும், ஞானிகளையும், சித்தர்களையும், முத்தர்களையும் தோற்றுவிக்கிறார். முடிவில் அவர்களையும் தன் உள் ஐக்கியப்படுத்திக் கொள்கிறார். இதுதான் உலகில் தொடர்ந்து நடைபெற்று வரும் நிகழ்ச்சி.

இந்தக் காரியங்களைத் தொடர்ந்து செய்துவரும் இறைவன் நிலையான அருள் இன்பமாய் எல்லோரின் அகத்துக் குள்ளும் இருக்கிறார். ஒரு சிலரிடம் மட்டும் மக்கள் மதிக்கும் படிப் புறத்திலும் காட்சி தருகிறார். அவர்கள் மூலமாகத் தன் ஆனந்த அனுபவத்தைச் சிறிதளவு தற்காலிகமாகக் காட்டுகிறார். பிறகு அவர்கள் புற வடிவைக் கழற்றிவிட்டுத் தன் நிலையில் தானே இருக்கப் போய் விடுகின்றார்.

இதற்குக் காரணம் என்ன?

இந்த மகான்கள் தங்கள்அகநிலையில் இருக்கும் இறைவனை உணர்ந்து அவருடன் ஒன்றி வாழும் முறையில் வாழவில்லை. அதனால் அவர்கள் உடலுக்குள் இருந்த இறைவன் அந்த

உடலுக்குள் இருந்த தன் ஆற்றலை நீக்கிக் கொள்கிறார். சத்தாகிய இறைவன் போன அவர்கள் உடல் செத்துப்போய் விடுகிறது.

அருவ நிலையில் இருக்கும் அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் இப்போது ஒருவர் அகநிலையிலிருந்து, அனக நிறைவு பெற்று அருவுருவ வடிவோடு வாழத் தொடங்கியிருக்கிறார். அவர் தான் அருட்பிரகாச வள்ளலார்.

அகவுலகில் மட்டும் அருவமாய் இருந்து வந்த அருட் பெருஞ்ஜோதிக் கடவுள் இப்போது அருட்பிரகாச வடிவொடு ஆனந்த அனுபவம் பெற்று இருக்க ஆரம்பித்திருக்கிறது.

வள்ளலார் வடிவில், எங்குமாய், எல்லாமாய், அருட் பெருஞ்ஜோதியாய் இருக்கும் ஆண்டவர்தான் இருந்து வருகிறார். ஆண்டவரே வள்ளலாராகவும், வள்ளலாரே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகவும், வள்ளலார் வடிவி லேயே இப்போது இருக்கிறார்.

உலகம் தோன்றிய நாள் முதல் இல்லாத அதிசயமாக வள்ளலார் மட்டும் எப்படி இறை உருவத்துடன் திகழ முடிந்தது? இதில் தான் மனித மனத்தின் வளர்ச்சியின் நிறைவு தெரிகிறது. இதுவரையில் உலகில் தோன்றிய மகான் களின் நோக்கம், லட்சியம் எல்லாம் இறைவனுடன் தாங் களும் கலந்துவிட வேண்டும் என்பதுதான். அந்த மகான் களின் சிந்தனை வளர்ச்சி அவ்வளவுதான். தங்கள் லட்சியப் படி அவர்கள் கடவுளுடன் கலந்து மறைந்து போனார்கள்.

வள்ளலார் அந்த மகான்களின் சிந்தனைக்கு மேல் நின்று சிந்தனை செய்தார். இறைவனுடன் கலந்து வாழ்ந்து சூனிய மாகாமல், இறை அனுபவத்தைப் பெற்றுக் கொண்டுபேரின்ப வாழ்வில் வாழ்வதுதான் வாழ்க்கை என்று கண்டார். மனிதனின் லட்சியம் இறைவனை அனுபவிப்பதுதான் என்ற புதிய லட்சியத்தைக் கொண்டார். இறைவன் எங்கோ வெளியில் இல்லை. ஒவ்வொருவர் அகத்திலும் இருக்கிறார்; அகத்தில் இருக்கும் அவரைப் பார்த்து அவருடன் ஒன்றி அவர்

அனுபவத்தைப் பெற்று வாழ்வதுதான் பேரானந்தப் பெரு வாழ்வு என்பதையும் தெரிந்து கொண்டார்.

இந்த உன்னதமான குறிக்கோளுடன். வள்ளலார் இறை அருளை நாடினார். இறைவன் தன் திருஅருளை வள்ளலாருக்கு அவர் விரும்பியபடியே வழங்கினார். இதுதான் வள்லார் பெற்ற மரணமிலாப் பெருவாழ்வு. இந்த வாழ்வைப் பெறும் நெறிதான் சுத்த சன்மார்க்க நெறி.

உலகம் எதிர்பார்த்திருந்த மகாபுருஷராக இப்போது வள்ளலார் வந்திருக்கிறார். எல்லாவற்றிலும் உயர்ந்தவராக வள்ளலார் வந்திருக்கிறார். எல்லாம் வல்ல இறைவனின் ஆற்றல் முழுவதையும் பெற்றவராக வள்ளலார் வந்திருக் கிறார். இறைவனே வள்ளலாராக வந்திருக்கிறார்.

மரணமிலாப் பெருவாழ்வுடன் இருக்கும் வள்ளலார் இப்போது எங்கே இருக்கிறார்? அவரைக் காண முடியுமா? அவரைக் கண்ணால் பார்க்காமல், அவருடைய லட்சியத்தை நம்பி எப்படி சன்மார்க்கத்தில் செல்வது?என்றுகேட்கிறார்கள்.

கடவுள் உண்மையை உள்ளபடி உணர்ந்து கொள்ளாத தால் அவர்களிடம் இந்தக் கேள்வி எழுந்திருக்கிறது. கடவுள் உண்மையை உள்ளபடி உணர்ந்தவர்கள் இந்தக் கேள்வியை எழுப்ப மாட்டார்கள்.

உலகம் கடவுள் உண்மையை அறியாதிருக்கும் வரை, வள்ளலாரை நாம் எதிர்பார்த்த மகா புருஷராக உலகம் ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம்.

கடவுள் உண்மையைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் தருணம் வந்து விட்டது. இந்த உலக மக்களும், மற்ற உலக மக்களும் வள்ளலாரைப் போற்றப் போகிறார்கள். தாங்கள் இதுவரை உடல் பொய் என்று சொல்லி வந்தது பொய்யாகிப் போனதை உணரப் போகிறார்கள். தங்கள் உடல்கள் மெய் யானது அழிவில்லாதது என்பதை அறியப் போகிறார்கள். மரணமிலாப் பெருவாழ்வைப் பெற்றுத் திகழப்போகிறார்கள்,

இப்போது சத்திய ஞானசபையில் நாம் தரிசிக்கும் அருட் பெருஞ்ஜோதி பதியே, திருவருட்பிரகாச வள்ளலாகவும் இருக்கிறார்.

சாதாரண மனித வடிவில் வள்ளலாரை நினைப்பதும், உருவாக்கிக் கொள்ளுவதும் சரியல்ல. வள்ளலார் இப்போது புறத்தோற்றம் மட்டும் கொண்டவர் அல்ல. அகத்தில் அருளி நிலையில் அருகியும், அனக நிறைவில் பேரருளோடு வெளியில் எங்கும் நிரம்பியும் இருப்பவர்.

அருட்பிரகாச வள்ளலாரைச் சித்திவளாகத் தீப வடிவ மாகவே கொள்ளவேண்டும். அவரை நம் உள்ளே காண வேண்டும். நம் உள் இருக்கும் அவருடன் கலந்து நிற்கும் அனுபவமும் பெறவேண்டும். இந்த அனுபவத்தைப் பெற்றால் உள் ஒளியிலிருந்து இந்த அனுபவம் பெருகி நமது உயிரிலும் உடம்பிலும் நிறைந்து, நம்மைச் சுற்றியுள்ள உலகம் முழுவதும் வள்ளலார் வடிவில் அருட்பெருஞ்ஜோதி விளங்குவதைக் காண்போம்.

அப்போது நமக்கு ஒரு இன்ப அனுபவம் ஏற்படும். அது வள்ளலாரின் உண்மை வடிவத்தில் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் வடிவம் ஒன்றி இருப்பதை உணர்த்தும். அந்த இன்ப அனுபவம் நாமாகவும்,நாமே இன்ப அனுபவமாகவும், ஒன்றும்போது நமக்குள் வள்ளலாரும் அருட்பெருஞ்ஜோதி யும் ஒன்றி இருப்பதைக் காண்போம்.

திருஅருட்பிரகாச வடிவைத் தம் உள் கண்டவர்கள் திரு வருளால் நித்தியானந்த வாழ்வில் விளங்குவார்கள். இது தான் மனிதனுக்கு திருவருளால் ஆணை செய்யப்பட்டிருக்கும் மெய்யான இன்ப வாழ்வு நிலை.

உலகம் சுத்த சன்மார்க்கத்தால் நித்தியஆனந்தவாழ்வை அடைவதற்காகவே கடவுள் உண்மை முழுவதும் இப்போது தோன்றி இருக்கிறது. எல்லாம் அருட்பெருஞ்ஜோதியின் தனிப்பெருங் கருணைதான்.

ஆண்டவர் திரு அருளால் உலகில்சன்மார்க்கம் தழைக்கப் போவது நிச்சயம்.

சன்மார்க்க வாழ்வால் உலகம் பேரின்பப் பெருவாழ்வு பெறப் போவதைத் தம் தீர்க்க தரிசனத்தால் உணர்ந்து வள்ளல் பெருமான் சொல்லி இருக்கிறுர்.

ஆனந்த உருவமான இறைவனே எல்லாமாக, எல்லாரு மாக இருந்தாலும், அவர் ஒவ்வொருவர் உள்ளேயும் இருக் கிறுர். அவரை அவர்கள் தங்கள் அனுபவத்தினுல் மட்டும் காணக்கூடியவராக இருக்கிறுர்.

மனிதன் இறைவனைத் தன் உள் கண்டு இன்ப வாழ்வில் வாழாமல், எங்கோ அவர் வெளியில் இருப்பதாக எண்ணி அவரைத் தேடித் துன்ப வாழ்விலேயே தொல்லைபட்டு மரண மடைந்து கொண்டிருக்கிறுன்.

வருங்கால மனிதன் சுத்த சன்மார்க்கத்தை மேற் கொள்ளப் போவதால் அவன் அழியா இன்ப வாழ்வைப் பெற்று விளங்குவான். இது வள்ளல் பெருமான் ஆணை.

இறைவன் திருஅருள் யார் யாரை, எப்படி எப்படி, எந்த எந்தக் காலத்தில், யார் யார் மூலமாக, என்ன என்ன செய்விக்க வேண்டுமோ, அதை அதை, அந்த அந்தக் காலத் தில் செய்து கொண்டிருக்கும்.

மனிதன், தானே பெரிய காரியத்தைச் சாதித்து விட்ட தாக எண்ணிப் பூரித்துப் போகவோ, தற்பெருமை கொள் ளவோ அவனுக்கு உரிமை இல்லை.

எல்லாம் செய்யவல்ல இறைவனுடைய திருவருள் என்ன செய்தால் உலகத்துக்கு இன்ப வாழ்வு ஏற்படுமோ அதைச் செய்யும்; செய்விக்கும்; செய்துகொண்டும் இருக்கும்.

இறைவனின் இந்த நோக்கத்தைப் புரிந்துகொண்டு மனி தன் செயல்பட வேண்டும். அதற்கு நம் உள் இருக்கும் இறைவனை அறிந்து, அவருடன் ஒன்றி, அவர் செய்விப்பதை செய்துகொண்டு இருப்போம். அதனுல் எல்லோர்க்கும் நிலைத்த இன்பம் உண்டாகும்.

# 11. அருள் ஆட்சி

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் திருவுள்ளம் எல்லார்க்கும் இன்ப வாழ்வு வழங்குவதுதான். அதற்காகவே இந்தப் பிரபஞ்சத்தில் அருள் நியதி முறையை வகுத்து, அதன்படி அனைத்தையும் நடத்தி வருகிறார்.

பேருலகத்து உயிர்களையும், பொருள்களையும்தன் ஆணைப்படி தவறில்லாமல் நடத்தி வைக்கும் பெருந்திறல் படைத்தவர் அருட்பெருஞ்ஜோதி.

நமக்கோ ஒரு நாட்டு மக்களை ஆள்வதற்கு எவ்வளவு முயற்சி தேவைப்படுகிறது? எத்தனைத் துணைவர்களின் உதவி வேண்டி இருக்கிறது? எத்தனை கொடிய சட்ட திட்டங்கள் மூலமாக அவர்களை அடக்கி ஆள வேண்டியிருக்கிறது? இருந்தும் அந்த ஆட்சி நிலைத்து இருப்பதில்லை; மாறி விடுகிறது.

உலகில் சக்கரவர்த்திகளாக இருந்தவர்கள் எல்லாம் எங்கே? சர்வதிகாரிகளாக இருந்தவர்கள் எல்லாம் எங்கே? அவர்கள் ஆண்ட நாடுகளும் சாம்ராஜ்யங்களும் எங்கே?

ஒருவரையும் ஒன்றையும் நிலையாகக் காணோம்.

இவர்கள் ஆட்சி எல்லாம் எவ்வளவு அற்பமானது, எவ்வளவு குறைபாடு உடையதுஎன்று அவர்கள் வரலாறுகள் கூறுகின்றன.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் தம் தனிப்பெருங்கருணையினால் எண்ணற்ற உலகங்களையும், அதில் வாழும் உயிர்களையும், பொருள்களையும் அனந்த காலமாக ஆண்டு வருகிறார்.

ஒழுங்கு நியதி தவருது ஆண்டு வருகிருர். ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களால் நித்திய ஆனந்தக் குறிக்கோளேயே நோக்கி உலகை நடத்திச் செல்கிருர்.

இதுதான் ஆண்டவரின் அருட்பேராட்சி. ஆண்டவர் ஒருவரே முன்னும் பின்னும், அன்றும் இன்றும், எல்லாரை யும், எல்லாவற்றையும் ஆண்டவர்; ஆள்கின்றவர்; ஆள்பவர் என்று எக்காலமும் விளங்கி வருகிருர்.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுளுக்கு 'ஆண்டவர்' என்று எப்படிப் பெயர் வந்தது? இந்தப் பிரபஞ்சப் பேருலகைப் படைத்து, அன்று முதல் நியதியுடன் ஆண்டு வருவதால் 'ஆண்டவர்' என்று அவருக்குப் பெயர் வந்தது.

நாடாளும் மன்னர்கள், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்று அரசியல் கூறுபாடுகளின் துணைகொண்டு அற்ப ஆட்சி புரிந்துவிட்டு சொற்ப காலத்தில் மறைந்து விடு கிருர்கள்.

எல்லாம்வல்ல அருட்பெருஞ்ஜோதி ஆண்டவருடைய அரசின் பெருமையை எப்படிப் புகழ்வது? ஆண்டவர் நித்தியர்; எங்கும் பரிபூரணமாய் இருப்பவர். எல்லோருக்கும் எக்காலத்திலும் அவர்களுக்குத் தேவையானவற்றை எல்லாம் அருளிக்கொண்டு இருப்பவர்.

மூன்று காலத்திலும் முறைமை தவருது ஆண்டு வருபவர் அருட்பெரும் அரசர். அவர் அம்பலத்தரசர்; நடராஜர்; மோட்ச சாம்ராஜ்யாதிபதி என்றும் பலவகைப் பெயர்களையும் உடையவர்.

ஆண்டவரின் அருட்பெருமையையும், உண்மையையும் நன்கு உணர்ந்தவர்களே அவருக்கு இருக்கும் பெயர்களின் மெய்ப்பொருளைப் புரிந்துகொள்ள முடியும்.

1. அம்பலத்தரசர் என்ருல் அம்பலத்தில் இருந்து அரு ளாட்சி செய்கிற அரசர் என்பது பொருள்.

அம்பலம் என்பது நம் சிர நடுவில் இருக்கும் அருள் மெய்ஞ் ஞானபீடம். அம்பலம் என்ற சொல்லை அம்+பல்+அம் என்று பிரிக்கலாம். இதுவே அ(உ)ம்+பல்+அ (உ) ம் என்றும் விரியும்.

கடவுள் பிரணவ வடிவமானவர். அவருடைய அருள் செயல்கள் ஒவ்வொன்றின் தொடக்கமும், முடிவும் ஓங்கார வடிவமாகவே இருக்கும். இதை அம்பலம் என்று சொல்லின் ஆரம்பத்திலும் முடிவிலும் உள்ள ஓங்கார வடிவம் காட்டுகின்றன. அவர் அமர்ந்திருக்கும் மெய்ஞ்ஞானபீடம் பகர வடிவமானது. இது ஓங்கார மூளையான முகுளத்தின் மேல் பகுதியில் இருக்கிறது. பகரத்துடன் லகரமெய் சேர்ந்து அது பல் போலத்தோன்றுகிறது. இது அருட்பெருஞ் ஜோதியின் தோற்றமாக இருக்கிறது.

இதுதான் அம்பலத்துள் விளங்கும் ஆண்டவர் உண்மை. இங்கிருந்துதான் ஆண்டவர் நம்மை ஆள்கிருர்.

இறைவன் எல்லா இடத்திலும் நீக்கமற நிறைந்து எல்லாவற்றையும் ஆண்டு வந்தாலும் நம் சிரநடு அம்பலத்தில்தான் அவரைக் காணமுடியும். இறைவனை நம் சிற்றம்பலத்தில் தான் கண்டு அனுபவிக்க முடியும். இதனுல்தான் இறைவனை அம்பலத்தரசர் என்கிருேம்.

2. அம்பலத்தில் இருந்து கொண்டே தன் ஐந்தொழிலையும் இடைவிடாது நடத்தி வருபவர் இறைவன். ஐந்தொழிலேயே இறைவனின் நடனமாகவும், தாண்டவமாகவும் சொல்லுகின்றனர். இடையருது நடைபெறும் ஐந்தொழிலே இறைவனின் நித்திய நடனம்.

அம்பலத்தில் ஆடிக்கொண்டே, எல்லாரையும் எல்லாவற்றையும் ஆட்டுவித்து, ஆண்டுகொண்டு இருக்கிருர் இறைவன். இதனுல்தான் இறைவனுக்கு நடராஜர் என்ற பெயர் ஏற்பட்டது.

இது போல், இறைவனுக்கு உரிய எல்லாப் பெயர்களுக்கும் காரணங்களைக் காட்டிப் பொருள் சொல்லிக்கொண்டே போகலாம்.

எல்லாவற்றையும் ஆண்டு வரும் அருட்பெருஞ்ஜோதிக் கடவுளை நம் சிரநடுவில் இருக்கும் சத்திய ஞான சபையில் சிற்றம்பலத்திலே கண்டு களிக்கிறோம்; பயன் பெறுகிறோம்.

ஞானசபையுள் இருந்து ஆளும் அருட்பெருஞ்ஜோதியை இப்போது அருட்பிரகாச வள்ளல் வடிவிலேயே காண்கிறோம்.

வள்ளலாரே இந்த உண்மையை நமக்கு வெளிப்படுத்தி இருக்கிறார். அதை அருள் விளக்க மாலையாகவே பாடி வைத்திருக்கிறார்.

''தன்அரசே செலுத்தி நின்ற தத்துவங்கள் அனைத்தும்
தனித்தனிஎன் வசமாகித் தாழ்ந்தேவல் இயற்ற
முன்அரசும் பின்அரசும் நடுஅரசும் போற்ற
முன்னும்அண்ட பிண்டங்கள்எவற்றினும்எப்பாலும்
என்அரசே என்றுரைக்க எனக்குமுடி சூட்டி
இன்பவடி வாக்கிஎன்றும் இலங்கவைத்த சிவமே
என்அரசே என்உயிரே என்இருகண் மணியே
இணையடிப்பொன் மலர்களுக்கு என் இசையுமணிந்
தருளே''

இதில் வள்ளலார் அருட்பெருஞ் ஜோதியையே 'சிவம்' என்று சொல்லுகிறார். அருட்பெருஞ் ஜோதியின் தயவால் நித்தியானந்த நிலையில் இருக்கிறார்.

இறைவன் ஆணைப்படி நடந்துவந்த வள்ளலாருடைய உடற்கூறுகள் எல்லாம் இப்போது வள்ளலாரிடம் அடங்கி நிற்கின்றன. அவர் விருப்பப்படி அவருடைய ஆணையை நிறைவேற்றுகின்றன.

ஆண்டவரின் அருளரசு, வள்ளலாரிடம் வந்துவிட்டது! அவர் பெற்றிருக்கும் அரசு நித்தியமானது. வள்ளலார் பெற்றிருக்கும் அருள் அரசை மற்ற எல்லா அரசுகளும் போற்றிப் புகழ்கின்றன.

எங்கும் எல்லா இடத்திலும் இருக்கும் அரசு வள்ளலாரின் ஆட்சிக்கு உட்பட்டு இருக்கும்படியாக அவருக்கு அருட்

பெருஞ்ஜோதி மணிமுடி சூட்டியது. அவர் கையில் செங் கோலையும் கொடுத்துவிட்டது.

தம் கையில் செங்கோல் கொடுக்கப்பட்டதையும், தாம் ஐந்தொழில்களையும் செய்யும் ஆற்றல்களைப் பெற்றிருப் பதையும், இந்த ஆற்றல்களை தமக்கு அருட்பெருஞ்ஜோதி அளித்திருப்பதையும் பல இடங்களில் வள்ளலார் உவகை யுடன் சொல்லி இருக்கிறார்.

உலகத்து உயிர்களையும், பொருள்களையும், ஆற்றல் களையும், மற்ற எல்லாவற்றையும் அவற்றின் அகத்தில் இருந்தே இறைவன் நியதிப்படி ஆண்டுவந்தார். அவருடைய விதிப்படிதான் எல்லாம் தோன்றியும் மறைந்தும் வந்தன.

இறைவனின் விதிக்கு விலக்காக, தோற்றமும், மறைவும் அற்ற ஒன்று, இறைவனின் திருவருளாலேயே வெளியாகி இருக்கிறது. அது எதனாலும் எக்காலமும் அழியாது இருக்கும் ஆண்டவனைப்போல விளங்கும் ஆற்றலுடன் இருக்கிறது. அதுதான் திருவருட்பிரகாச வள்ளலாரின் வடிவம்.

வள்ளலார் பெற்றிருக்கும் அனக வடிவம் அவருடைய பிறவித் தோற்றமல்ல. பிறப்பவை மறைவது இயல்பு என்பது விதி.

'பிறவா யாக்கைப் பெரியோன்' என்னும் பேற்றை யுடைய அருட்பெருஞ் ஜோதியே வள்ளலார் வடிவத்துக்குள் வந்து இருக்கிறது.

அருட்பிரகாச வள்ளலாரின் அனக வடிவம் ஒரு தாய் வயிற்றில் பிறவாமலே தோன்றியது. அது இறவாமலே என்றும் நிலைத்து இருக்கக்கூடியது. தோன்றியவை மறையும் என்ற விதிக்கு விலக்காக வள்ளலார் அனக வடிவம்பெற்று, நிலைபெற்று இருக்கிறார். அனக வடிவம் பெற்றவர்கள் மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்வார்கள்.

காண்பதற்கு அரியது கடவுளின் பெருஞ்ஜோதி உருவம். இது இன்று எல்லாரும் முயன்று பார்த்து உய்யும்படித்

திருவருட் பிரகாச வள்ளலார் உருவத்திற்குள் வந்து நிறைந் திருக்கிறது. வள்ளலாரின் அனக உருவத்தைஅருள் கண்ணுல் பார்த்து மகிழலாம்.

அருட்பெரும் ஜோதியே இப்போது அருட்பிரகாச வள்ளலார் வடிவில் இருக்கிருர் என்ருல் உள்ளதை உள்ளபடி அறியாதவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

வள்ளலார் பிறந்து வளர்ந்து, மறைந்த வரலாறுதான் உலகம் அறியுமே. அப்படியிருக்க, கடவுளே வள்ளலார், வள்ளலாரே கடவுள் என்ருல் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?' என்று கேட்பார்கள். இது உள்ளதை உள்ளபடி அறிந்துகொள்ளாத மக்கள் கேட்கும் கேள்வியாகும்.

உலகம் அறிந்த வள்ளலாரைக் கடவுள் என்று யாரும் ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை; இது உண்மையும் அல்ல.

அருட்பெருஞ் ஜோதியே இன்று அருட்பிரகாச வள்ளல் வடிவுக்குள் அருள்ஞான கண்ணுக்குத் தோன்றுபவராக இருக்கிருர். இவர் நித்திய வாழ்வு பெற்ற வள்ளலார். இந்த உண்மையைத் தெரிந்து அவரைப் போற்றவேண்டும்.

இறைவனின் விதி ஆட்சியே எங்கும் நடந்துகொண்டி ருக்கும். இந்த விதி இறைவனின் அருளுக்கு மாத்திரமே கட்டுப்பட்டு இருக்கும்.

இறைவனின் விதியை, மதியாலும், துதியாலும், வேறு எதனுலும் வெல்ல முடியாது. அருள் ஆட்சியினுல்தான் வெல்ல முடியும்.

அருள் ஆட்சியைப் பெருத நம் முன்னேர்கள் விதியை வென்றுவிட்டதாகக் கூறி வந்தார்கள். அவர்கள் கூறியது உண்மை அல்ல.

விதியை அவர்கள் வென்றிருந்தால் விதியால் நடை பெறும் மரணத்தையும் அவர்கள் வென்றிருக்கவேண்டும்; மரணமிலாப் பெருவாழ்வை அவர்கள் பெற்றிருக்கவேண்டும். அவர்களில் யாரும் அவ்வாறு பெற்றதாகத் தெரியவில்லை.

வள்ளலாரிடமோ நிறை அருள் தோன்றி இருக்கிறது அது அவரை நித்திய அருட்பிரகாசமுடையவராக ஆக்கி இருக்கிறது. விதியை அடக்கி ஆளும் பதியாக அருட்பிரகாச வள்ளலார் ஆகிவிட்டார். அவர் விதியை அடக்கி ஆளும் அதிகாரத்தையும் பெற்று இருக்கிறுர். அதனல் அவர் மரணத்தையே மரணமடையச் செய்துவிட்டார்; மரண மிலாப் பெருவாழ்வைப் பெற்றிருக்கிறுர்.

ஐந்தொழிலும் செய்ய எனக்கே அருள் அளித்தாய், என்கிறுர் வள்ளலார். இப்போது அருள் ஆட்சி, அருட் பிரகாச வள்ளலார் மூலமாக நடைபெற்று வருகிறது.

வள்ளலாரின் அருட் செங்கோல் ஆட்சி எங்கும் தோன்றப்போகிறது. இதை வள்ளலாரின் 'வருதருணப் பாடல்'களால் அறிகிறோம்.

''சத்தியவான் வார்த்தைஇது தான் உரைத்தேன் கண்டாய்
சந்தேகம் இலைஇதனிற் சந்தோடம் உறுவாய்
இத்தினமே அருட்சோதி எய்துகின்ற தினமாம்
இனிவரும்அத் தினங்கள்எலாம் இன்பம்உறுதினங்கள்
சுத்தசிவ சன்மார்க்கம் துலங்கும் எலா உலகும்
தூய்மைஉறும் நீஉரைத்த சொல்அனைத்தும் பலிக்கும்
செத்தவர்கள் எழுந்துலகில் திரிந்துமகிழ்ந் திருப்பார்
திருவருட் செங்கோல் எங்கும் செல்லுகின்ற தாமே!''

அருட்ஜோதியைத் தாம் பெற்றதுபோல எல்லாரும் பெறும் நாள் இந்த நாள் என்று சொல்கிறுர் வள்ளலார். சுத்த சிவ மார்க்கம் உலகம்எங்கும் பரவப்போகிறது என்று சொல்கிறுர்.

இதனல்மக்கள் வாழ்க்கை தூய்மை அடையப்போகிறது, அக ஆன்மாவை உணராமல் செத்தவர்களாக நடமாடிய வர்கள் அக ஆன்மாவில் எழுச்சியைப் பெற்று மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்வார்கள். நான் சொல்லுவது எல்லாம் பலிக்கப்போகிறது. என்னுடைய செங்கோல் உலகம் எங்கும் செல்லப்போகிறது என்று அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறுர் வள்ளலார்.

அருள் ஆட்சியைத் தமக்குக் கொடுக்க வேண்டும் என்று முன்பே வள்ளலார் இறைவனை வேண்டி இருக்கிறார்.

''செப்பாத மேல்நிலை மேல் சுத்த சிவமார்க்கம் திகழ்ந் தோங்க அருட்சோதி செலுத்தியிடல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டிருக்கிறார். வள்ளலாரின் வேண்டுகோளை ஏற்று அவருக்கு அருள் ஆட்சியை அருட்பெருஞ் ஜோதி வழங்கி இருப்பதை இந்தப் பாடலில் காண்கிறோம்.

திருவருட் செங்கோலாட்சி இங்கு மட்டுமல்ல, பிரபஞ் சத்தில் உள்ள எண்ணற்ற உலகங்களிலும் நடைபெறப் போகிறது என்றும் தெரிவிக்கிறார் வள்ளலார்.

செத்தவர்கள் எழுந்திருத்தல் என்றால் உயிர்போன பிணங்களை எழுப்புவது அல்ல. அந்தப் பிணங்களை எழுப்பினால் அவர்கள் சிரித்துக்கொண்டு எழமாட்டார்கள். அல்லலோடு எழுந்து தொல்லைபட்டு மீண்டும் மடிந்துபோவார்கள்.

அகம் இருந்து அருளாலே எழுகின்றவர்களோ உள்ளும் புறமும் மகிழ்ச்சி பொங்க எழுந்திருப்பார்கள். நிலைத்த இன்ப வாழ்வோடு எங்கும் சென்று உயிர்க்குலத்துக்குத் தொண்டாற் றிக்கொண்டேயிருப்பார்கள்.

இவர்கள் இறவாதவர்கள். சுத்த சன்மார்க்கசித்தியான மரணமிலாப் பெருவாழ்வைப் பெற்றவர்கள். உலகில் மரண மிலாப் பெருவாழ்வைப்பெற்ற முதல் மனிதர் வள்ளல் பெருமான். அவருக்கே அருள் ஆட்சிப் பட்டம் உரிமையோடு வழங்கப்பெற்று இருக்கிறது.

அருள் ஆட்சிப் பட்டம் பெற்ற அருட்பிரகாச வள்ளலார் அருட்பெருஞ் ஜோதிக் கடவுளின் எல்லா அம்சங்களையும் பெற்றிருக்கிறார். இதை அவரே அருட்பெருஞ்ஜோதி அகவலில் உலகறியச் சொல்கிறார்.

''தந்தையே! தங்கள் அருள் செங்கோலை என் கையில் கொடுத்து நீயே திருஅருள் செங்கோல் செலுத்து என்றீர்கள். தங்கள் ஆட்சியில் இருக்கும் பொருள்களை எல்லாம் எனது ஆட்சிக்குள் இருக்கவைத்தீர்கள். தாங்கள் எந்தத்

தோற்றத்தில் இருந்து ஆட்சி செலுத்தினீர்களோ அந்தத் தோற்றத்தையே எனக்குக் கொடுத்தீர்கள்.

''தாங்கள் செய்து வந்த அற்புதச் சித்துகளை எல்லாம் தங்கள் முன்னிலையிலேயே என்னைச் செய்யும்படிப் பணித்தீர்கள். தங்கள் ஆணைக்குக் கட்டுப்பட்ட என் உடற்கூறுகள் எல்லாவற்றையும் என் ஆணைக்கும் அடங்கும்படிச் செய்துவிட்டீர்கள். தாங்கள் ஏற்றுக்கொண்டிருந்த ஒப்பற்ற அருள்ஜோதிச் செங்கோலை என் கையில் கொடுத்தீர்கள்.

''தங்கள் வடிவமும், தங்கள் திருஅருள் வடிவமும், என் வடிவமும் இணைந்து ஒன்றி ஒளிரும்படிச் செய்துவிட்டீர்கள். தங்களுடைய இயலையும் செயலையும் என்னுடைய இயலாகவும் செயலாகவும் செய்து அருளினீர்கள். தங்கள் தோற்றத்தையே என் தோற்றமாகவும், தங்கள் வார்த்தையையே என் வார்த்தையாகவும் செய்தீர்கள்'' என்று மனம் திறந்து பேசுகிறார் வள்ளலார்.

''தங்கோல் அளவது தந்தருட் ஜோதிச்
செங்கோல் செலுத்துஎனச்செப்பிய தந்தையே

தன்பொருள் அனைத்தையும் தன்னரசாட்சியில்
என்பொருள் ஆக்கிய என்தனித் தந்தையே

தன்வடி வனைத்தையும் தன் அரசாட்சியில்
என்வடி வாக்கிய என்தனித் தந்தையே

தன்சித் (து) அனைத்தையும் தன்சமு கத்தினில்
என்சித் (து) ஆக்கிய என்தனித் தந்தையே

தன்வசமாகிய தத்துவம் அனைத்தையும்
என்வசம் ஆக்கிய என்உயிர்த் தந்தையே

தன்கையில் பிடித்த தனிஅருட் ஜோதியை
என்கையில் கொடுத்த என்தனித் தந்தையே

தன்னையும் தன்அருட் சத்தியின் வடிவையும்
என்னையும் ஒன்றென இயற்றிய தந்தையே

தன்இயல் என்இயல் தன்செயல் என்செயல்
என்ன இயற்றிய என்தனித் தந்தையே

தன்னுரு என்னுரு தன்னுரை என்னுரை
என்ன இயற்றிய என்தனித் தந்தையே''
(அகவல் 1133-1150)

இவ்வாறு வள்ளல்பெருமான் சொல்வது தான் பெற்ற பேற்றைப் பெருமையாகச் சொல்லிக் கொள்வதற்காக அல்ல. தனித்தலைமைப் பெருங்கடவுளின் பெருங்கருணையை உலகுக்கு எடுத்துக் காட்டி அவர்களை உயர்த்துவதற்காகத்தான் இவ்வாறு சொல்லி இருக்கிறார்.

''ஆண்டவரின் அருட்ஜோதி ஆட்சி என்னுடைய ஆட்சி யாகவே மாறிவிட்டது. வேதங்களும் ஆகமங்களும் என்னைப் பற்றித்தான் பேசுகின்றன. இந்த உலக வாழ்க்கையில் என்னைப்பற்றி யாரும் தவறாகப் பேசமாட்டார்கள். எனக்கு இனிமேல் பிறவியே கிடையாது. அந்தத் துன்பம் இன்றோடு தொலைந்துவிட்டது'' என்று சொல்கிறார் வள்ளலார்.

''ஐயர்அருட் சோதிஅர சாட்சிஎன தாச்சு
ஆரணமும் ஆகமமும் பேசுவதென் பேச்சு
எய்யுலக வாழ்வில் எனக் கென்னையினி ஏச்சு
என்பிறவித் துன்பமெல்லாம் இன்றோடே போச்சு''

என்று சொல்லிவிட்டு, ''அருட்சோதியாக நானே ஆனேன்; அருள் ஆட்சியைப் பெற்றேன்; உள்ளதை உள்ளபடி அறியாமல் கிடந்த மயக்கம் எல்லாம் என்னைவிட்டுப் போய் விட்டது. மரணத்தில் இருந்து விடுபட்டேன்'' என்று முரசு அறையச் சொல்கிறார் வள்ளலார்.

''அருட்சோதி யானேன்என் (று) அறையப்பா முரசு!
அருளாட்சி பெற்றேன் என் (று) அறையப்பா முரசு!
மருட்சார்பு தீர்ந்தேன் என் (று) அறையப்பா முரசு!
மரணம் தவிர்ந்தேன் என் (று) அறையப்பா முரசு!''

என்ற இந்தப் பாடல்களின் மூலமாக வள்ளலார் அடைந் திருக்கும் அருட்பெருஞ் ஜோதி நிலையையும், அதனால்

அவருக்குக் கிடைக்கப் பெற்றிருக்கும் அருளாட்சியையும் தெரிந்து கொள்ளலாம்.

கருணையிலா ஆட்சி கடுகி ஒழியவும், அருள் நிறைந்த நல்ல ஆட்சி வரவும் சுத்த சன்மார்க்கம் தோன்றி இருக்கிறது.

கடவுளின் இயற்கை நியதிமுறை ஆட்சி, ஒரே சீராகப் பலகோடி ஆண்டுகளாக ஊர்ந்துகொண்டிருந்தது. அதற்கு ஒரு வேகம் கொடுக்கவே வள்ளலாரின் அருள் ஆட்சி இப் போது ஏற்பட்டிருக்கிறது.

இந்த மாற்றம் உண்மைதானு ? அப்படியானுல் இது ஏன்?

பழைய கடவுள் இப்போது, தன் அரசு முழுவதையும், ஆட்சிப் பொறுப்பு எல்லாவற்றையும் வள்ளலாருக்கே கொடுத்துவிட்டாரா ? அவருக்கு முடி சூட்டிப் பட்டங்கட்டி விட்டாரா? அவர் கையில் செங்கோலைக் கொடுத்துவிட்டு ஓய்வு பெற்று விட்டாரா ?

வள்ளலார் புதிய அருளாட்சியை, ஆண்டவரிடம் இருந்து பெற்றுக் கொண்டுவிட்டாரா? இறைவனின் அரசுக் கட்டிலில் ஏறி அருட் சிங்காதனத்தில் அமர்ந்துவிட்டாரா ? தம் அருள் ஆட்சிச் சக்கரத்தைச் சுழற்றி அகில உலகத்தையும் ஆளப் போகிருரா ?

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரின் ஆட்சி முடிந்து விட்டதா தனித்தலைமையின் பதவிக்குப் போட்டி ஏற்பட்டு விட்டதா ? புதியவர் ஆட்சி பீடத்தில் அமர்ந்துவிட்டாரா ?

கடவுள் ஒருவரே என்பது பொய்யாகிவிட்டதா ? அவர் நிலைக்கு வளளலார் வந்துவிட்டாரா ? உலகில் இரண்டு கடவுளா ? என்ற குழப்பம் ஏற்படுகிறது ! குழப்பமே அடைய வேண்டியதில்லை:

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் ஒருவரே. அவர் என்றும் உள்ளவர். என்றும் நித்தியமாய் அகத்தில் இருப்பவர். எல்லாருமாகத் தோன்றுபவர்; மறைபவர்; இவை எல்லா வற்றையும் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர்தான் செய்கிருர்.

அருட்பெருஞ்ஜோதி, வள்ளலார் வடிவத்துக்குள் வந்து இருப்பதும் அருட்பெருஞ்ஜோதியின் செயல்தான்.

அருட்பெரும்ஜோதிக் கடவுள், இராமலிங்கராக மாறி விடவில்லை. அவர்தம் அருட்பெருஞ்ஜோதி நிலையில் இருந்து வேறுபட்டு விடவும் இல்லை! அவர் எப்போதும் போல அருட்பெருஞ்ஜோதியாகவே இருக்கிறார். தன் முழு இயல் போடும். அருட் பிரகாசத்துடனும் வள்ளலாருக்குள் விளங்கு கிறார். வள்ளலார் வடிவத்தில் தம் இயலும் செயலும் என்றும் விளங்கும்படிச் செய்துகொண்டிருக்கிறார்.

இப்போது ஏற்பட்டுள்ள சிறப்பு என்ன? அருட்பெருஞ் ஜோதிக் கடவுள் இதுவரை இவ்வாறு யாரிடமும் வெளிப் பட்டுத் தோன்றியதில்லை. இப்போது அருட்பிரகாச வடிவுக்குள் தோன்றி இருக்கிறார். இந்தச் சிறப்புத் தோற்றத்தால் கடவுளை யாரும் எளிதில் உணர்ந்து மகிழலாம்.

வள்ளலாரின் வடிவில் இருக்கும் கடவுள், தம் அருளாற்ற லால் மரணமிலாப் பெருவாழ்வை மக்களுக்கும் வழங்க இருக்கிறார். இதுதான் வள்ளலார் அருளாட்சியின் பெருமை.

அருட்பெருஞ்ஜோதிக் கடவுள் வள்ளலார் வடிவில் தம் முழுத்தன்மையுடன் சுத்த சன்மார்க்க ஆட்சி புரியத் தொடங்கியிருக்கிறார். இது உலகம் காணாத புதிய அருள் புரட்சியாகும். அருளாட்சியின் தோற்றமாகும்.

புதிய அருளாட்சி நித்தியப் பரம்பொருளின் ஒரு தீவிரத் தோற்றம்தான். இதில் ஆள் மாற்றமோ, தலைமைத் தான மாற்றமோ, பட்டம் பதவி மாற்றமோ இல்லை.

அருள்ஆட்சியில் புது வாழ்வு:

ஜோதி வழிபாட்டு முறை உலகில் தொன்றுதொட்டே இருந்து வருகிறது. மக்கள் சூரியனை வழிபட்டு ஓரளவு நலம் பெற்று வந்து இருக்கிறார்கள்.

ஞாயிறு வழிபாட்டில் இருந்து மக்கள் தீப வழிபாட் டுக்கு வந்தார்கள். இது அவர்கள் வழிபாட்டில் ஒரு படி

ஏற்றம். தீப வழிபாட்டில் அவர்களுக்கு மன ஓர்மையும், தூய்மையும் ஏற்பட்டன.

தீப வழிபாட்டிலிருந்து ஆன்மஜோதி வழிபாட்டிற்கு வந்தார்கள். ஆன்ம ஜோதியை, இதயத்தின் நடுவே கண்டு வழிபட ஆரம்பித்தார்கள். அவர்களுக்கு, உள் உணர்வும், மன ஒருமையும் வளர ஆரம்பித்தன. இதனுல் தங்கள் உயிரின் ஆற்றலேயும், உடம்பின் ஆற்றலேயும் ஓரளவு பெருக்கிக் கொண்டார்கள். இதய ஆன்மஜோதி வழிபாடு ஆன்ம வளர்ச்சியின் ஒரு நிலே.

கடவுள் ஆன்ம ஜோதி, தம் சிரநடுவில் இருப்பதை உணர்ந்தார்கள். சிரநடுவில் இருக்கும் ஆன்மஜோதி வழிபாடு அவர்களுக்கு அற்புத ஆனந்த சக்தி சித்திகளேக் கொடுத்தது. இது அக அனுபவ நிலேயின் வளர்ச்சி.

காலச் சூழலில் சிறிது சிறிதாக படிப்படியாக ஆன்மிக ஜோதி வழிபாட்டில் வளர்ச்சி ஏற்பட்டு வந்தது.

புற வழிபாடு அவர்கள் உடல், பொறிகளுக்கு உயர்ந்த சக்திகளேக் கொடுத்தது.

மனம் முதலிய காரணங்களின் ஒருமை வழிபாடு அவர்கள் உயிரையும் உணர்வையும் பிரகாசிக்கச் செய்தது.

ஆன்மஜோதிவழிபாடு,அவர்களுக்கு,அற்புத சக்திகளேயும் கொடுத்தது. இது மெய்ஞ்ஞான ஆட்சியின் சக்தி தான்.

ஆன்மஜோதி வழிபாடு ஞானயோக சித்து மார்க்கமாக உலகில் பரவி வளர்ந்தது.

உலகில் ஒருபுறம் அக ஆன்ம வழிபாட்டு மெய்ஞ்ஞானம் வளர்ந்தது. இன்னெருபுறம் நமக்கு வெளியில் இருக்கும் பொருள்களின் ஆற்றலேக்காணும் விஞ்ஞானமும் வளர்ந்தது. மனிதனின் அறிவு ஆட்சியால் சில பயன்கள் ஏற்பட்டன. இவை மக்களேப் புற வாழ்வில் அதிகமாக ஈடுபடுத்த உதவின.

விஞ்ஞான ஆட்சியில், புதிய புதிய கண்டுபிடிப்புகள் தோன்றின.இதற்கு ஏற்ப மக்களின் தேவைகளும் வளர ஆரம்

பித்தன. அவர்களின் தேவைகளைப் பூர்த்திசெய்வதில் விஞ்ஞானம் மேலும் மேலும் புதிய புதிய சக்திகளைக் கண்டு பிடித்துக்கொண்டே வந்தன; வருகின்றன.

இதனால் மக்கள் எவ்வளவு நன்மைகளை அடைந் தார்களோ அவ்வளவு தீமைகளையும் பெற்றார்கள். மக்கள் ஒருமையுடன் வாழ்வதற்குப் பதிலாக ஒருவரை ஒருவர் பகைத்துக்கொண்டு வாழ்கிறார்கள்.

விஞ்ஞானம், உலகில் அழிவை உண்டாக்கவே பயன் பட்டு வருகிறது.மக்களின் உடல் இச்சைகளைப் பெருக்கக்கூடிய வகையில்தான் விஞ்ஞானம் ஆட்சி செய்கிறது. விஞ்ஞான ஆட்சியில் மக்களுக்குப் பல நன்மைகளும் சௌகரியங்களும் ஏற்பட்டிருக்கின்றன என்பதிலும் சந்தேகமில்லை. இவை மட்டும் அவர்களுக்கு நிலைத்த பயனைக் கொடுக்கவில்லை.

மக்கள் உள்ளத்தில். தயவு பெருகவேண்டும் விருப்பு வெறுப்பு இல்லாமல் அவர்கள் பரோபகாரப் பணி செய்ய வேண்டும். இவ்வாறு அவர்கள் தங்கள் வாழ்க்கை முறையை அமைத்துக்கொள்ளவேண்டும்.

மெய்ஞ்ஞான வாழ்க்கையை மக்கள் கடைபிடிக்க வேண்டும். அப்போதுதான் விஞ்ஞான வாழ்க்கை அவர்களுக் குத் துணைசெய்யும். மெய்ஞ்ஞான உணர்வு இல்லாமல் வெறும் விஞ்ஞான வாழ்க்கையிலேயே ஈடுபடுவார்களானால், முடிவில் ஒருவரை ஒருவர் பகைத்து அழிந்து போகத்தான் நேரும்.

மக்கள் மெய்ஞ்ஞான வாழ்க்கையில் பற்றுக்கொண்டு வாழும்போதுதான் மெய்ஞ்ஞானமும் விஞ்ஞானமும் அருள் ஆற்றலோடு அவர்களைமகோன்னதவாழ்க்கைக்கு உயர்த்தும்.

மக்களின் மனத்தில் தயவையும் பரோபகாரச் சிந்தையையும் வளர்ப்பதற்காகவே அருட்பெருஞ்ஜோதி ஆண்டவர் தோன்றி இருக்கிறார். அருள் ஆட்சி செய்யத்தான் அருட்பெருஞ்ஜோதிக் கொடியை ஏற்றிப் பறக்கவிட்டிருக் கிறார். அருட்பெருஞ்ஜோதி மகாமந்திரம் உலகம் எங்கும் ஒலிக்க அருட்பிரகாச வடிவுடன் வந்திருக்கிறார்.

அருள் உணர்வுடைய மக்கள் எல்லாம் திருஅருட் பிரகாசரின் அருள் ஆட்சியில் பெருநலம் பெறுவார்கள்.

பழைய மெய்ஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட யோக சாதனை யில் உண்டான அதிசயப் பயன்களைவிட அதிகப் பயன்களை சன்மார்க்கத்தில் மூலம் பெறுவார்கள். மக்களுக்கு சுத்தமான இன்ப வாழ்வை அளிக்க அருளாட்சி தோன்றி இருக்கிறது.

விஞ்ஞானத்தின் ஆட்சியையும் நல்ல வழிகளில் செலுத்தி மக்கள் இனத்துக்கும் மற்ற உயிர்க்குலத்துக்கும் அமைதியும் ஆனந்தமும் நிறைந்த வாழ்வுக்கு வழிசெய்வதற்காகவே ஆட்சி தோன்றி இருக்கிறது. அருள் ஆட்சியில் மக்கள் அருள் இனம் நிலைத்த இன்ப வாழ்வை அடையப்போகிறது.

அருள் ஆட்சியின் பயனை மக்கள் இனம் அனுபவிக்க அது அருள் வழியை உவந்து ஏற்றுக்கொள்ள வேண்டும். உள் ஒளியில் ஒன்றி உணர்ந்து அருள் வாழ்வு வாழ வேண்டும்.

அருட்பெருஞ்ஜோதி தோன்றி எங்கும் நிரம்பி இருக் கிறது. இதை எல்லாரும் உணரவேண்டும். அருட்பெருஞ் ஜோதியின் ஒவ்வொரு சிறு பகுதியிலும், அதன் முழுமையான இயல்பும் இருக்கிறது.

அருட்பெருஞ் ஜோதியின் தன்மையை முழுமையாகப் பெற்ற ஒரு சிறுகூறுதான் ஆன்மச் சிற்றுரு. ஆதி முதல் நம் உள் நாமாய் ஆன்மச் சிற்றுரு இருந்து வருகிறது. நம்மிடம் இருக்கும் அருட்பெரும் ஜோதியை நம்முடைய உள் உணர் வால் உணர்ந்து அதனுடன் ஒன்றி அதுவாகவே விளங்கிக் கொண்டு இருப்போம்.

நம் உள்ளத்தில் இருக்கும் அருள் ஒளி நிலைதான் அருட் பெருஞ்ஜோதிக் கடவுள் உண்மையும், நமது உண்மையும், வள்ளலார் அக உண்மையுமாகும். இவற்றின் அடையாள மாகவும் வழிகாட்டியாகவும் இருப்பதுதான் சத்திய ஞான சபையுள் இருக்கும் அகண்ட தீபம். இதன் அருள் ஒளிதான் உலகம் எங்கும் பரவிஇருப்பது.

''உலகெலாம் பரவிட என்னுளத் திருந்தே
அலகிலா ஒளிசெய் அருட்பெருஞ் ஜோதி''

என்று வள்ளல் பெருமான் அகவலில் சொல்கிறுர்.

நம் சிரநடுவில்தான் சத்திய ஞான ஆலயம் இருக்கிறது. அதில் இருந்து ஆட்சி செய்யும் அருட்பெருஞ் ஜோதியை உணர்ந்து அதனுடன் ஒன்றி நிற்கப் பழக வேண்டும். இது நமது நிலையான வாழ்வுக்கு நிலைக்களம் அமைக்கும்.

நம்முடைய உள் ஒளியே நாம் என்ற உணர்வு, நம்மிடம் நிலைக்க வேண்டும். இந்த உள் ஒளி உணர்வு நம் உயிர்ச் சக்தியையும், உயிரையும், உடலையும் ஒன்றினுள் ஒன்ருக இணைத்து அதை நிலைபெறச் செய்துவிடும்.

உடலையும், உயிரையும், ஞான உணர்வையும் பலப்படுத்த, யோக சாதனு வாழ்வு ஓரளவு பயன்படலாம் இதனுல் நிலையான பெருநலம் ஏற்படாது.

நம் அகநிலையில் அருள் ஒளியை விசாரத்தால் உணர்ந்து கொள்ள வேண்டும். அதனுடன் பொருந்தி அதுவாக ஒன்ற வேண்டும். பின்னர் அனகமாகி தயவுப் பணியை மேற்கொள்ள வேண்டும். அப்போது நம் உள் ஒளி நம் உயிரையும், உடம்பையும் தன்மயமாக மாற்றிக்கொள்ளும். உயிரும் உடம்பும் உள் ஒளியுடன் ஒன்றியபோது அது நிலையான இன்பத்தைப் பெற்று நிலைபெற்றுவிடும்.

அருள் ஒளி வழிபாட்டு முறையும், அதன் பயனும் இது தான். ஒவ்வொருவர் அகத்தில் இருந்தும் அருள் ஒளியைப் பரவச் செய்வது திருவருளின் செயல்.

நாமே அருட்பெருஞ் ஜோதியாய் இருந்து கொண்டு, நமது எண்ணத்தாலும், சொல்லாலும், செயலாலும் அருட்பெருஞ் ஜோதியைப் பரவச் செய்வது நம் கடமை.

இது ஒளி நெறி வாழ்க்கை முறை. இதன்படி வாழ்ந்து வந்தால், அருட்பெரும் ஜோதியே நம்மில் நிரம்புவதோடு, மற்ற உயிர்களுக்கும் நம் மூலமாக உதவி செய்துவரும்.

அருளாட்சியை உலகில் பரவும் முறையும், பரப்பும் முறையும் இதுதான்.

பலவகையான ஆட்சி முறைகளால், உலகில் மக்கள் சமுதாயம் என்ன நன்மையை அடைந்திருக்கிறது? என்ன இன்பத்தைப்பெற்றிருக்கிறது? ஒன்றுமில்லை,

சிந்தித்துப் பார்த்தால் மக்கள் இனத்துக்கு மேலான எந்த நன்மையையும்உண்மையான இன்பத்தையும்,இன்றைய எந்த ஒரு ஆட்சி முறையாலும் கொடுக்கமுடியாது.

இப்போதைய ஆட்சி முறையை மாற்ற முடியுமா? அப்படியே மாற்றினுலும் அதனுல் நிலேயான நன்மை ஏற்படுமா? ஏற்படவே ஏற்படாது.

இப்போதைய ஆட்சி முறையைப் போலவேதான் சமயக் கட்டுப்பாடுகளும்.

ஆட்சி முறையைப் பற்றிக் கவலேப்படாமலும், சமயக் கட்டுப்பாடுகளேப் பொருட்படுத்தாமலும் நாம் சுத்த சன்மார்க்கத்தை மேற்கொள்ள வேண்டும். இதனுல் மனித குலத்துக்குப் பெரும் நன்மை ஏற்படும்.

அக ஒளியில் ஒன்றி இருந்து மக்களுக்கு தயவுச் செயல் மூலமாகக் கடமை ஆற்றவேண்டும்.

தயவுக்கு மாருன சூழ்நிலே ஏற்பட்டால் அதற்கு எதிர்ப்பு காட்டக் கூடாது. அமைதியாக ஒதுங்கி நின்று அந்தச் சூழ்நிலேமாற இறைவனேப் பிரார்த்திக்கவேண்டும்.

உள்ளத்தில் தயவு உணர்வும், ஆற்றலும்,பெருகப் பெருக ஆண்டவரின் தயவு வடிவான அருள் ஆட்சி ஏற்படும். அது உள்ளும்புறமும் நிரம்பி நின்று நமக்கு நிலேயான நன்மை களேக் கொடுக்கும்.

அருள் ஆட்சியால் உலகம் இன்ப நிலே பெறுவது திண்ணம். திருஅருளின் ஆணேப்படி சிறிது சிறிதாக ஒவ்வொரு காலத்தும் வெளியாகிக்கொண்டு இருந்த அருள் ஆட்சி இப்போது பூரணமாக வெளிப்பட முனேந்து இருக்கிறது.

எந்தக் காலத்திலும், எந்த ஆட்சியிலும் ஏற்படாத இன்பமான நல்ல வாழ்வு உலகுக்கு ஏற்படப் போகிறது. அந்த வாழ்வு ஏற்படுவது நிச்சயம் என்ருல் அது தாஞக ஏற்படட்டுமே, அதைப் பற்றி நாம் ஏன் கவலேப் படவேண்டும் என்று சும்மா இருக்கக் கூடாது, அப்படியிருந்தால், ஏமாந்து போய் விடுவோம்.

நாம் தயவும் ஒருமையுங்கொண்டு அனக வாழ்வில் பொருந்தி நன் முயற்சியில் ஈடுபடவேண்டும். அப்போது அகத்தில் இருந்த அருட்ஜோதி அனக நிறைவு கொள்ளும். அருள் ஆட்சி வரத்துணை செய்யும், அது நம்மை வாழ்விக்கும்.

வெறும் உடல் இன்பத்தையே பெரிதாக எண்ணி அதிலேயே உழன்று கொண்டிருப்போமானால், அருள் ஆட்சி நம்மிடமிருந்து தோன்றாது. தோன்றிய அருள் ஆட்சியைப் புரிந்துகொள்ளவும் முடியாது; அதைப் பயன்படுத்திக் கொள்ளவும் முடியாது.

ஓரளவு நமக்குத் தெரியும் கடவுள் உண்மைகூட மறந்து விடும்; மறைந்து போய்விடும். ஆகையால் அருள் ஆட்சி முறையை நாமே நம்மில் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அருள் ஆட்சி முறையை எப்படி ஏற்படுத்திக் கொள்வது?

நம் முன்னோர்கள் ''உபநயனம் பெற்றால்தான் நம்உள் இருக்கும் கடவுள் ஒளி விளங்கும். அதன் மூலமாகக் கடவுள் அனுபவம் பெற்று ஆனந்திக்கலாம்'' என்று சொல்லி வந்தார் கள். அவர்கள் பெற்ற உபநயனம் அவர்களை இன்பத்துடன் நிலைத்து இருக்க உதவவில்லை. காரணம் அது வெறும் சடங்கு முறையாகவே நின்றுவிட்டது.

அருளாட்சியிலும் ஒரு உபநயனம் உண்டு. இது நம் முன்னோர்கள் சொல்லிவந்த உபநயனம் போன்றதல்ல. இந்த உபநயன மேலான விளைவுகளைத் தருவது உபநயனம் என்று சொற்றொடரையே விரித்துப் பார்த்தால் அருள் ஆட்சியில் இருக்கின்ற உபநயனம் எது என்று தெரிந்துகொள்ளலாம்.

நயனம் என்றால் கண். உப என்பது இறைவனின் திருவருள். உப என்பதை உ+ப்+அ என்று பிரிக்கலாம். உ என்பது தமிழில் இரண்டு என்ற எண்ணைக் குறிக்கும். அ என்பது தமிழில் எட்டு என்ற எண்ணைக் காட்டும், எட்டை யும் இரண்டையும் சேர்த்தால் பத்து என்ற கூட்டுத்தொகை கிடைக்கும். பத்து என்ற எண் ஆன்மக் கடவுளைக் குறிக்கும். கடவுளின் சிற்றுருவான ஆன்மா கடவுள் ஜோதியாக நமது

சிரநடுவில் இருக்கிறது. அது ப என்ற எழுத்தின் வடிவத்துடன் இருக்கும் மெய்ஞ்ஞான பீடத்தில் இருக்கிறது.

உ என்ற எழுத்து உயிருக்குள் உயிராக இருக்கும் இறை அருளையும் ப என்ற எழுத்து இறைவன் இருக்கும் மெய்ஞ் ஞான பீடத்தையும் குறிக்கின்றன. உப என்பது இறைவனின் திருஅருளைக் குறிக்கும்.—

அக்கு, அட்சம், அட்சி எல்லாம் கண்ணைக் குறிக்கும் சொற்களாகும். இவற்றில் அட்சியின் இசைவை அதிகமாகச் சேர்த்து உபயோகித்து வருகிறோம்.

(மீனம்+அட்சி) மீனாட்சி, (காமம்+அட்சி) காமாட்சி, (விசாலம் + அட்சி) விசாலாட்சி, (வனஜம் + அட்சி) வனஜாட்சி என்று உபநயனம் என்ற அருள் கண்களின் சிறப்பை வைத்தே தெய்வங்களுக்குப் பெயர் வைத்தார்கள்.

நம் மெய்ஞான பீடத்தில் இருக்கும் கடவுட் ஜோதியே நமது அருட்கண்; உபநயனம். அருள் ஆட்சியில், உப, அருள் ஆகவும், நயனம், ஆட்சி ஆகவும்இருக்கிறது.

அருட் கண்ணைக் கொண்டு, தயவோடு எல்லாவற்றையும் பார்த்துத் தயவுப் பணி புரிந்து வாழ்வதால் அருள் ஆட்சியின் பயன் நம்மில் நிரம்பும்.

நமக்குள் இருக்கும் ஞான ஜோதிக் கண்ணே, அருள் ஒளிமயமானது, அருட்பெருஞ்ஜோதியே ஆவது.

வள்ளல் பெருமான் இறைவனின் திருஅருளையே கண்ணாகக் கொண்டிருக்கிறார். இதுதான் அருள் ஆட்சியின் சிறப்பைக்காட்டுகிறது. வள்ளல் பெருமான் தாம் பெற்ற அருள் ஆட்சி மூலமாக எல்லா உலகத்தையும், அதில் இருக்கும் எல்லாவற்றையும் காண்கிறார்.

அருள் ஆண்டவர் தம் கருணாகடாட்சத்தால் இந்தப் பெரிய பிரபஞ்சம் முழுவதையும் மட்டுமா பார்த்துக்கொண்டு இருக்கிறார் ? எல்லாவற்றையும் தோன்றவும், வாழவும், மறைந்திடவும், பக்குவம் பெறவும், முடிவில் நிறைவு பெறவும் செய்துகொண்டு இருக்கிறார்.

அருட்பெருஞ்ஜோதி 'ஆட்சி'யின் செயலே அருள் ஆட்சி.

அருள் ஆட்சி, ஒவ்வொருவர் அகமிருந்தும் ஒவ் வொன்றின் அகமிருந்தும்தான் நடத்தப்பட்டு வந்தது; இன்றும் நடந்து வருகிறது.

எல்லா உலகிலும் உள்ள எல்லாரும் நியதிப்படி இறைவனின் விதிச்சட்டபடி நடந்துகொண்டு இருக்கிறது.

இப்போது வள்ளலார் ஏற்றிருக்கும் அருள் ஆட்சியால் ஒரு அருட் புதுமை ஏற்பட்டிருக்கிறது. வடலூர் சத்திய ஞான சபையின் புதுமைக் காட்சியும், அதில் இருந்து எழுந்த அருட்பெருஞ்ஜோதியின் எழுச்சியும், மக்கள் அருட்பெருஞ் ஜோதி மகாமந்திரத்தை கோடி முறை ஓதி ஓதி உணர்ந்த போது எழுந்த நாதமும் ஜோதியாய் எங்கும் பரவத் தொடங்கி இருப்பதே இதற்கு ஒரு சான்ருகும்.

வடலூருக்கு வருவோர் எல்லாம் அருட்பெருஞ் ஜோதி தரிசனத்தால் இனி தெளிவு பெறுவர். அவர்கள் உள்ளத்தில் அன்பும், அறிவும் கூடிய அருள் உணர்ச்சி ஏற்படும். உலக வாழ்வில் உள்ள நல்லவைகளை ஏற்றுக் கொள்வார்கள். அருள் இன்ப வாழ்வை ஏற்று மகிழ்வார்கள்.

அகமிருந்து ஆண்ட ஆண்டவர் இப்பொழுது அருட் பிரகாச வடிவோடு அனகம் உற்று ஆள்கிருர். முன்னம் ஆண்டவராகவும், இப்போது ஆள்பவராகவும், இனிமேல் ஆளப்போகிறவராகவும் உரிமை பெற்று இருக்கிருர்.

அருட்பிரகாச வள்ளலின் அருள் ஆட்சி உலகம் எல் லாம் தழைத்து ஓங்கப்போகிறது. உலகில், பலவகை யிலும் தொல்லையும் அழிவும் உண்டாகக் காரணமாயிருந்த, இருக்கின்ற கருணையிலா ஆட்சி கடுகி ஒழியப் போகிறது. இதற்குத் திருவருள் ஆணை வந்துவிட்டது.

அருளாட்சியின் ஒளி எங்கும் பரவிஎல்லாருக்கும் இன்பம் அளிப்பதற்காகவே வடலூரில் அன்று சத்திய தருமச் சாலையை ஆரம்பித்தார் வள்ளலார். இதன் மூலமாக அருள் ஆட்சிப் புரட்சிக்கு வித்திட்டார், புது யுகத்துக்குக் காற் ேகாள் விழா நடத்தினுர்.

அருள் ஆட்சிக்கு வித்திட்ட அந்தப் புனித நாளை சாலை சகாப்த தினமாக ஆண்டு தோறும் கொண்டாடுகிறோம்.

ஆயிரத்து எண்ணூற்று அறுபத்தேழாம் ஆண்டு வைகாசித் திங்கள் பதினோராம் நாள் அருணோதயமான அருள் ஆட்சி அருட்பெருஞ்ஜோதிஞாயிறுகித் தன் ஜோதியைப் பரவவிட எத்தனை ஆண்டுகள் ஆகியிருக்கின்றன!

ஆம், நூற்றுப்பத்தாண்டுகள் கடந்து விட்டன. இது உலக வரலாற்றுக் காலக் கணக்கில் விநாடி நேரம்தான்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து ஏழாம் ஆண்டு சாலை சகாப்தம் ஆரம்பமாகி நூற்றுப்பதினோரு ஆண்டுகளுக்குப் பின்னால் வடலூரில் ஒரு அற்புதம் நடைபெற்றது.

நாடு முழுவதும் நூற்றுப் பதினோராவது சாலை சகாப்த ஆரம்ப நாளைக் கொண்டாடிய பின் ஆனி மாதப் பூசம் வந்தது. அந்தப் பூச நாளில் ஜூன் மாதம் பத்தொன்பதாம் தேதி அன்று அருட்பெருஞ்ஜோதி மகா மந்திரம் மக்களால் கோடி முறை ஓதி உணர்ந்து நிறைவு பெற்றது, அருட்பெருஞ்ஜோதி மகா மந்திர ஒலி நாத ஜோதியாய் வான வெளியில் பரவ சத்திய ஞான சபைப் பொற்கலசத்துக்குத் திருநீராட்டு விழா நடந்தது.

அன்று ஞாயிற்றுக் கிழமை. கீழ்வானில் ஞாயிறு உதயமாயிற்று. அதே வேளையில் ஞான சபைப் பொற்கலச ஜோதியைக் கற்பூர ஜோதியும், ககனரவியின் ஜோதியும் தழுவியது. இந்த ஜோதிக் காட்சியை லட்சக்கணக்கான மக்கள் வடலூர்ப் பெரு வெளியில் இருந்து பார்த்து மகிழ்ந்தார்கள். அந்தப் பெருவெளியில் கூடியிருந்த லட்சக்கணக்கான மக்களும் அருட்பெருஞ்ஜோதி மகா மந்திரத்தை உணர்ச்சிப் பெருக்குடன் ஒரே குரலில் ஒலித்தார்கள். அந்த மந்திர ஒலி அகன்ற வானவெளியில் எங்கும் மோதிப் பரவியது. இந்தக் காட்சி மறக்கமுடியாத திருஅருட்காட்சி.

அன்று முதல் அருட்பெருஞ் ஜோதி வெளியாகி, அதுவே அருட் செங்கோலாய் எங்கெங்கும் பரவத் தொடங்கி இருக்கிறது. அருள் ஆட்சியின் தொடக்க நிகழ்ச்சியே இதுதான்.

அன்று குறிப்பிட்ட வேளையில் ஞானசபையின் அருள் ஒளிக்காட்சி தோன்றிப் பரவத் தொடங்கியதைப் பார்த்தோம். அதை நமது அக ஞானசபையில் நிலைத்து விளங்கும்படிச் செய்வோம்.

நம் அகத்தில் இருந்துதான் அருட்பெருஞ் ஜோதியும் அதன் அருட் பேராட்சியும் எங்கும் என்றும் பரவ முடியும். திருஅருளால் இந்த அருள் ஆட்சி நமது அகத்தில் இருந்து எழுந்து பரவ ஆரம்பித்துவிட்டது.

இதை மக்கள் நன்கு அறிந்து தங்கள் புற வாழ்விலும் அருள் ஆட்சியை ஏற்றுக்கொண்டு வாழ முயலவேண்டும்.

வடலூர் சத்திய ஞானசபையும், அதன் அருள் பிரிவுகளான தருமச் சாலையும், சன்மார்க்க சங்கமும், சங்கம்சார் கலைக்கூடமும் அனுபவ நிலையமாகிய சித்திவளாகமும் உலகுக்குக் கடவுள் உண்மையை உணர்த்தும்படி அவற்றைச் சிறந்த முறையில் பராமரிக்க வேண்டும்.

உலகில் ஒரு சில மதத்தினர் தங்கள் சமய மத ஆட்சியைப் பரப்புவதற்கு எவ்வளவோ அரும்பாடுபடுகின்றனர். அதையே ஒரு,புண்ணியச் செயலாகவும் எண்ணி சேவை செய்து வருகின்றனர்.

நம் அருள் ஆட்சியோ, ஒரு குறிப்பிட்ட மக்களுக்கு மட்டும் இல்லாமல் மக்கள் சமுதாயம் முழுமைக்கும் அருள் இன்ப வாழ்வை அளிக்கக்கூடியது.

சன்மார்க்கிகள் இன்று முதலாவது மனித அபிமானத்தோடு எல்லா மக்களையும் நம்மவர்களாகப் பாவிக்க வேண்டும். அவர்களுக்குத் தயவுப் பணிசெய்து வரவேண்டும். அவர்கள் யாராக இருந்தாலும் எங்கு இருந்தாலும், எப்படியிருந்தாலும் அவர்கள் உள்ளத்தில் அருட்பெருஞ் ஜோதி இருக்கிறார் என்பதை உணர வேண்டும். அருட்பெருஞ் ஜோதியின் வடிவமான அந்த மக்களுடன் ஒன்றி அவர்களுடன் அன்போடு வாழவேண்டும், அவர்கள் இன்பம் அடையும் வகையில் அவர்களுக்கு உதவ வேண்டும்,

உலக மக்களுக்கு எல்லாம் அருட்பெருஞ் ஜோதி உண்மையை உணர்த்த வேண்டியது, நம் கடமை. தயவுடன் நாம் கடமை ஆற்றி வருவோம். ஆண்டவர் நமக்கு உள்ளி ருந்தும், புறமிருந்தும் நம்மை அருள் நெறிக்கு உரியவர்களாக ஆக்கி வாழ்விப்பார்.

இது வரை நடைபெற்று வந்தது அருள் ஆட்சியின் ஒரு சிறு கூறுதான். குறைபட்ட நிலையில் அருள் ஆட்சி இருந்த தால், அதன் அருட்செயல் போதிய அளவு உலகில் தோன்ற வில்லை. அதனால் உலகில் துன்பமும் அழிவுமே அதிகரித்துக் கொண்டிருந்தன.

இப்போது அருள் ஆட்சி முழுத் தோற்றத்தோடு, அருட் பிரகாச வடிவத்துடன் வந்து இருக்கிறது. உலகில் அருள் அற்புதப் பெருஞ் செயல்கள் தோன்றும்.

மக்கள் உள்ளமும் மாறும். அருள் ஒளியைத் தம்உள் காண்பார்கள். தங்கள் சொல்லிலும், செயலிலும், அருளின் ஒளி விளங்க வாழ்வார்கள்.

உலகில் இன்ப நல்வாழ்வு தழைத்துப் பரவும். முதலில் அருள் ஒளியின் செயல் வெளிப்பட்டுத் தோன்றியும் தோன்று மலும் இருக்கும். சிறிது சிறிதாக அங்குமிங்குமாக அருள் ஆட்சி நடைபெறும். நாளடைவில் வெளிப்படையாக உலகம் தெரிந்து மகிழும்படி அருள் ஆட்சி நடைபெறும்.

அப்போது குறைபாடு கொண்ட பழையனவெல்லாம் மறைந்துவிடும்; மறக்கப்பட்டுவிடும். இயற்கைச் சூழ்நிலை களில் உள்ள சக்திகளும், செயற்கையாக உண்டாக்கப்பட்ட புதிய சக்திகளும் எழுச்சி பெற்று புதுப் பொலிவோடு விளங்க எங்கும் அருள் உவகையோடு மக்கள் வாழ்வார்கள்.

இந்த உலகத்தில் மட்டும் இல்லாது எல்லா உலகங்களி லும் அருள் ஆட்சியின் இன்பம் நிரம்பும். அருளாட்சி பூரணத்துவம் பெற்றுத்துலங்கும்.

# முடிவுரை

நாம் வாழ்கிற இந்த உலகைப்பற்றியும், இதில் தோன்றி யுள்ள உயிர்களேயும் பொருள்களேயும், ஆற்றல்களேயும் பற்றியும் நமக்கு என்ன தெரியும்?

அவைகளேப் பற்றி மிக அற்பமாகவே தெரிந்து கொண்டு இருக்கிறோம். இயற்கை நிலேகள் மூலமாகவும், மற்றவர்கள் மூலமாகவும், இன்னும் பல சான்றுகள் மூலமாகவும், ஊகத்தின் மூலமாகவும் தெரிந்துகொண்டிருப்பதும் அற்பமே. தெரிந்துகொள்ள வேண்டியவையோ ஏராளம்.

இதுவரை அறியாதததை அறிந்துகொள்ளவும், ஐயம் திரிபு இன்றி உண்மையைச் சரியாகப் புரிந்துகொள்ளவும், இப்போது ஆண்டவர் அருள் நமக்குக் கிடைத்திருக்கிறது.

இறைவனின் அருளேக் கொண்டுதான், உலக உயிர்களின் உண்மையை அறியமுடியும், அடைவதற்கு அரிய, அறிவதற்கு அரிய அழியா இன்ப வாழ்வையும் அடைய முடியும்.

அருட்பெருஞ்ஜோதியின் அருள் ஆற்றல். இப்போது திருவருட்பிரகாச வள்ளலாரின் வடிவத்தில் இருக்கிறது.

ஜோதியே கடவுள். அது பழைய காலம் முதல் வளர்ந்து வந்திருக்கிறது. பல்வேறு தெய்வங்களாகவும் தோன்றி இருக்கிறது. கடவுள் உண்மை வெளியாகித் தெளிவடைந்த போது அருட்பெருஞ்ஜோதியாகி இருக்கிறது.

மாபெரும் பிரபஞ்சத்து உலக உயிர்களின் படைப்பின் நோக்கமே அவை மனித வடிவத்தில் நித்திய வாழ்வு பெறுவது தான். மனிதப் பிறவியின் குறிக்கோளும் இதுதான்.

மனிதன் தெய்வ உணர்வு பெற்றான். ஆலய வழிபாட்டு வழியில் சென்றான்.அதற்குச் சமய மதத் தலைவர்களும், ஆன்ம ஞான சித்தர்களும், மெய்ஞ்ஞான சிற்பிகளும் சாத்திரங் களையும், கோயில்களையும், தெய்வத் திருஉருவங்களையும் ஏராளமாக ஆக்கிக்கொடுத்து உதவினார்கள்.

கடவுள் ஒருவரே. அவருக்கு உரிய உண்மை ஆலயம் ஒவ்வொருவர் சிரநடுவில் இருக்கும் சிற்சபையே. இதைத் தான் வள்ளல் பெருமான் தம் இறை அனுபவத்தால் உணர்ந்து அதன் புற வடிவத்தை வடலூரில் ஞானசபையாக அமைத்துக் கொடுத்தார்.

இறை ஒளியும், அந்த ஒளியைச் சார்ந்து வாழும் முறை யையும் காட்ட எழுந்தது சத்திய ஞானசபை. ஜீவகாருண்ய ஒழுக்கத்துடனும், தயவு உணர்வுடனும் சத்விசாரத்துடன் வாழும் முறையே சுத்த சன்மார்க்கம்.

இந்த மார்க்கம் முன்னோர் மார்க்கங்களிலிருந்து வளர்ந்த மார்க்கம்தான். என்றாலும் இது மக்கள் எல்லாருக்கும் உரிய மார்க்கம். இந்த மார்க்கத்தில் வாழும் வாழ்வே நித்திய வாழ்வாகும்.

அகவாழ்வு அனகவாழ்வாக விரிகிறது. மரணமிலாப் பெருவாழ்வை அளிக்கிறது. இது வள்ளலார் அனுபவம்.

அனக நெறி உலகத்துக்குப் புதுமையும், பொதுமையும் சிறப்பும் அளிப்பது. இந்த நெறி அனுபவம் பெறுவதற்காக அருட்பெரும் ஜோதி உண்மை உதவுகிறது.

எல்லோருடைய லட்சியமும் நல்ல இன்ப வாழ்வை அடைவதுதான். அந்த வாழ்வின் லட்சியத்தை அடையும் முறைதான் சுத்த சன்மார்க்கம்.

இறைவன் அருட் பேராட்சி உலகத்தில் பரவத் தொடங்கி இருக்கிறது. இந்த உண்மை சத்திய ஞானசபைத் திருப்பணி நிறைவுவிழாவில் விளங்கியது. அருட்பெருஞ் ஜோதி மகாமந்திரம் கோடி முறை ஓதி ஓதி உணர்ந்தவுடன்

ஜோதிக் காட்சி, மகா மந்திர ஒலியோடு வடலூர்ப் பெரு வெளியில் தோன்றியது.

அகத்தே நிலேத்து, காற்குளமாகிய பூசநாள் காட்சியாக, ஜோதிக் காட்சி நிலவத் தொடங்கியது.

தங்கள் அகஞான சபையில் அருட்பெருஞ்ஜோதியை எல்லாரும் காணவேண்டும். அதனுடன் ஒன்றி, தயவு வாழ்வில் வாழவேண்டும். அதற்கு உரிய நெறி ஒளிநெறி.

''அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ்ஜோதி! தனிப் பெருங்கருணே! அருட்பெருஞ்ஜோதி!'' என்ற மகாமந்திரத் தின் உண்மையை உணர்த்தும் நெறியும் ஒளிநெறிதான்.

அருட்பெருஞ் ஜோதியே அனுபவத்தின் பொருட்டு தயா பெருஞ்ஜோதி என்று ஆனது. முடிவில் அது சுருங்கித் 'தயவு' என்று இருக்கிறது.

தயவு என்பதை ஆங்கிலத்தில் DAEIOU என்றே எழுத வேண்டும். இந்த ஆங்கிலச் சொற்களின் கூட்டே கடவுளின் ஐம்பெரும் சக்திகளே உணர்த்துகிறது. எனவே தயவும் கடவுளும் ஒன்றுதான். எல்லாம் தயவு மயம்தான்.

உலக மக்கள் சத்திய ஞானசபை வழியில் அருட்பெருஞ் ஜோதியைக் காணவேண்டும். தயவுடனும் வாழவேண்டும். அப்போதுதான் அவருக்கு அருட்பேர் ஆட்சியின் எல்லா நலமும் வளமும் கிடைக்கும்.

அருட்பெருஞ்ஜோதி ஆண்டவரே, தயவு வடிவான வள்ளல் பெருமான். அவர் அருட்பிரகாச அனகத் திருமேனி யோடு, சுத்த சன்மார்க்க அருளாட்சியை உலகில் பரப்பத் தொடங்கி இருக்கிருர். இதனல் ஒளி நெறியின் உண்மையை உலகம் உணரப்போகிறது. உலகின் ஒளிநெறி வளரப் போகிறது. மக்கள் இன்பம் பெற்று உய்யப் போகிருர்கள்.

''வரமளிக்க நம்முடைய வள்ளல்வரு கின்ருர்
மண்ணுடம்பைப் பொன்னுடம்பாய் ஆக்கவருகின்ருர்
சிரநடுவாம் காற்குளத்தே திகழுநம துருவில்
சேர்கின்ருர் நமதுகுரு ரவிமதியுங் கொண்டே



உரனளிக்க வுளத்தெழுநம் உடையவனே அடைய
ஒருமையொடு தயவுகொண்டு ஓடிவரு வீரேல்
கரமளித்து மேற்றூக்கி கலியுடம்பை மாற்றி
கழிவில்லாக் கனகமய கவினுருவாக் குவரே!

உலகுயிர்கள் வாழ்வடைய வுளம்வைத்த நமது
ஒப்பில்லாத் தயாவள்ளல் உண்ணின்று இயக்கி
நிலவிடச்செய் யுண்மையினேக் கண்டுதய வாலே
நிலவாழ்வு நடத்தாது நிட்டைவழி பாட்டால்
செலவழித்த காலமெலாம் தெருவழியே போக
திருவருளால் வெளிப்பட்டுத் தன்னுண்மை தெருட்ட
அலகிலருட் பெருஞ்ஜோதி ஆண்டவர் இன்று உற்ருர்
ஆதலினுல் அருள்நெறியே ஓங்கி வளர்ந்திடுமே!

(தயா பாக்கள்)

அருட்பெருஞ்ஜோதி! அருட்பெருஞ் ஜோதி!
தனிப்பெருங் கருணே! அருட்பெருஞ் ஜோதி!

**தயவு**